# நாம் அறிந்த காந்திஜி

**யு. ஆர். ராவ்**



பப்ளிகேஷன்ஸ் டிவிஷன்
தகவல் ஒலிபரப்பு அமைச்சகம்
இந்திய சர்க்கார்

பால்குன 1891 (மார்ச் 1970)
**March 1970 ( Phalguna 1891 )**

Not for Sale

விற்பனைக்கு அல்ல

**Let Us Know Gandhiji (Tamil)**

நாம் அறிந்த காந்திஜி



***Published by the Director, Publications Division, Patiala House, New Delhi-1 and Printed at H. B. Packwel Inds., Khajur Road, Delhi-5***

# பொருளடக்கம்

பக்கம்

மகாத்மா காந்தியின் நூருவது ஜன்மதின
வைபவத்தையொட்டிப் பிரசுரிக்கப்பட்டது.



# காந்தி என்பவர் யார்—அறிமுகம்

மோஹன்தாஸ் கரம்சந்த் காந்தி என்பதே அவரது முழுப் பெயராகும். மோஹன்தாஸ் என்பது அவருடைய சொந்தப் பெயர்; கரம்சந்த் அவருடைய தகப்பனார் பெயர்; காந்தியெனும் உபநாமம் அவரது குலப் பெயராகும்.

இளம் பிராயத்தில் மனு, மோனியா, மோஹன்தாஸ் எனும் பலவேறு பெயர்களால் அவர் அழைக்கப்பட்டு வந்தார். தென்னாப்பிரிக்காவில் அவருடைய சகபாடிகளும், சகஊழியர்களும் தோழர்களும் அவரை "பாய்" அதாவது அண்ணா என்று அன்புடன் பெயரிட்டு அழைத்து வந்தார்கள். அவர் பின்னர் இந்தியா திரும்பிய பொழுது மக்கள் அவரை "மகாத்மா" என்ற சிறப்புப் பெயரால் அழைத்து வந்தனர். அதைத் தொடர்ந்து உலகம் நாளது வரை அவரை மகாத்மா காந்தி என்ற கௌரவப் பெயரினாலேயே அழைத்து வருகிறது. ஆனால் அவருடைய சபர்மதி ஆசிரமத்திலும், பிற்பட்டு சேவாகிராம் ஆசிரமத்திலும் பாலகர் முதல் வயது முதிர்ந்தவர்கள் வரையிலாக ஆசிரம வாசிகள் அனைவரும் அவரை பாபு—அண்ணல்—தந்தை என்றும் அவரது மனைவியார் கஸ்தூரிபாயை "பா"—அன்னை—என்றும் அழைத்து வந்தனர். அவருடைய அன்பு வட்டாரம் விரிவடைந்து அவருடைய சேவை நாடு முழுவதும் வியாபகம் பெற்ற பின்னர் மக்கள் அனைவரும் அவரை பாபு என்ற அன்புப் பெயராலேயே அழைத்து வந்தனர்.

இப்பொழுது சௌராஷ்டிரம் என்ற பெயரில் அறியப்பட்டு வருகிற முன்னாள் கத்தியவாட் பகுதியைச் சேர்ந்த போர்பந்தர் நகரத்தில் நூறு ஆண்டுகளுக்கு முன்னர் 1869 அக்டோபர் 2-ந் தேதியன்று பாபு பிறந்தார்; அவருடைய தகப்பனாரும், அவருக்கு முன்னதாக தகப்பனாரின் தகப்பனாரும் அங்கு திவான் பதவியை வகித்து வந்தனர். மோஹன்தாஸின் இளம்பிராயம் குறிப்பிடத்தக்க சம்பவம் எதுவும் இன்றி இருந்தது. படிப்புகளிலும் கூட அவர் சுமாராகத்தான் இருந்து வந்தார். இரண்டொரு சமயங்களில் கெட்ட சகவாசங் காரணமாக கெட்ட பழக்கங்கள் அவருக்கு ஏற்பட்டு பலமுறை தவறான காரியங்களில் ஈடுபட்டும் வந்தார். ஆனால் தமது தவற்றைச் சீக்கிரம் உணர்ந்து அதை பகிரங்கமாக ஒப்புக்கொண்டதுடன், தம்மைத் திருத்திக் கொள்ளவும் அவர் முற்பட்டார். வாழ்க்கையின் ஆரம்ப காலத்திலேயே வாய்மை, நேர்மை ஆகியவற்றின் மதிப்பு, கடவுள் நம்பிக்கை, மதங்கள் அனைத்துக்கும் மதிப்பளிப்பது ஆகிய உணர்ச்சிகள் அவருடைய மனதில் ஆழப் பதிந்திருந்தன. பதிமூன்றாவது வயதில் அவர் கஸ்தூரிபாயைத் திருமணம் புரிந்து கொண்டார்.

மெட்ரிகுலேஷன் படிப்பை 1888-ம் ஆண்டில் முடித்துக் கொண்டு சட்டக் கல்வி பயிலுவதற்காக இங்கிலாந்து சென்றார். அங்கு எளிய வாழ்க்கையை மேற்கொண்டு கஷ்டப்பட்டுப் படித்து முதலில் லண்டன் மெட்ரிக் பரீட்சையிலும் பிற்பட்டு 1891-ம் ஆண்டில் சட்டப் பரீட்சையிலும் தேர்ச்சி பெற்றார்.

நாடு திரும்பிய பின்னர் பம்பாயிலும் ராஜ்கோட்டிலும் வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டு போதிய

சம்பாத்தியமின்றி கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். பின்னர் தொழில் முறையில் அலுவல் மேற்கொள்வதற்காக 1893-ம் ஆண்டில் தென்னுப்பிரிக்கா சென்ருர். அங்கு தமது அலுவல் முடிந்த பிறகுங்கூட அவர் நாடு திரும்பவில்லை. தென்னுப்பிரிக்காவில் குடியமர்ந்த இந்தியர்கள் கூலிகளாக பாவிக்கப்பட்டு வந்ததையும், அந்நாட்டின் கடுமையான இனப் பாகுபாட்டுச் சட்டங்களுக்கு உள்ளாகி அவர்கள் அல்லல் பட்டு வந்தையும் அவர் கண்டார். அந்தச் சட்டங்களுக்குக் கீழ்ப்படிய மறுத்து எதிர்த்து நிற்பதற்காக அறநெறிப் போராட்டமொன்றை (சத்தியாக்கிரகம்) மேற்கொண்டு அங்குள்ள இந்தியர்களுக்குத் தலைமைதாங்கி நின்ருர். அவர் 1896—1901-2 ஆண்டு காலங்களில் இந்தியாவுக்கு இருமுறை குறுகிய காலங்களுக்கு விஜயம் செய்தது. 1906-1909 ஆண்டு காலத்தில் பிரிட்டனுக்கு இருமுறை விஜயம் செய்தது நீங்கலாக, கிட்டத்தட்ட 21 ஆண்டுகாலம் தென்னுப்பிரிக்காவிலேயே வாழ்ந்து வந்தார். அங்கு அவர் இந்தியர்களின் போராட்டங்களுக்குத் தலைமை தாங்கி அவற்றை நடத்தி வந்ததுடன் தமது நாட்டினருக்கு ஓரளவு நிவாரணம் கிடைப்பதற்கும் வழி செய்தார்.

பிற்பட்டு 1915-ம் ஆண்டில் அவர் தமது குடும்பத்துடன் இந்தியா திரும்பினுர். முதலில் கோச்ராப் என்னுமிடத்திலும், பிற்பட்டு சபர்மதியிலும் அவர் வசித்து வந்தார். அதையடுத்த ஆண்டுகளில் அவர் தமது நாட்டு மக்களின் பிரச்சினைகளில் தீவிர கவனம் செலுத்தி வந்தார்.

ஏழை மக்களிடமும், நசுக்குண்ட நிலையில் உள்ள மக்களிடமும் அவர் அக்கறை காட்டி வந்ததுடன் நாட்டின் பல பகுதிகளில் மக்களுக்கு நியாயம் தேடித்

தருவதிலும் ஈடுபட்டு வந்தார். பீஹாரைச் சேர்ந்த சம்பரான் ஜில்லாவில் ஐரோப்பியத் தோட்ட முதலாளி கள் அங்குள்ள விவசாயிகளை எவ்வித ஊதியமுமின்றி அவுரி சாகுபடியை மேற்கொள்ளும்படியாக நிர்பந்தித்து வந்தபோதும், குஜராத்தைச் சேர்ந்த கெடா ஜில்லாவில் பஞ்சமும் வரட்சியும் தாண்டவமாடிய காலத்தில், அநீதி யான முறையில் ஏழை விவசாயிகளிடமிருந்து நில வருமான வரி வசூலிக்கப்பட்டபோதும், அகமதா பாத்தில் ஆலைத் தொழிலாளர்களுக்கு நியாயமான ஊதி யங்கள் வழங்க மறுக்கப்பட்ட போதும் அவர் போராட் டங்களை மேற்கொண்டு வெற்றியும் கண்டார். அநீதியும் அநியாயமும் இழைக்கப்பட்ட ஒவ்வொரு சந்தர்ப்பத்தி லும் அவற்றுக்கு எதிராக அவர் கையாண்ட முறை சத்தியாக்கிரகம் எனும் அறநெறிப் போராட்டமே யாகும். இப்போராட்ட முறையில் பிறர் சேவைக்காக தம்மைத் துன்பங்களில் ஆழ்த்திக் கொண்டு, அதன் மூலம் எதிராளிகளின் மனம் மாறுவதற்கு அவர் வகை செய்தார். ஒவ்வொரு முறையும், அம்முறை நல்ல பயன் அளித்தது.

நாட்டுக்கு விடுதலை தேடித் தருவதிலும்கூட அதே போன்று, அஹிம்சை மார்க்கத்தையும், சட்ட மறுப்பு நடவடிக்கைகளில் அறநெறிப் போராட்டத்தை யும் பாபு மேற்கொண்டு வந்தார். வெவ்வேறு சமயங் களில் போராட்ட முறை வெவ்வேறு அமைப்பிலாக இருந்தது. 1920—21-ம் ஆண்டுகளில் பிரிட்டிஷ் சர்க் காருக்கும், சர்க்கார் நிறுவனங்களுக்கும் எதிராக மேற் கொண்ட போராட்டம் ஒத்துழையாமை இயக்கமாக பரிணமித்தது; 1930—31-ம் ஆண்டு காலத்தில் உப்புச் சட்டங்களை மீறுவதற்கு சட்ட மறுப்பு இயக்கமாக— உப்புச் சத்தியாக்கிரகமாக அது மேற்கொள்ளப்பட்டது.

1940-41-ம் ஆண்டுகளில் போர் நடவடிக்கைகளுக்கு எதிராக தனி நபர் சத்தியாக்கிரகமாக மேற்கொள்ளப்பட்டது. 1942-ல் குவிட் இந்தியா (வெள்ளையனே வெளியேறு) போராட்டமாக அது மாறியது. 1942-ஆகஸ்ட் 9-ந் தேதியன்று பாபு கைதாகினர். அவ்வாறு அவர் கைதாகியிராவிட்டால் அதுவே நாடு முழுவதிலும் இறுதிப்போராட்டமாக, அதாவது நாட்டிலிருந்து பிரிட்டிஷ் ஆட்சியை வெளியேற்றுவதற்கான "செய் அல்லது மடி" என்ற அஹிம்சைப் போராட்டமாக-மாறியிருக்கும்.

சிறைவாசம் அனுபவித்து வராத காலங்களிலும் மற்றும் சத்தியாக்கிர இயக்கங்களில் தீவிரமாக ஈடுபட்டு வராத காலங்களிலும் பாபு, நாட்டின் புனரமைப்புக்காக புனருத்தாரன வேலைத் திட்டங்களில் இடையறாது ஈடுபட்டு வந்தார். இவ்வேலைத் திட்டத்தில் முக்கியமான பல வேலைநடவடிக்கைகள் அடங்கியிருந்தன. சுதேசி இயக்கம் (நாட்டுப் பொருள்களின் உபயோகத்துக்கான இயக்கம்) தீண்டாமை ஒழிப்பு, ஹரிஜனமக்களின் மேம்பாடு போன்ற சீர்திருத்த இயக்கங்களும், சமூகங்களுக்கு இடையே நல்லிணக்க உணர்ச்சியை வளர்ப்பதற்காகப் பாடுபடுவது, மதுவிலக்கு, ஆதாரக்கல்வி, கிராமத்தொழில்களின் புனரமைப்பு, கிராம சுயராஜ்யம் ஆகிய வேலைத்திட்டங்களும் அதில் பிரதான இடம் பெற்றிருந்தன. இத்திட்டங்கள் அனைத்தின் முழுமையான குறிக்கோள், பாபு கனவு கண்டுவந்த வருங்கால இந்தியாவுக்கு—பூரண சுயாட்சி பெற்ற இந்தியாவுக்கு—வகை செய்வதற்கான லட்சியமாகும். இவ்வெல்லா விடுதலை இயக்கங்களிலும் ஆக்க நடவடிக்கைகளிலும் பாபு நாட்டின் பெருந்தலைவர்கள் பலரின் தீவிர ஒத்துழைப்பைப் பெற்றதுடன், பல்லாயிரக்கணக்கான மக்களின் ஒத்துழைப்பையும் பெற்றுவந்தார். மக்களில் பலர் பாபுவினுல் உந்தப்

பட்டு, உத்வேகம் பெற்று வரலாறு முன்பின் காணாத அளவுக்கு வீரச் செயல்களையும் தியாகச் செயல்களையும் புரிந்தனர். ஆயிரக்கணக்கான மக்கள் போலீஸாரால் குண்டாந்தடிப் பிரயோகங்களுக்கும், துப்பாக்கிப்பிரயோகங்களுக்கும் உள்ளாயினர். அஞ்சா நெஞ்சத்துடன் அவற்றை எதிர்த்து நின்றதில் பலர் கைகால்களை இழந்தனர், வேறுபலர் உயிரையும்கூட இழக்க நேரிட்டது. மக்கள் மீண்டும் மீண்டும் சிறைவாசம் எய்தி பலவகைகளில் சொல்லொணுத் துன்பங்களுக்கும், கண்யக் குறைவுகளுக்கும் உள்ளாயினர். உலக வரலாறு, பல விடுதலைப் போராட்டங்களைக் கண்டிருக்கிறது. ஆனால் அந்நிய ஆட்சியின் கீழ் நசுக்குண்ட மக்கள் அறநெறிப் போராட்டத்தை மேற்கொண்டு, தங்களை அடிமைப் படுத்தியவர்களுக்குத் துன்பம் விளைவிக்காதும், பலாத்காரத்தில் ஈடுபடாதும் தங்களையே துன்பத்தில் ஆழ்த்திக் கொண்ட இத்தகையதொரு போராட்டத்தை உலகில் எங்கும் எப்பொழுதும் கண்டதில்லை. தனித்தன்மை உடைத்த இப்போராட்டம் அச்சம், வன்மம், ஹிம்ஸை ஏதும் இல்லாதிருந்தது, படைபலத்துக்கு எதிரான, ஆயுத பலத்துக்கு எதிரான ஆன்மீகப் போராட்டமாக அது அமைந்தது. பாபு தமது மக்களுக்கு விடுதலை தேடித் தருவதில் ஈடுபட்டு வந்ததுடன் மட்டும் நிற்க வில்லை. அடிமைப்படுத்தப்பட்ட, கொடுமைப்படுத்தப்பட்ட மக்கள் அனைவருக்கும் இதேபோன்று விடுதலை தேடித்தரவும் அவர் விரும்பினர். புவி எங்கணும் மனிதர்கள் விடுதலை பெற்றும், சமத்துவத்துடனும், சோதர மனப்பான்மையுடனும் வாழ்ந்து வரவேண்டும் என்று அவர் விரும்பினர். வாழ்ந்தால் ''ஏக உலகம்'' ஒன்றில் வாழ வேண்டும் என்றும் அவர் கருதினர்.

மனிதன் அன்புத்தளை ஒன்றினுல் தான் கட்டுண்டு இருக்கிருன் என்பதலும், காட்டுமுறையிலான அல்லது ஈவு இரக்கமற்ற, மூர்க்கத்தனமான சட்டத்தினுல் கட்டுண்டு இருக்கவில்லை என்பதிலும், அன்புணர்ச்சியே இறுதியில் பகையுணர்ச்சியை வெல்லும் என்பதிலும் பாபு அசையாததொரு ஆழ்ந்த நம்பிக்கையைக் கொண்டிருந்தார். இவ்வுண்மை புதியதொன்றல்லவென்றும், மலைகளைப்போன்று தொன்மை படைத்த தென்றும் அவர் கூறுவார். இவ்வுண்மை ஒவ்வொரு மதத்திலும் அடங்கியிருக்கிறது. உலகவரலாற்றில் இடம்பெற்றுள்ள தீர்க்கதரிசிகள் ஒவ்வொருவரும் இவ்வுண்மையைத்தான் மக்களுக்கு உபதேசித்து வந்திருக்கின்றனர். புத்தரும், இயேசு கிறிஸ்துவும், தங்களது வாழ்க்கையின் மூலம் இவ்வுண்மையைச் சிறந்த வகையிலாக உலகுக்குப் புலப்படுத்தியுள்ளனர்.

ஆனுல் உலகம் இவ்வுண்மைக்குச் செவி சாய்க்கவில்லை. அதைப் புறக்கணித்து, பெரும் ஆபத்துக்களில் சிக்கி வந்திருக்கிறது. அன்புணர்ச்சியில் நம்பிக்கை வைப்பதற்குப் பதிலாக, ராணுவ பலத்திலும், ஆயுத பலத்தின் மூலம் பிற மக்களை அடிமை கொள்வதற்காகவும் அவர்களை அழிப்பதற்காகவும் பலத்தைப் பெருக்கிக் கொள்வதிலும் அது பெரிதும் நம்பிக்கை வைத்துள்ளது.

இத்தகைய போக்கு மனித இனத்தை நிச்சயமான அழிவு நிலைக்கு அழைத்துச் செல்லும் என்பதை பாபு கண்டுணர்ந்தார். இரண்டு உலகமகா யுத்தங்களும், அவற்றுக்கான பெருஞ்செலவுகளும் அவை இறுதியில் வியர்த்தமாக முடிந்ததையும் நிதரிசனமாக நிரூபித்துள்ளன. அணுகுண்டுகளின் பிரயோகம் இவ்வுலகத்தில் மனித இனம் பூண்டோடு அழிந்துவிடக்கூடிய ஒரு

பேராபத்தை ஏற்படுத்துவதாக இருந்து வருகிறது. எனவே மனித குலம் சகல விதமான ஆயுத பலத்தையும் கைவிடவேண்டியது இன்று இன்றயமையாததாக உள்ளது. பாபு இறைவனது அருளில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர், கடவுளின் குழந்தைகளான மக்க ளுக்குச் சேவை செய்வதே, அவரைச் சிறந்த வழியில் வழிபடுவதாக இருக்கும் என்றும் அவர் கருதிவந்தார். மக்கள் என்பதில், தம் நாட்டு மக்களை மட்டிலுமின்றி, மனித சமுதாயம் முழுமையுமே அவ்வாறு அவர் கருதி வந்தார். தான் உலகம் முழுவதற்கும் சொந்தம் என் றும், அவர்கள் அனைவருக்கும் சேவை செய்வதே தமது விருப்பம் ஆகும் எனறும் அவர் கூறுவார். அக்குறிக் கோளுக்காக அவர் ஆயுள் முழுவதும் பாடுபட்டு வந் தார். மனிதர்கள் ஒருவருக்கொருவர் அன்புணர்ச்சியுட னும் சோதரர்களாகவும் வாழவகையறியும் பொருட்டு அவர் தம்முடைய உயிரையே அர்ப்பணித்தார். அதுவே மானிட சமுதாயத்துக்கு அவரது சிறப்பான அறிவுரை யாகவும் அமைந்தது.

இந்திய மக்களைப் பொருத்த மட்டில் ஜவஹர்லால் நேரு கூறியபடி "சுமார் அரை நூற்றுண்டு காலத்துக்கு நாட்டு மக்களுக்கு முறைப்படியாகப் பயிற்சியளித்து, சீரான ஒரு பாதையை உருவமைத்துக்கொடுத்து அவர் களுக்கு வழிகாட்டி நின்ற நாட்டின் தந்தை..... இந்தியா வின் தொன்மையான ஆன்மீக உணர்ச்சியை உள்ளீ டாகக்கொண்ட நமது விடுதலையின் சிற்பி, விடுதலை உணர்ச்சியின் ஜுவாலையை ஏந்தி நின்று நம்மைச் சுற்றி யுள்ள இருளைப் போக்கிப் பிரகாசத்தை ஏற்படுத்தி உள் ளார்.'' என்ற வாக்கியத்துக்கு உருவகமாகவே பாபு மக் கள் மனதில் என்றென்றும் அமைந்திருப்பார். நாட்டின் தந்தை, தான் நம்பிக்கை வைத்துவந்த உண்மைக்கும்

பலிதானம் அளிக்கும் வகையில் 1948-ஜனவரி 30-ந் தேதி யன்று மறைந்த சமயத்தில் ஜவஹர்லால் நேரு கூறிய படி நம்மிடையே பிரகாசித்துவந்த ஜ்வாலை உண்மை யிலேயே நம்மைவிட்டு அகன்று சென்றுவிட்டது.

பாபு போன்ற மகா புருஷர்கள் பல யுகங்களுக்கு ஒருமுறைதான் உலகத்தில் அவதரிக்கின்றனர். வரலாற் றில் வேறு வீர புருஷர்களின் மறைவுக்கு துக்கம் அனுஷ் டித்தது போன்றே பாபுவின் மறைவின்போதும் உல கம் துக்கம் அனுஷ்டித்தது.

நம் நாட்டின் இன்றைய இளைஞர் தலைமுறை யினரைப் பொருத்தவரையில் அவர்கள் தங்கள் வாழ்க் கைக் காலத்தில் அண்ணலை ஒருபொழுதும் கண்ட தில்லை. பாபு அவர்களுக்கு எவ்வாறு தோற்றமளிக் கிறார், எவ்வுண்மைகளை நினைவுபடுத்தி அவர்களுக்கு எடுத்துணர்த்துகிறார்என்ற கேள்விகளுக்கு ஜவஹர்லால் முன்னொருமுறை பதில் அளித்திருக்கிறார். "பாபுவுடன் தொடர்பு கொள்ள வாய்ப்பு கிட்டாத இளம் தலைமுறை யினருக்கு அவர் ஒரு கர்ண பாரம்பரிய மகாபுருஷராகவே விளங்கி வருவார். அவருடைய பெயரில் அறியப்பட்டு வரும் சம்பவங்களும், அவருடைய செயல்களைச் சித்த ரித்து விவரிக்கும் பல கதைகளும் அவர்களுக்கு பாபுவை நன்கு எடுத்துணர்த்தும்.

இக்கதைகளின் வாயிலாகவே இக்காலத்து இளை ஞர்கள் பாபுவை அறிந்துணர்ந்துள்ளனர். பாபு பற்றி

மூதப்பட்டுள்ள பல வாழ்க்கை வரலாறுகள் வாயிலாக அவர்கள் அறியக்கூடியதைக் காட்டிலும், பின்னும் சிறப்பான வகையில் இக்கதைகள் அவரை நன்கு விளக்கும் என்று நம்புகிறேன்.

இச்சிறு புத்தகம் உண்மை சம்பவங்களையும், பாபுவின் வாழ்க்கை வரலாறு பற்றிய உண்மைக் கதைகளையும் அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப்பட்டுள்ளதாகும். இச்சம்பவங்கள் பல பாபு தாமே கூறியவையும். வேறு சில பாபுவை நன்கறிந்த பிறமக்களால் நினைவுபடுத்தி விரித்துரைக்கப் பட்டவையும் ஆகும். கதை விஷயங்கள் பல மூலங்களிலிருந்து திரட்டப்பட்டிருக்கின்றன. சம்பவங்களும், இளைஞர்கள் புரிந்துகொள்ளக்கூடியபடி எளிய முறையில், எளிய மொழியில் விவரிக்கப்பட்டுள்ளன. இந்தக்கதைகளைப் படித்த பின்னர் இளைஞர்கள் பாபு பற்றியும் அவரது வாழ்க்கை லட்சியம் பற்றியும் பின்னும் தெளிவாகவும் பின்னும் அர்த்தமளிக்கும் வகையிலும் அறிய வகை ஏற்பட்டால், இப்புத்தகத்தின் தயாரிப்பில் நான் மேற்கொண்ட உழைப்புக்குச்சிறந்த வகையில் எனக்கு பலன் கிட்டியதாகவே நான் கொள்வேன்.



# 1. பெற்றோர்களிடம் ஈடுபாடு

பெற்றோர்களிடம் பாபு கொண்டிருந்த ஈடுபாடும், அன்பும் மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். தமது வாழ்க்கையில் பிற்பட்டதொரு காலத்தில் அது பற்றிக் குறிப்பிடுகையில் "நான் என் வாழ்க்கையில் இப்பொழுது அனுபவித்துக் கொண்டிருக்கும் நற்பலன்கள் அனைத்தும் என் பெற்றோர்களைத் தெய்வமாக நான் போற்றி வந்ததன் வினைப்பயனேயாகும்". என்று கூறியிருக்கிறார். பாபுவின் இளம்பிராய அனுபவம் ஒன்று, அவர் தமது பெற்றோர்களிடம் நெருங்கிய ஈடுபாடும், அவர்களிடத்தில் பக்தி உணர்ச்சியும் கொள்ளுவதற்கு பெரிதும் காரணமாகயிருந்தது. "ஸ்ரவண பித்ரு பக்தி" என்ற நூலின் கதா பாத்திரமான ஸ்ரவணன் தன் பெற்றோர்களுக்கு ஆற்றிவந்த கடமை, மற்றுமவர்களிடம் அவன் கொண்டிருந்த ஆழ்ந்த ஈடுபாடு பற்றி மோஹன் படித்துணர்ந்தான்; அந்நூல் அவனை மிகவும் நெக்குருகச் செய்தது. தனது கிராமத்துக்கு ஒரு முறை வந்திருந்த படக்காட்சி வண்டியில். ஸ்ரவணன் ஏந்தானம் ஒன்றின் உதவியுடன் தனது பெற்றோர்களைத் தோளில் சுமந்து செல்லும் ஓவியம் ஒன்றைக் கண்டான்; அந்த ஓவியமும் அவன் படித்த நூலும் அவனது மனதில் ஒரு அழியாச் சித்திரத்தை பதித்துவிட்டுச் சென்றிருந்தன.



கதையில் வரும் ஸ்ரவணன் கவனத் தவறுதல் காரணமாக மன்னன் தசரதனின் அம்பு பாய்ந்து மாய்கிறான். தங்களுக்கு ஏக ஆதரவாக இருந்துவந்த ஒரே புத்திரனை அம்முதியவர்கள் இழக்கின்றனர். அவர்கள் வேதனைப்பட்டு அலறியது அப்புத்தகத்தில் பாடல் ரூபத்தில் கொடுக்கப்பட்டிருந்தது, பாபுவின் நினைவில் அழியாச் சித்திரமாகப் பதிந்திருந்தது. அந்த சோகம் நிறைந்த பாடலை தமது பால்ய பருவத்தில் அவர் இசைத்து வருவது வழக்கம்.

பல்லாண்டு காலம் கழித்து அச்சம்பவத்தை விவரிக்கையில் "நான் பெற்றிருப்பது அனைத்துக்கும் என் பெற்றோர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். ஸ்ரவணன் தன்னுடைய பெற்றோர்களிடம் கொண்டிருந்தது போன்ற அதே பாச உணர்ச்சியுடன் அவர்களிடம் நடந்து வரலானேன்" என்று பாபு கூறியுள்ளார்.

பாபு தனது பெற்றோர்களிடமிருந்து என்னென்ன கற்றுணர்ந்தார்? அவர்களைப் பற்றி அவர் என்ன நினைத்து வந்தார்?

காபா காந்தி உறுதிப்பாடும், நேர்மை உணர்ச்சியும் மிகுந்தவர்; பாபு அவரிடம் அதிகமாக உரையாடுவதில்லை. அவரைக் கண்டு ஒரு அச்ச உணர்ச்சி அவரிடம் மேலிட்டிருந்தது. ஆயினும், தன்னுடைய தகப்பனாரிடமும், அவரது நேர்மை உணர்ச்சியிலும் பாபு பூர்ண விசுவாசம் வைத்திருந்தார்.

கெட்ட சகவாசம் காரணமாக பாபு ஒருமுறை ரகசியமாக மாமிசம் உண்பதில் ஈடுபட்டார். இப்பழக்கத்துக்கு உள்ளாகியிருந்த தனது சகோதரருடன் சிற்சில சமயம் அவர் கலந்துகொண்டார். பெற்றோர்களை ஏமாற்றி அவர்களிடம் உண்மையை மறைப்பது, இரகசியமாக மாமிசம் உண்பதைவிட பெருத்த பாவம் என்பதை அவர் வெகு சீக்கிரம் உணர்ந்தார். எனவே அவர் அப்பழக்கத்தைக் கைவிட்டு விட்டார்.

அந்திம காலத்தில் தகப்பனார் நோய்வாய்ப்பட்டிருந்தபொழுது பாபு அவரை பேணிப்பராமரிப்பது வழக்கமாக இருந்து வந்தது. அவர் கால்களுக்கு எண்ணெ தடவி, அன்றாடம் பிடித்து விடுவார்.

எந்த ஒரு அலுவலையும், வரன்முறைப்படி செய்ய வேண்டும் என்பதை பாபு தனது தகப்பனாரிடமிருந்து கற்றறிந்தார். எந்த ஒரு விஷயம் சம்பந்தப்பட்ட அற்ப விவரங்களிலும்கூட அவர் துல்லிய கவனம் செலுத்தி வந்தார். மேலும், மிகச் சிறிய காரியமாக இருந்தாலும் அதைச் செவ்வனே செய்து முடிக்க வேண்டிய அவசியத்தையும் அவரிடமிருந்தே கற்றுணர்ந்தார். தனது தகப்பனாரின் சொந்த அனுபவங்களிலிருந்து, உயிருக்கு ஏற்படக்கூடிய ஆபத்தைக்கூடக் கருதாமல் அநியாயத்துக்கு எதிராகப் போராட வேண்டியதன் அசியம் பற்றியும் அவர் தெரிந்துணர்ந்தார்.

தனது தகப்பனாரிடம் பயமும், மரியாதை உணர்ச்சியும் கொண்டிருந்த பாபு, அதற்கு மாறாக தன் தாயாரிடம் பாச உணர்ச்சியையும், அவரைத் தெய்வமெனப் போற்றி வழிபடும் உணர்ச்சியையும் கொண்டிருந்தார்.

புத்திலிபாயின் ஆழ்ந்த மதப்பற்றும், இறைவனிடம் அவர்கொண்டிருந்த ஈடுபாடும், பாபுவின் மனதில் ஆழப் பதிந்திருந்தது. அவரது அன்னை தினந்தோறும் கோயில்களுக்குத் தவறாது சென்று வந்ததுடன், நோன்புகளையும், உபவாச தினங்களையும் தீவிர ஈடுபாடுடன் அனுஷ்டித்து வந்தார். அன்னையின் இப்பண்புகள் பாபுவின் மனதில் பதிந்து, அவருடைய வாழ்க்கையிலும் ஒரு அம்சமாக இடம் பெற்றுவிட்டதை, பாபுவின் வாழ்க்கை வரலாற்றுச் சம்பவங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.



மோஹன்தாஸ் தனது அன்னையிடம் பேரபிமானம் கொண்டிருந்தது காரணமாக, கண்மூடித்தனமாக அவளுக்குப் பணிந்துவந்தான் என்று கூறுவதற்கில்லை. சிற்சில சமயங்களில் அவளும் தவறுகளைப் புரிந்து வந்தாள். என்னதான் அன்னையிடம் பாசம் கொண்டிருந்தாலும் அவரால் அதைக் காணாதவாறு

இருக்க முடியவில்லை; இளம் வயதிலேயேயும்சரி, தனது தாயின் கட்டளையின் பேரில்கூட, அவர் தமது கொள்கைகளை விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை. ஒருமுறை தனது சகோதரனால் அடிக்கப்பட்டது பற்றியும் துன்புறுத்தப்பட்டது பற்றியும் அவர் தன்னுடைய அன்னையிடம் புகார் செய்தார். புத்லிபாய் அது கேட்டுக் கோபமுற்று மோஹன் நீ ஏன் திரும்பியடிக்கவில்லை என்று கேட்டாள். "பிறரொருவரை அடிக்கும்படி நீ எப்படி எனக்கு உபதேசிக்கலாம்? நான் ஏன் ஒருவரை அடிக்க வேண்டும்?'' என்று அவர் எதிர்த்துக் கேட்டதுடன், "அடிபட்டவனைத் திருப்பியடிக்கச் சொல்வதற்குப் பதிலாக, அவனை அடித்தவனை அவ்வாறு செய்யக்கூடாது என்று கூறவேண்டாமா?'' என்றும் தொடர்ந்து கேட்டார்.

இத்தகைய விவேகமான வாத அறிவு தனது மகனுக்கு எங்கிருந்து கிட்டியது என்று புத்லிபாய் ஆச்சரியத்தில் ஆழ்ந்தாள்.

மோஹன் சட்டக் கல்வி பயிலுவதற்காக இங்கிலாந்து செல்லத் தீர்மானித்தபொழுது புத்லிபாய் சஞ்சலத்துக்குள்ளாயினள். இங்கிலாந்தில் இளம் வயதினர் கெட்ட சகவாசங்களில் ஈடுபட்டு மது மாம்ச பழக்கத்துக்கு உள்ளாகிறார்கள் என்பது பற்றி அவள் கேள்விப்பட்டிருந்தாள். "இத்தனை தொலைவில் உள்ள பிரதேசத்துக்கு உன்னை நம்பி எவ்வாறு அனுப்ப முடியும்? எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. பிரமிப்பாகவே இருக்கிறது. பேசார்ஜி சுவாமியிடம் ஆலோசனை பெறுவோம் என்று அவள் கூறினள்.''

சுவாமிஜி, புத்லிபாயின் அச்சத்தைப்போக்கி மது, மாமிசம், மாது முதலியவை எவற்றையும் தீண்டுவ

தில்லை யென்று மோஹனிடம் சத்தியப்பிரமாணம் வாங்கிக்கொண்டார். இவ்வாறு பாபு சத்தியப் பிரமாணம் செய்து கொடுத்தது பிற்பட்டு இங்கிலாந்தில் அவரைத் துராசையிலிருந்து காப்பாற்றப் பெரிதும் எதுவாக இருந்தது.

"என் வாழ்க்கை தூய்மை வழுவாதிருந்து வந்ததற்குக் காரணம் என்னுடைய சொந்த வல்லமையல்ல, எழுத்தறிவற்ற எனது அன்னையின் மனோபலமே அதற்குக் காரணமாகும். அவள் தன் மகனிடம் பெற்ற சத்தியப் பிரமாணத்தின் மூலம், அவனை பேராபத்துக்களிலிருந்து காப்பாற்றினாள்," என்று பாபு பிரிதொரு காலத்தில் எழுதியிருந்தார்.

பாபு தம்முடைய சட்டக் கல்வியைப் பூர்த்தி செய்து இந்தியா திரும்புவதற்கு முன்னரே புத்லிபாய் காலமாகி விட்டாள். அது பற்றிய செய்தி இந்தியாவில் கரையிறங்கியபொழுதுதான் அவருக்கு முதல் முதலில் தெரியவந்தது. அச்செய்தி அவரது மனதைப் பெரிதும் சஞ்சலத்தில் ஆழ்த்தியது.

ஆழ்ந்த மதப்பற்றுணர்ச்சியைத்தவிர வேறு பல விஷயங்களையும் பாபு தனது அன்னையிடமிருந்து பெற்றிருந்தார்; ஒருவர் தன்னுடைய குழந்தைகளுக்கும் பிறர் குழந்தைகளுக்கும் இடையே வித்தியாசம் காட்டக் கூடாது என்பது அவற்றில் ஒன்றாகும். இத்தகைய பாரபட்சமற்ற உணர்ச்சியும், அனைவரையும் சரிசம

மாகப் பாவிக்கும் உணர்ச்சியும் பிற்பட்ட காலங்களில் பாபுவின் ஆசிரமங்களில் சமூக வாழ்க்கையின் ஒரு மிகச் சிறந்த அம்சமாக விளங்கியது.

"தான் நன்னெறி உணர்ச்சிகளையும் ஆன்மீகப் பண்புகளையும் நீடித்துப்பெற்று வந்ததற்கு, தனது பெற்றோரிடம், தான் கொண்டிருந்த ஈடுபாடும், கடமையுணர்ச்சியுமே காரணங்களாகும்.'' என்று பாபு குறிப்பிட்டிருக்கிறார். அந்த ஈடுபாடு அவருடைய பிற்கால அறிவு வளர்ச்சிக்கும் அஸ்திவாரமாக அமைந்திருந்தது என்றும் கூறவேண்டும்.



# 2. வாய்மை வழுவாமை

பாபுவுக்கு வாய்மை வழுவாமை இயற்கைப் பண்பாகவே அமைந்திருந்தது: எச்சந்தர்ப்பத்திலும், எதுவாயினும் வாய்மையை வழுவாது கடைப்பிடித்துவர வேண்டுமென்ற அவரது பேரவாவுக்கு, அவருடைய இளம்பிராய அனுபவமென்று மூலகாரணமாக இருந்தது. அவ்வனுபவம் அவருடைய உள்ளத்தில் அழியாச் சித்திரமொன்றையும் ஆழப்பதித்து விட்டிருந்தது

பாலகன் மோஹன் தனது ஊரில் ஒருசமயம் அரிச்சந்திரன் பற்றிய நாடகமொன்றைப் பார்க்கச் சென்றிருந்தான். அந்நாடகத்தில் அரிச்சந்திரனுகை வரும் சதாபத்திரம், உண்மையைக் கிஞ்சித்தும் வழுவாது கடைப்பிடிக்கும் முயற்சியில் பலவிதமான, மற்றும் சொல்லொணுத துன்பங்களுக்குள்ளானதை அவன் கண்ணுற்றுன். அரிச்சந்திரன் முதலில் தன் ராஜ்யத்தை இழக்கும்படி நேரிடுகிறது. பிறகு அவனது மனைவியும், மகனும் அடிமைகளாக விற்கப்படுகின்றனர். மகன் பாம்பு தீண்டி இறக்கிறுன். நாடகத்தின் உச்சகட்டத்தில் அரிச்சந்திரன், தனது மனைவிக்கு விதிக்கப்பட்ட மரண தண்டனையைத் தானே நிறைவேற்றும்படியாகவும் நேரிடுகிறது. எனினும் அவன் சற்றும் தயங்காமல் தன் கடமையை நிறைவேற்றுவதில் முனைகிறுன் அரிச்சந்திரனின் உண்மை தவருமையைப் பரீட்சிப்பதற்காக அவனை இத்தனை சோதனைகளுக்குட்படுத்திய விசுவா

பித்திர முனிவர், அப்போது பிரசன்னமாகி அவனைத் தடுத்து நிறுத்துகிறார். அரிச்சந்திரன் உண்மை தவறாதவன் என்பது நிரூபணமாகி "சத்திய சந்தன்" என்று அழைக்கப்படுகிறான். இறுதியாக அவன் தான் முன்பு இழந்த உடைமைகள் அனைத்தையும் மீண்டும் பெறுகிறான்.

உண்மையை வழுவாது கடைப்பிடிப்பதில் ஏற்பட்ட இன்னல்களையும், துன்பங்களையும் சகித்துக் கொள்வதில் அரிச்சந்திரன் காட்டிய தீரம் பாலகன் மோஹனை உருக்குலையச் செய்தது. அந்நாடகம் நீண்ட நாள் வரை அவன் நினைவில் அழியாது நின்றிருந்தது. அரிச்சந்திரன் கதை உண்மையில் நடைபெற்றதொன்றாகவே அவன் நம்பிவந்தான். அரிச்சந்திரனுக்கு ஏற்பட்ட சோதனைகளும், அவனுக்கு ஏற்பட்ட இடுக்கண்களும் நினைவுக்கு வரும்பொழுதெல்லாம் பாலகன் மோஹன் கண்களில் நீர் தளும்பும். அரிச்சந்திரனின் கதா பாத்திரத்தைப் பலமுறை நினைவில் கொண்டு வந்து நிறுத்தி அது பற்றிய சிந்தனையில் ஆழ்ந்து வந்தான்.

ஏன் ஒவ்வொருவரும் அரிச்சந்திரனைப் போன்று உண்மையைக் கடைப்பிடித்துவரக்கூடாது என்ற சிந்தனை மோஹனைப் பெரிதும் வாட்டியது. தானும் அவனைப் போன்று உண்மையை வழுவாது கடைப்பிடித்து வர வேண்டும், அவன் போன்று இன்னல்கள் அனைத்தையும் தீரத்துடன் ஏற்கவேண்டும் என்ற லட்சியம் இளம் மோஹனை ஆட்கொண்டது.

உண்மையை வழுவாது கடைப்பிடித்து வருவதில் பாபு எவ்வளவு தூரம் உறுதிப்பாடுடன் இருந்து வந்தார் என்பதை அவரது வரலாற்றில் அடங்கிய பல

சம்பவங்களிலிருந்து தெரிந்து கொள்ளலாம். "என் சேவைக்குரிய இறைவன் உண்மையேயாகும். உண்மையே கடவுளாகும்; என் ஈடுபாடு முழுவதும் உண்மையிலேதான் இருந்துவரும்; உண்மை ஒன்றுக்குத்தான் நான் கட்டுப்பட்டிருக்கிறேன்.'' என்பது அண்ணலின் அருள்வாக்காகும்.

உண்மையைத் தவறாது கடைப்பிடிக்கும் முயற்சியில், பாபுவும் கூட பல கஷ்ட நஷ்டங்களுக்குள்ளாக நேரிட்டது. அவர் தீவிர மனவேதனைக்கும், அரசியல் அடக்குமுறைகளுக்கும் உள்ளானார். அவர் பலவிதமான அசௌகரியங்களையும் கஷ்டங்களையும் அனுபவிக்க நேர்ந்தது. மற்றும் பல முறை அவர் சிறை தண்டனையையும்கூட ஏற்க நேரிட்டது. இத்தனை இன்னல்கள் நேரிட்ட பொழுதும் பாபு கிஞ்சித்தும் மனம் தளராது, உண்மையை வழுவாது கடைப்பிடிப்பதில் தீவிரமாக இருந்தார். இறுதியில் உண்மையே நிலைக்கும் என்று அவர் உறுதியாக நம்பிவந்ததே அதற்குக் காரணமாகும்.

உண்மையைத் தவறாது கடைப்பிடிப்பதில் பாபு காட்டி வந்த தீவிரத்தைப் பின்பற்றி நமது நாடும் கூட சத்தியமேவ ஜயதே (வாய்மையே வெல்லும்) என்பதையே தனது லட்சிய வாக்காக மேற்கொண்டிருக்கிறது.



# 3. அஹிம்சைத் தத்துவத்தின் முதலாவது பாடம்

மோஹன் பதினைந்து வயதாக இருக்கையில் இச்சம்பவம் ஏற்பட்டது. ரகசியமாக மாமிசம் சாப்பிட்டு வந்ததன் விளைவாக மோஹனுடைய மூத்த சகோதரன் கடன்பட நேர்ந்தது. காந்தி குடும்பத்தினர் ஆழ்ந்த மதப் பற்றுள்ள வைஷ்ணவர்கள். ஆதலால், மாமிசம் உண்பது என்பது அவர்கள் கனவிலும்கூட நினைக்க முடியாத ஒரு விஷயமாகும். சகோதரனுக்கு ஏற்பட்ட கடனை எவ்வாறு அடைப்பது என்பது பற்றி ஆலோசிக்க இருவரும் கூடினர். மோஹனுடைய சகோதரன் புஜத்தில் வங்கி போன்ற தங்கத்திலான அணிகலன் ஒன்றை அணிந்திருந்தான. அதிலிருந்து ஒரு துண்டை வெட்டியெடுத்து, அதை விற்று, எவருக்கும் தெரியாமல் கடனை அடைத்து விடுவது என்றும் தீர்மானிக்கப் பட்டது. அதே போன்று அது காரியாம்சத்திலும் நடத்தப்பட்டது. அவர்களுடைய பெற்றோர்களுக்கு நடந்தது எதுவும் தெரியாது. தான் ஒரு தவறான காரியத்தைப் புரிந்து விட்டதாக மோஹனின் மனது சஞ்சலத்தில் ஆழ்ந்தது. மீண்டும் அவ்வாறு திருட்டில் ஈடுபடுவதில்லை என்றும் அவன் தீர்மானித்தான்.

அன்று இரவு அணிகலனின் மேற்பகுதி காணமல் இருந்ததை பெற்றோர்கள் கவனித்தனர். அது பற்றிக் கேட்ட பொழுது இரு பையன்களும் தங்களுக்கு ஏதும் தெரியாது என்று கூறி விட்டனர். குழந்தைகளிடம்

ஆழ்ந்த விசுவாசம் வைத்திருந்த பெற்ரோர்களும் அதை உண்மை என்று நம்பி விஷயத்தை அத்துடன் விட்டு விட்டனர்.

மோஹன் அன்று இரவு தனது பாடங்களைப் படிப்பதில் ஈடுபட்டான். ஆனல் அவனது மனம் அதில் ஈடுபடாமல் சஞ்சலப்பட்டுக் கொண்டிருந்தது. அவ்வுணர்ச்சியை மேலும் தாங்க இயலாது உடனே தன் தாயாரிடம் சென்று ஒளிவு மறைவு இன்றி எல்லாவற்றையும் கூறி விட்டான். அவனிடம் ஆழ்ந்த அபிமானம் கொண்டிருந்த அவள், தன்னுடைய மகனின் தவறு பற்றிக் கேட்டறிய மிகவும் கவலையுற்ருள். உடனே தந்தையிடம் சென்று அனைத்தையும் கூறும்படி மகனுக்கு ஆலோசனை கூறினுள்.

மோஹன் அதற்கு உடன்பட்டுச் சென்ருன். ஆனல் தன்னுடைய தந்தையை நேருக்கு நேர் பார்த்துப் பேச அவனுக்கு தைரியம் வரவில்லை. அடிபடுவது பற்றி அவன் அஞ்சவில்லை. உண்மையில் அவனுடைய தகப்பனர் அவர்கள் எவரையும் என்றுமே அடித்ததில்லை. தான் புரிந்த தவருன காரியம் பற்றி அவர் அறிந்த உடனே அவருக்கு ஏற்படக்கூடிய வியாகூலம் பற்றித் தான் மோஹன் சிறிது அஞ்சினுன். அவனுடைய தகப்பனர் அவர்களிடம் எப்பொழுதும் பூரண நம்பிக்கை வைத்திருந்தார். அவர்கள் புரிந்த நம்பிக்கைத் துரோகம் பற்றிக் கேட்க அவர் மிகவும் வருந்துவார்; ஆழ்ந்த விசனமும் அடைவார். இந்த சிந்தனை மோஹனைப் பெரிதும் சஞ்சலத்தில் ஆழ்த்தியது. ஆனல் வேறு வழியில்லை. அவமான உணர்ச்சியும் குற்ற உணர்ச்சியும் மோஹனின் மனதைப் பெரிதும் வாட்டிக் கொண்டிருந்தது. தன்னுடைய தவறைப் பகிரங்கமாக ஒப்புக்

கொள்வதன் மூலமே அதிலிருந்து விடுபட முடியும் என்பதையும் அவன் உணர்ந்தான். தனது தவறை ஒப்புக் கொள்வதன் மூலமும், அப்பாவத்தை மீண்டும் புரிவதில்லை என்று உறுதியான தீர்மானம் மேற்கொள்வதன் மூலமும், புதிய துடைப்பம் ஒன்றைக்கொண்டு பெருக்குவது போன்று தனது மனதைச் சுத்தப்படுத்திக்கொள்ள முடியும் என்பதையும் அவன் உணர்ந்தான்.

எனவே மனே தைரியம் பெற்று தனது குற்றம் பற்றிய விவரங்களை ஒரு காகிதத்தில் எழுதினன். அதில் தன் குற்றத்தை ஒப்புக் கொண்டதுடன் அதற்குரிய தண்டனையை தனக்கு அளிக்குமாறும் அவன் கேட்டிருந்தான். மேலும் அத்தவறை மீண்டும் புரிவதில்லை என்றும் அதில் உறுதி மொழி கூறியிருந்தான்.

மோஹன் அந்தக் காகிதத்தை காபா காந்தியிடம் கொடுத்தான். அவர் நோய்வாய்ப்பட்டிருந்ததனல் ஒரு



பலகையின்மீது படுத்திருந்தார். அவர் நோயின் வலியினால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். ஆனால் அந்த அவதியைக் காட்டிலும் தன்னுடைய மகன் புரிந்த தவறு காரணமாக ஏற்பட்ட ஓரே மனோ வேதனை அவரைப் பின்னும் பெரிதும் வாட்டியது.

காகிதக் குறிப்பைத் தந்தையிடம் கொடுத்து விட்டு படுக்கையின்கீழ் மோஹன் உட்கார்ந்திருந்தான். சிறிது நடுக்கமும் அவனிடம் காணப்பட்டது. ஆனால் என்ன நேர்ந்தாலும் சரி என்ற உறுதியுடன் இருந்தான்.

காபா காந்தி நேர்மை உணர்ச்சி மிகுந்தவர். ஆதலால் தனது மகன் தவறான பாதைக்குப் பிறழ்ந்து சென்றது அவரைப் பெரிதும் அதிர்ச்சியடையச் செய்தது. ஆனால் அவர் கடுங்கோபம் கொள்ளவில்லை. மகனைத் திட்டவோ, கடிந்து கொள்ளவோகூட அவர் முயலவில்லை. அவருடைய முகம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது; கண்களில் நீர் வழிந்து கொண்டிருந்தது. பிற்பட்டுப் பல வருஷங்கள் கழித்து மோஹன் தன்னுடைய தகப்பனார் அச்சமயம் இருந்த நிலையை வரும் வாசகத்தில் விளக்கியிருந்தான். "அவருடைய கன்னங்களிலிருந்து வழிந்த நீர்த்துளிகள் கையிலிருந்த காகிதத்தை நனைத்தன. ஒரு கணம் கண்ணை மூடிச் சிந்தனையில் ஆழ்ந்தார். பின்னர் அந்தக் காகிதத்தை கிழித்தெறிந்து போட்டார். முதலில் அவர் குறிப்பைப் படிப்பதற்காக எழுந்து உட்கார்ந்தார். காகிதத்தைக் கிழித்துப் போட்டு விட்டு அவர் மீண்டும் படுக்கையில் ஆழ்ந்தார். நானும் கண்ணீர் விட்டுக் கதறினேன். எனது தகப்பனாரின் மனோவேதனையை நன்குணர்ந்தேன்; அவருடைய அந்த நீர்த்திவலைகள் அன்புத் துளிகளாக பரிணமித்து என்னுடைய இதயத்தைக்

கழுவின.'' மோஹன் உண்மையைத் தெரிவித்தது அவனுடைய தகப்பனாரின் கோபத்தைச் சாந்தப்படுத்தி அவருடைய மனதைப் பெரிதும் நெகிழச் செய்தது. அன்று முதல் "உண்மையையே பேசுவது'' மோஹனுக்கு உடம்போடு ஒட்டிய ஒரு இயல்பாகவே ஏற்பட்டு விட்டது. உள்ளார்ந்த பிராயச்சித்த உணர்ச்சி எவ்வாறு ஒருவரைச் சுத்திகரித்துத் தூய்மைப்படுத்துகிறது என்பதை அவன் நன்கு உணர்ந்தான். பின்னர் அச்சக்தியை அஹிம்ஸா ரூபத்தில் அவன் காணவிருந்தான். அத் தகைய அஹிம்சை உணர்ச்சி பரிபூரணமாக மாறும் பொழுது அது தொடும் அனைத்தையும் தூய்மைப் படுத்தி மாற்றி விடுகிறது. அது ஒரு வரையறையற்ற வலிமையுடைத்ததாகும் என்பதை அவன் உணர்ந்தான்.

இச்சம்பவம் மோஹனுக்கு அஹிம்சை தத்துவத் தின் முதலாவது பாடமாக அமைந்ததென்றே கூற வேண்டும்.



# 4. பாபுவின் நேர்மை உணர்ச்சி

ராஜ்கோட்டில் மோஹனது பள்ளியில் அன்றைய தினம் சோதனை நடப்பதாக இருந்தது. பள்ளி எவ்வாறு இயங்கி வருகிறது என்பதைக் காண்பதற்காக கல்வி இன்ஸ்பெக்டர் மி. கைல்ஸ் என்பவர் அப்பள்ளிக்கு விஜயம் செய்வதாக இருந்தது. பள்ளி மாணவர்கள் அனைவரும் நேர்த்தியாக வரும்படியும், அவர்களுடைய சிறந்த ஆடைகளை அணிந்து வரும்படியும் கேட்டுக் கொள்ளப்பட்டிருந்தார்கள். ஆசிரியர்களும், வயது வந்த மாணவர்களும் பள்ளிக்கு புதுப் பொலிவு கொடுப்பதற்காக முதல் நாள் மாலைவரை வெகுநேரம் வேலை செய்தனர். கரும்பலகைகள், மேஜைகள், அலமாரிகள் முதலியவை தூம்பு தூசியின்றி தட்டித் துடைத்து வைக்கப்பட்டிருந்தன.

கல்வி இன்ஸ்பெக்டர் வரும்போது மிகச் சிறந்த மாணவர்கள் அவர் கண்ணுக்குத் தெரியும்படியாக முதல்வரிசை பெஞ்சுகளில் அமர்த்தப்பட்டிருக்க வேண்டுமென்று உயர்தரப்பள்ளியின் தலைமை ஆசிரியர், வகுப்புகளின் ஆசிரியர்களுக்கு வலியுறுத்தியிருந்தார். ஆசிரியர்கள் பற்றியும் மாணவர்கள் பற்றியும் மி. கைல்ஸ் உயர்ந்த கருத்துகொள்ளும் வகையிலாக இருக்க வேண்டியது அவசியம் என்றும் அவர் தெரிவித்திருந்தார். பள்ளிக்கு அடுத்த ஆண்டு அனுமதிக்கப்படவிருக்கும் நிதி மானியத்தின் அளவு கல்வியிலாக்காவின் இன்ஸ்பெக்டர் அப்பள்ளிபற்றி சமர்ப்பிக்கும் அறிக்கையையே பெரிதும் பொறுத்திருக்கும் என்றும் ஆசிரியர்களுக்குத் தெரிவிக்கப்பட்டது.

மறுநாள் மி. கைல்ஸ் வந்து சேர்ந்தவுடன், தலைமை ஆசிரியர் அவருக்கு உரிய கௌரவம் அளித்து வரவேற்று, ஒன்றன்பின் ஒன்ருக வகுப்புகளுக்கு அவரை உடன் அழைத்துச் சென்ருர். கடைசியில் இன்ஸ்பெக்டர், மோஹனுடைய வகுப்புக்கு வந்துசேர்ந்தார். வகுப்பு ஆசிரியருடன் ஒரு சில நிமிஷங்கள் உரையாடிவிட்டு மாணவர்களின் எழுத்துக்கூட்டி வாசிக்கும் திறன் பற்றி அறிய சோதனை ஒன்றை நடத்தினர். ஐந்து ஆங்கில வார்த்தைகளைக்கூறி அவற்றை எழுதும்படியாக அவர்களிடம் சொன்னர். அதில் ஒரு வார்த்தை மோஹனுக்குச் சரியாக விளங்கவில்லை. ஆசிரியர் அவனுடைய கலக்கமுற்ற முகத்தைப் பார்த்து பின்னர் அவனுடைய கரும்பலகையை நோக்கியபோது அவ்வார்த்



தையை அவன் தப்பாக எழுதியிருந்ததைக் கண்டார். பக்கத்துப் பையனின் பலகையைப் பார்த்து காப்பிசெய்து சரியாக எழுதும்படி மோஹனுக்குத் தெரிவிக்கும் வகையில் அவன் காலை மிதித்துச்சைகை காட்டினர்.

தனது ஆசிரியர் தன்னை ஒரு நேர்மைக் குறைவான காரியத்தைச் செய்யக்கூறுகிறார் என்பது மோஹனுக்கு விளங்கவில்லை. மாணவர்கள் அவ்வாறு காப்பியடிக்காமல் பார்த்துக்கொள்வதற்காகவே அவர் அங்குள்ளார் என்பதுதான் அவனுக்குத் தெரிந்திருந்தது. எனவே பக்கத்துப் பையனைப் பார்த்துக்காப்பி அடிக்காமல், அவ் வார்த்தையை திருத்தாமல் தான் எழுதியபடியே விட்டு விட்டான்,

மற்ற எல்லாப் பையன்களும் வார்த்தைகள் அனைத்தையும் சரியாக எழுத்துக்கூட்டி எழுதியிருந்தனர். மோஹன் மட்டிலுமே அவ்வாறு செய்யவில்லை. ஏனெனில் மந்த புத்தியுள்ள அவன் காப்பியடிக்க மறுத்து விட்டதனுல் தவறு புரிந்திருந்தான்; இன்ஸ்பெக்டர் வகுப்பைவிட்டு வெளியே சென்றவுடன ஆசிரியர் மோஹன்மீது கோபமுற்று அவனுடைய தவறையும் அவனுடைய முட்டாள் தனத்தையும் சுட்டிக்காட்டினுர். அப்பொழுதும் மோஹனுக்கு ஒன்றும் விளங்கவில்லை; ஆசிரியர் தான் மற்றொரு பையனைப் பார்த்துக் காப்பி அடிப்பதை நிஜமாகவே விரும்பினுர் என்பதை அவன் சற்றும் உணரவில்லை. அந்த நேர்மையற்ற பழக்கம் அவனுக்கு பிடிபடாததொன்ருக இருந்தது. ஏனெனில் நேர்மையற்ற நடத்தை என்பது அவன் இயல்புக்கு விரோதமானதொன்ருக இருந்தது.

பிறிதொரு காலத்தில் நேர்மைப்பண்பின் சிறப்பு பற்றி பாபு விரித்துரைக்கையில் பொய்மை மூலமும், நேர்மைப் பிசகான வழியிலும், மோசடியான வழிகளிலும் பெறப்படும் பயன் மிகவும் குறுகிய காலத்துக்கே நீடித்திருக்கும் என்று கூறுவார். அத்தகைய பழக்கம்இறுயில் கேடுவிளைவிப்பதாக முடியும் என்றும் அவர் கூறுவார்.

—:O:—

# 5. படாடோப வாழ்க்கையில் ஆர்வம்

பாபுவின் அரைத்துண்டு வரலாற்றுப்பிரசித்தம் பெற்று விட்ட ஒரு விஷயமாகும். ஆயினும் அவர்கூட ஒரு காலத்தில் படாடோபத்தில் விருப்பம் காட்டி வந்தார் என்பதைக் கேட்க வியப்பாக இருக்கும்.

போஹன் இங்கிலாந்தில் சட்டக் கல்வி பயின்று வருகையில் கனவான் போன்று உடை உடுப்பதில் ஒரு பேரார்வம் அலனுக்கு ஏற்பட்டது. பம்பாயில் அவன் தைத்துக்கொண்ட துணிகளைக் களைந்தெறிந்துவிட்டு லண்டனைச் சேர்ந்த "ஆர்மி அண்ட் நேவி ஸ்டோர்ஸ்" - என்னும் கடையிலிருந்து நவீன மோஸ்தரில் அமைந்த ஆங்கிலேய உடைகளை வாங்கி அணிந்து கொண்டான். ஒருகூட்டுக்குமட்டிலுமே அவன்கிட்டத்தட்ட பத்துப்பவுன்வரை செலவிட்டான். தங்கத்திலான பைக்கடிகாரம் ஒன்றையும் அவன் வாங்கிக்கொண்டான்; டை அணிவதிலும் அவன் சீக்கிரத்தில் தேர்ச்சிபெற்றான். மேலும் தன் தலைமயிரை அக்காலத்திய பாணிப்படி கோதிக்கொள்வதில் பல மணி நேரம் செலவழித்தான். இவற்றுக்கெல்லாம் சிகரம் வைக்கும்படியாக நெடுந்தொப்பி ஒன்றையும் தலையில் அணிந்து கொண்டான். தினந்தோறும் இவற்றைக் கொண்டு தன்னை அலங்கரித்துக் கொள்ள அவன் எவ்வளவு நேரம் எடுத்துக் கொண்டானோ?

போதாததற்கு அவன் நடப்பதிலும்கூட நவீன முறையைப்பயில ஆரம்பித்தான். அதற்காக நடனப் பயிற்சி வகுப்புகளிலும்கூட அவன் கலந்து கொண்டான்.

கனவான் ஆகவேண்டுமென்றால் உடை உடுத்தால் மட்டும் போதுமா? நவீன முறையில் பேசக் கற்றுக்கொள்ள வேண்டாமா என்று அவன் கருதினான். எனவே பேச்சுக் கலையிலும் பயிற்சி பெற முடிவு செய்தான். அதற்கென் ஒரு தனிப் புத்தகம்வாங்கி படிக்க ஆரம்பித்தான்.

இசையில் நாட்டம் கொள்வது கல்ாசாரத்தின் உயரிய சின்னமாகும் என்றும் அவன் கருதினான். இன்னிசை பயின்றாலென்ன என்ற ஒரு யோசனை தோனறியது. அவன் வயலின் இசைப்பயிற்சி வகுப்பு ஒன்றில் சேர்ந்து கொண்டான்.

கனவானகப் பரிணமிக்க அவன் இந்த நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகையிலேயே அவனுடைய அந்தராத்மா அவனைத் தட்டி எழுப்பிக் கொண்டிருந்தது. தான் இங்கிலாந்து வந்தது சட்டக்கல்வி பயிலுவதற்காகவே ஒழிய, உல்லாசமானதொரு தோற்றம் மேற்கொள்ளவோ, கனவான் வாழ்க்கையை மேற்கொள்ளவோ அல்ல என்பதை மோஹன் திடீர் என்று உணர்ந்தான். தான் வாழ்க்கைக்காலம் முழுவதையும் அந்நாட்டில் கழிக்கப் போவதில்லை என்பதையும் அவன் உணர்ந்தான். மேலும் நாடு திரும்பிச் செல்வதற்கான காலமும் நெருங்கிக்கொண்டிருந்தது. பேச்சுப் போட்டியினால் என்ன பயன்? அது அவனைச் சிறந்த வழக்கறிஞனாகச் செய்விதற்குப் பயன்படுமா? நடனம் கற்றுக்

கொள்வதால் கனவான் ஆகிவிட முடியுமா? வயலின் இசையை வேண்டுமென்ருல் இந்தியாவிலேயே, தன் வீட்டிலேயேகூடக் கற்றுக்கொள்ளலாம். அவன் இங்கிலாந்துக்கு மாணவனுகத்தான் வந்துள்ளான். படிப்புகளே அவனது பிரதான நோக்காகும். அவன் நீதி மன்றத்தில் வழக்கறிஞர் தொழில் மேற்கொள்வதற்காகத் தன்னைத் தகுதியுறச் செய்து கொள்ளவேண்டுமே தவிர நவநாகரீக கொலு மண்டபத்தில் வீற்றிருப்பதற்காக அல்ல என்பதை மோஹன் சீக்கிரத்தில் உணர்ந்தறிந்தான்.

இவ்வுண்மை மோஹனுக்கு பளிச்சென்று மனதில் உதயமாயிற்று. "நான் என்னுடைய நற்பண்புகளின் மூலம் கனவான் ஆகமுடியுமென்ருல் அதைவிடச் சிறந்தது வேறு எதுவுமில்லை; அப்படி முடியாது போயின் எனது அபிலாஷைகளைக் கைவிட்டு விடவேண்டும்.'' என்ற முடிவுக்கு அவன் வந்தான்.

புதியதொரு வாழ்க்கையை மேற்கொள்ளத் தீர்மானித்ததை அடுத்து மோஹன் நடனப்பயிற்சி, பேச்சுப் போட்டி, இசைப் பயிற்சி வகுப்புகள் ஆகியவை அனைத்துக்கும் ஒரு முழுக்குப்போட்டுவிட்டான். ஒரு ஆங்கிலேய குடும்பத்தினரோடு அவன் வசித்து வந்ததையும் நிறுத்திவிட்டு, சொந்தமாகவே ஒரு அறையை வாடகைக்கு எடுத்துக்கொண்டு அதில் வசித்து வரலானுன். அதைத் தொடர்ந்து படிப்படியாக எளிய வாழ்க்கையையும் அவன் மேற்கொள்ள ஆரம்பித்தான். முதலில் பஸ், டாக்ஸி போன்ற வாகனுதிகளின் உபயோகத்தைக் கைவிட்டு விட்டு நடக்க ஆரம்பித்தான்; அதன் மூலம் பணத்தை மிச்சப்படுத்தலானுன். தினந்தோறும் பல

மைல்கள் கால் நடையாகப்பயணம் செய்ததில், பணம் மிச்சமானதோடு அவன் உடல் நலத்திலும் அபிவிருத்தி காணப்பட்டது. வெளிஸ்தலங்களில் சாப்பிடுவதை விட்டுவிட்டு வீட்டிலேயே காலை உணவு தயாரித்துக் கொள்ளவும் ஆரம்பித்தான். அதன் பலனாக உணவுக்கான செலவில் மிச்சம் காணவும் வழி ஏற்பட்டது.

இவ்வகையில் அவனுடைய படாடோப மோகம் முழுவதும் அகன்று எளிமையான வாழ்க்கை அதனிடத்தைப் பிடித்துக் கொண்டது. தான் அரைத்துண்டு உடுத்து சுற்றிய காலத்தில் இச்சம்பவம்பற்றி எடுத்துரைக்கையில் "மக்கள் சதாரணமாக நினைப்பதுபோன்று எளிய வாழ்க்கையை மேற்கொள்வது அவ்வளவு எளிய காரியமாக இருக்கவில்லை'' என்று பாபு கூறுவார்.

இவ்வகையில் மாணவராக இருந்துவந்த காலங்களில் ஏற்பட்ட இம்மனப் போராட்டங்களே பாபுவின் பிற்கால எளிய வாழ்க்கைக்கு அஸ்திவாரமாக அமைந்தது என்றே கூறவேண்டும்.



# 6. தன்னலத் தியாகத்தில் முதலாவது முயற்சி

தென்னுப்பிரிக்காவில் எட்டாண்டு காலம் வாழ்ந்து அங்குள்ள தனது நாட்டினருக்குச் சேவைசெய்த பின்னர் 1901-ம் ஆண்டில் நாடு திரும்புவதென்று பாபு தீர்மானித்தார். இந்தியாவிலுள்ள அவரது நண்பர்களும் அவரை நாட்டுக்கு வருமாறு வலியுறுத்தியிருந்தனர். தன் தாய்நாட்டில் பின்னும் அதிக அளவிலாக சேவை செய்ய முடியும் என்றும் அவர் கருதினர்.

ஆனல் தென்னுப்பிரிக்காவிலிருந்த பாபுவின் சக ஊழியர்கள் அவரை இந்தியா திரும்ப இலேசில் விடவில்லை. இறுதியாக அவர்கள், எந்தச்சமயத்திலும் தாங்கள் அவரைத் திரும்ப வரும்படி அழைத்தால் தென்னுப்பிரிக்காவுக்கு அவர் திரும்பி விடவேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் அவர்கள் அதற்கு ஒப்புக்கொண்டனர். பாபுவும் அவ்வேற்பாட்டுக்குச் சம்மதித்தார்.

நேட்டால் இந்தியர்கள் பாபுவுக்கு அளித்த பிரிவு உபசாரத்தில் அவர்களுடைய அன்பு மாரியைப் பொழிந்திருந்தனர். பாபுவைக் கௌரவித்து விருந்து உபசாரங்கள், கூட்டங்கள் ஆகியவை பலவற்றை நடத்தி அவருடைய சேவைகளுக்கு பாராட்டுரைகளை வழங்கியதுடன், அவற்றுக்குத் தங்களது நன்றியையும் தெரிவித்துக்கொண்டனர். மேலும் பாபுவுக்குப் பல அன்பளிப்புகளையும் அவர்கள் வழங்கினர்.

பாபு மாலையில் வீடு திரும்பிய பொழுது தம்முடன் பிரிவு உபசாரப்பத்திரங்கள், மாலைகள், அன்பளிப்பு கள் தங்கப் பித்தான்கள், வளையங்கள், தங்கக்கைக்கடி யாரங்கள், புரூச்சுகள், செயின்கள் நெக்லஸ் மற்றும் வைரங்கள் பதிப்பிக்கப்பட்ட நகைகள் ஆகியவை அனைத்தையும் சுமக்க முடியாதபடி சுமந்து வந் திருந்தார்.

கஸ்தூரிபாய் அவ்வன்பளிப்புகளைக் கையில் எடுத்துத்திரும்பத்திரும்பப் பார்த்துக்கொண்டிருந்தார். அவருடைய எளிய மனம் இத்தனை தங்கத்தைக் காண, அதுவும் உள்ளன்போடு வழங்கப்பட்ட அன்பளிப்பு களைக் காண பெரிதும் மகிழ்ச்சிகொண்டது.

ஆனால் பாபுவோ எதுவும் கூறாது மௌனமாக சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். அவருடைய மனத்திலே ஒரு பெரும் போராட்டம் நடந்துகொண்டிருந்தது. இந்த அன்பளிப்புகளை அவர் ஏற்றுக்கொண்டது முறை யானதுதானா? அதற்கு அவருக்கு உரிமை உள்ளதா? அவரோ பிரதிபயன் எதிர்பார்க்காமல் சமுதாயத்துக்குச் சேவை செய்து வருவதாகக் கூறிவந்தார். இந்த நன் கொடைகளோ—அவரது கட்சிக்காரர்கள் சிலர் அளித்த இரண்டொரு அன்பளிப்புகள் நீங்கலாக மற்றவை அவ ருடைய பொது சேவைகளுக்காகவே வழங்கப்பட்டவை யாகும். அவர் மேற்கொண்டுவந்த பொது சேவை களில் அவருடைய கட்சிக்காரர்கள்கூட உதவியிருக் கின்றனர். எனவே அவர்களிடமிருந்து இத்தனை விலை மதிப்புள்ள. அன்பளிப்புகளைப் பெற்றது முறை யானதுதானா?

அந்த அன்பளிப்புகளில் கண்கவர் வேலைப்பாடு அமைந்த ஒரு தங்க மாலை ஒன்றும் இருந்தது. அது கிட்டத்திட்ட ஐம்பது கினி தொகை மதிப்புக்குச் சமமாக இருக்கும் என்று மதிப்பிடப்பட்டிருந்தது. அம்மாலை கஸ்தூரிபாய்க்கு அன்பளிப்பாக வழங்கப்பட்டதாகும். ஆனால் அது பாபுவின் சேவைக்காகக் கொடுக்கப்பட்டதேயாகும். எனவே அதையும் மற்ற அன்பளிப்புகளிலிருந்து பிரிக்கமுடியாது என்றும் அவர் கருதினர்.

அன்றிரவு பாபுவுக்கு ஒரு வினாடிகூட துயில் கொள்ள முடியவில்லை. நீண்ட நேரம் படுக்கையில் இப்படியும் அப்படியுமாகப்புரண்டுகொண்டிருந்தார். பின்னர் படுக்கையைவிட்டு எழுந்திருந்து அறையில் இங்குமங்குமாக நடக்கலானார். அவருடைய மனம் பெரிதும் சஞ்சலத்தில் ஆழ்ந்திருந்தது. அவருடைய பிரச்சனைக்கு முடிவு ஏதுமில்லை என்றும் அவர் உணர்ந்தார். எனவே அந்த வெகுமதிகளைத் தான் வைத்திருக்க முடியாது என்ற முடிவுக்கும் வந்தார். அதே சமயத்தில் இவ்வளவு அழகான, இவ்வளவு மதிப்பு வாய்ந்த பொருள்களை கைவிடுவதற்கும் அவருக்கு மனது வரவில்லை.



அவற்றைத் திருப்பிக்கொடுக்காமல் தம்மிடமே வைத்துக்கொண்டிருப்பது முறையாகுமா? தனது குழந்தைகளுக்குச் சீரிய உதாரணமாக அது இருக்குமா? அப்படியானல் கஸ்தூரிபாய் பற்றி என்ன செய்வது? அவர்கள் அனைவரும் பிரதிபயன் எதிர்பார்க்காமல் பொதுச் சேவையில் ஈடுபடுவதற்குத் தயார்படுத்தப் பட்டு வந்தனர். அந்த சேவைக்கு உரித்தபலன் அதுவே யாகும், என்று அவர் போதித்து வந்ததை அவர்கள் அப்பொழுதுதான் உணரவாரம்பித்திருந்தனர். அவ்வாறு இருக்கையில் அவருக்குப்பிரதி பயனுக வழங்கப் பட்ட மதிப்புமிக்க பொருள்களை வைத்துக்கொண்டு அவர்கள் இன்பம் துய்க்கமுடியுமா?

அவர்கள் அனைவரும் படிப்படியாகத் தங்கள் வாழ்க்கையை எளிமைப்படுத்திக் கொண்டிருந்தனர். அந்த வீட்டில் அவர்களுடையது என்று கூறிக்கொள் ளக்கூடிய விலை மதிப்புள்ள அனிகலன்கள் எதுவும் இருக்கவில்லை. எனவே பிறரால் வழங்கப்பட்ட தங்க கைக்கடியாரங்கள், வைர மோதிரங்கள், ஆகியவற்றை அவர்கள் அணிந்து கொள்வது முறையாக இருக்காது. மேலும் அவரே தங்கத்தின் மீதுள்ள பற்றை விட்டு விடும்படியாக பொதுமக்களுக்கு வேண்டுகோள் விடுத்து வந்திருக்கிறுர். இப்பொழுது தாங்களே அத்தங்கத்தின் ஆசைக்கு இரையாவது தவருக இருக்காதா? பார்ப்பவர்களுக்கு நகைக்கத் தக்கதாகஇருக்காதா என்று ஆலோசனையில் அவர் ஆழ்ந்தார்.

பாபு அவ்வன்பளிப்புகளைத்தாம் வைத்திருப்பது இயலாது என்பதையும், தனக்குத்தாமே அவர் உண்மையாக இருக்கவேண்டுமாயின் தம்பவர்களையும்கூட அவற்றை வைத்திருக்கும்படி அனுமதிக்க முடியாது

என்பதையும் உணர்ந்தார். எனவே அவ்வன்பளிப்புகள் அனைத்தையும் பொது தர்மஸ்தாபனம் ஒன்றிடம் கொடுத்துவிட வேண்டும் என்ற முடிவுக்கு வந்தார். அவசியம் ஏற்பட்டால் பொது வேலைகளுக்காக அவற்றை அடமானம் வைத்துக் கடன்களை எழுப்பிக்கொள்ளலாம். பாபு இந்த தீர்மானத்துக்கு வந்தவுடன் அவருடைய மனம் சஞ்சலம் நீங்கி அமைதியைப் பெற்றது. பின்னர் அவர் நன்கு தூக்கத்தில் ஆழ்ந்தார்.

தீர்மானம் மேற்கொள்வது என்னவோ எளிது தான். ஆனால் அதை நிறைவேற்றுவது அவ்வளவு சுலபமில்லை. மறுநாள் காலை பாபு இவ்வுண்மையை உணர்ந்தறிந்தார். அது விஷயம் பற்றித் தம்முடைய மகன்களுடன் உரையாடினார். உண்மையில் அவர் மேற்கொள்ள நினைத்த நடவடிக்கையை, அவர்களை ஏற்கச் செய்வது சுலபமாகத்தான் இருந்தது. அதுபற்றி அவர்களுக்கு விளக்கிக் கூறியதுடன், அவர்களுடைய தாயாருக்கு அதைத் தெரிவிக்கும்போது தனக்கு ஆதரவாக இருக்கும்படியும் அவர் கேட்டுக்கொண்டார்.

"எங்களுக்கு இவ்வளவு விலை மதிப்புள்ள நன்கொடைகள் தேவையில்லை. சமூகத்துக்கே அவற்றைத் திருப்பிக் கொடுத்துவிடுவோம். அப்படி அவை நமக்கு வேண்டுமென்றால் நாம் பணம் கொடுத்து வாங்கிக் கொள்ளலாம்.'' என்று ஹரிலாலும், மணிலாலும் கூறினர். தகப்பனாரின் ஏற்பாட்டுக்கு இணக்கம் தெரிவித்த அவர்கள் "நாங்கள் அம்மாவையும் இந்த ஏற்பாட்டுக்கு உடன்படச் செய்கிறோம். அவர் தான் பூணுவதற்காக இவ்வணிகலன்களை ஏற்றிருக்கமாட்டார். ஒருவேளை எங்களுக்காக அவற்றை வைத்திருக்க விரும்பியிருக்கலாம். நாங்கள், அவை எங்களுக்கோ எங்கள் மனைவி

மார்களுக்கோ தேவையில்லை என்று கூறுகிறோம். அப்பொழுது நிச்சயம் அவற்றைத்திரும்பக் கொடுத்துவிடுவதற்கு அவர் இசைவார்.'' என்று அவர்கள் கூறினர்.

அவர்கள் எவ்வளவு எளிதாகக் கூறிவிட்டனர். ஆனால் அது உண்மையிலே கடினமாகத்தான் இருந்தது. கஸ்தூரிபாய் அவர்களுடைய வேண்டுகோளைக் கேட்டவுடன் பாபுவை நோக்கித் திரும்பி கோபத்துடனும் கேலியாகவும் "உங்களுக்கு இந்த நகைகள் அவசியமாக இல்லாதிருக்கலாம். உங்கள் குழந்தைகளின் மனதைக் கூட நீங்கள் மாற்றிவிட்டீர்கள்; அவர்களும் உங்கள் பாட்டுக்கு தாளம் போடுகிறார்கள். எனவே இவ்வணிகலன்களை நீங்கள் வைத்திருக்க விரும்பவில்லை என்பதை நன்குணர்கிறேன். ஆனால் நான் கேட்கிறேன் எனக்குப்பதில் சொல்லுங்கள்? எனது மருமகள்கள் என்ன கூறுவார்கள்?'' என்று படபடவென்று உரைத்தாள்.



"உனது மருமகள்களா?'' என்று பாபு வியப்புடன் கேட்டார். அவர்கள் பற்றி அவர் சிந்திக்கவேயில்லை.

"ஆமாம் நமது மருமகள்களுக்கு அவை நிச்சயமாகத் தேவையாக இருக்கும். இனனொரு விஷயம் உங்களைக் கேட்கட்டுமா? கஷ்டகாலம் ஏற்படும்போது தங்கம் பெரிதும் உதவியாக இருக்காதா? நாளைக்கு நமக்கு என்ன கஷ்டங்கள் நேரும் என்று யார் கூறமுடியும்? மேலும் இந்த நன்கொடைகள் அன்புப் பொருள்களாகக் கொடுக்கப்பட்டவையாகும். அவற்றைத் திருப்பிக் கொடுத்து விடும் அளவுக்கு நீங்கள் கல்நெஞ்சராக இருப்பீர்களா? அவ்வாறு செய்வதும், பார்ப்பதற்கு நன்ருக இருக்குமா? எனவே நானே அவற்றை வைத்துக் கொள்கிறேன்.'' என்று உறுதியுடன் கூறினுர். அத்துடன் விஷயம் முடிந்துவிட்டதாகவும், இனி அதுபற்றி விவாதிப்பதற்கு எதுவுமில்லை என்ற ரீதியிலும் அவர் தீர்மானமாகப் பேசினுர்.

கஸ்தூரிபாய் கூறிய காரணங்கள் பாபுவுக்குத் திருப்தி அளிப்பதாக இருக்கவில்லை யாதலால் அவர் அதற்கு மறுதளித்துத்தலையை ஆட்டினுர். தன்னுடைய வாதங்கள் மூலம் பாபுவை வழிக்குக் கொண்டுவர இயலாது போனது கண்டு கஸ்தூரிபாய் கண்களிலிருந்து நீர் தாரையாக விழிந்தது. மகன்களும்கூட தங்கள் உறுதியில் தீர்மானமாக நின்றனர். பாபுவோ கஸ்தூரிபாயின் விவாதங்களுக்கோ அவள் விட்ட கண்ணீருக்கோ மசிவதாக இல்லை. அவர் கஸ்தூரிபாயைச் சமாதானப் படுத்தி தன் ஏற்பாட்டுக்கு இணங்கவைக்க முயன்ருர். "குழந்தைகளோ இன்னும் திருமணம் செய்வதற்கான யுக்த வயதை அடையவில்லை. அவர்கள் வயதடையும் போது தங்கள் விஷயங்களைத்தாங்களே கவனித்துக் கொள்வார்கள். நம்மைப் பொறுத்தமட்டில் தங்கத்துக்குப் பேராசைப்படும் பெண்களை நமது மகன்களுக்கு திருமணம் முடிக்கவேண்டியதில்லை; நீ அப்படி

அவர்களுக்கு அணிகலன்களைப் பூட்டி மகிழவேண்டு மென்றால் நான் இருக்கவே இருக்கிறேன். அப்பொழுது என்னைக் கேட்டால் வாங்கித் தருகிறேன்'' என்று அவர் கூறினார்.

கஸ்தூரிபாய்க்கு உடனே கோபம் பீரிட்டெழுந் தது. "உங்களைக் கேட்கவா? என்று ஏளனமாகக்கூறி னார். "உங்களை எனக்கு நன்கு தெரியாதா?'' நீங்கள் தானே என் அணிகலன்கள் அனைத்தையும் எடுத்துச் சென்றுவிட்டீர்கள்? நான் அவற்றை நிம்மதியுடன் அணிவதற்குக்கூட நீங்கள் விடவில்லை. இப்பொழுதி லிருந்தே மகன்களைக்கூட சாதுக்களாக்க முயற்சி செய்துவரும் உங்களையா கேட்கச் சொல்கிறீர்கள்? உங் கள் மருமகள்களுக்கு ஆபரணங்களை வாங்கிப்போடு வதாக நீங்கள் கூறுவது விநோதமாக இருக்கிறது. இல்லை, இல்லை; நான் இந்த ஆபரணங்களை திருப்பித் தரமாட்டேன். எனக்கு அவர்கள் அன்பளிப்பாக வழங் கிய தங்க மாலையைப் பிடுங்கிக்கொள்ள உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?'' என்று கோபாவேசத் துடன் கூறினார். கஸ்தூரிபாயின் சொல்லம்புகளைத்தாங்க முடியாது பாபு திக்குமுக்காடி பதைபதைத்துப் போய் வார்த்தைகள் குழறித் தடுமாறியபடி பதில்கூற ஆரம் பித்தார். "ஆ...ஆனால்...உ...உனக்கு இந்த தங்க மாலை வழங்கப்பட்டிருப்பது உனது சேவைகளுக்கு அல்ல என்பதும், எனது சேவைகளுக்காக வழங்கப் பட்டது என்பதும் உனக்குத் தெரியாதா'' என்று கேட்டார்.

கஸ்தூரிபாய் அவருடைய வாதத்துக்கு அவ்வ ளவு எளிதில் பணிவதாகத் தெரியவில்லை.

"ஆமாம்... ஒத்துக்கொள்ளுகிறேன். நான் உங்களுடைய மனைவி இல்லையா? நீங்கள் அளித்த சேவை நான் அளித்தது போன்றதேயாகும். உங்களுக்காக இரவும் பகலும் நான் பாடுபடவில்லையா? அது உங்களுக்குச் சேவையாகத் தோன்றவில்லையா? அதற்குப் பிரதி பயன் ஏதும் கிடையாதா? நான் உங்களுக்காகப் பாடு படுவது போதாதென்று, நீங்கள் உங்கள் நண்பர்களை யும், சக ஊழியர்களையும்கூட வீட்டுக்குக் கூட்டிவந்து விடுகிறீர்கள். அவர்களுக்குச் சேவை செய்யும்படியாக வும் என்னைப் பலவந்தப்படுத்துகிறீர்கள். அதுபற்றி நான் பலமுறை கண்ணீர் சிந்தியுள்ளேன். ஆனால் நீங்கள் சிறிதளவும் பச்சாத்தாபப்படுவதாகத் தோன்ற வில்லை. அவர்களுக்கும் நான் பாடுபடவேண்டியிருக் கிறது" என்று அவர் கூறினார். கஸ்தூரிபாயின் வார்த் தைகள் வில்லிலிருந்து அடுக்கடுக்காகக் கிளம்பும் அம்பு போன்று பாபுவை வந்து ஆழத்தைத்தது. பாவம்... பாபு ஏதும் கூறாமல் மனம் நொந்துவாளாவிருந்தார். ஆனால் அவர் மேற்கொண்ட தீர்மானத்தைக் கைவிடுவ தாக இல்லை.

கஸ்தூரிபாய் முதலில் பிடிவாதமாக இருந்த போதிலும் பாபுவின் வலியுறுத்தல்களுக்கு இறுதியாக இசையத்தான் வேண்டியிருந்தது. பாபு ஒருதரம் முடிவு செய்தால் சிறிதும் அசைக்கமுடியாத கற்பாறைபோல் ஆகிவிடுவார் என்பதை அவள் அனுபவபூர்வமாக ஏற் கனவே உணர்ந்திருந்தாள்.

நகைகள் அனைத்துக்கும் ஜாபிதா எடுக்கப்பட்டு அவை பொதுச் சொத்து போன்று பாங்கி ஒன்றில் ஒப் படைக்கப்பட்டது. பொதுக்காரியத்துக்காக அவசியம் நேரிடும் காலங்களில் பாபுவோ இதர தர்மகர்த்தாக்

களோ விரும்பினால் அதன்மீது கடன் எழுப்பிக்கொள்ளலாம் என்றும் முடிவு ஆயிற்று.

இந்த ஏற்பாடு பிற்பட்ட வருஷங்களில், முக்கியமாக சாத்வீக ரீதியிலாக மக்கள் எதிர்ப்பியக்கம் மேற்கொள்ளப்பட்ட காலங்களில் பேருதவியாக இருந்தது. அவ்வேற்பாட்டை மேற்கொண்டது பற்றி பாபு ஒருபொழுதும் வருந்தியதில்லை; காலக்கிரமத்தில் அதன் விவேகம் பற்றி கஸ்தூரிபாயும் உணரவாரம்பித்தார்.

பிறகு பல ஆண்டுகள் கழித்து சபர்மதியில் சத்தியாகிரக ஆசிரமத்தை நிறுவியபொழுது பாபு ஆசிரம வாசிகளிடம் வருமாறு கூறினர்; "ஆசிரமத்தில் எவரும் நகைகள் வைத்திருக்க அனுமதிக்கக்கூடாது என்பது பற்றி நான் பூரண உறுதி கொண்டிருக்கிறேன். நமது நாட்டில் கடும் பஞ்சநிலை இருந்து வரும்வரையில் இவ்வாறு ரத்தினக்கற்கள் பதிக்கப்பெற்ற நகைகளை நம்மிடம் வைத்துக்கொள்வதோ அவற்றைப் பூணுவதோ பெரும் பாவம் என்று நான் கருதுகிறேன்."

பாபு தனக்கோ தன்னைச் சார்ந்தவர்களுக்கோ தங்கம் வெள்ளி ஏதும் கோரவில்லை யென்றாலும் பிற்பட்ட ஆண்டுகளில் அவற்றுக்காக மக்களிடம் கையேந்தினர். ஆனால் அவர் கையேந்தியது கீழ்நிலையிலுள்ள மக்களை மேம்படுத்துவதற்காகவேயாகும்.



# 7. மணிலால் நோய்வாய்ப்பட்டு மீண்டது

பாபுவின் மூத்த மகன் மணிலால் ஒருமுறை பம்பாயில் தங்கியிருக்கும்போது, மிகவும் கடுமையாக நோய் வாய்ப்பட்டிருந்தான. அப்பொழுது அவனுடைய வயது பத்து. வைத்தியர்கள் மருந்துகள் எதுவும் பயன் படாதென்றும் அவனுக்கு முட்டையும், கோழிக்குஞ்சு சூப்பும் ஆகாரமாகக் கொடுத்து வரும்படியும் கூறினார் கள். "நாங்கள் மரக்கறி உண்பவர்கள்; நீங்கள் கூறிய இரண்டும் மணிலால் சாப்பிடமாட்டான். என்னாலும் கொடுக்க முடியாது. அவற்றுக்குப் பதிலாக வேறு ஆகாரம் ஏதேனும் இருந்தால் கூறுங்கள்'' என்று பாபு கூறினார்.

டாக்டர் தம் தலையை அசைத்து "உமது மகனின் உயிரே ஆபத்திலிருக்கிறது; மகனிடம் இத்துணை கடுமையாக இருக்கவேண்டாம்'' என்று கூறினார். பாபு மீண்டும் டாக்டரிடம் மன்ருடினார். "நான் எனது ஜல வைத்திய முறையை அவன் மீது பிரயோகித்துப் பார்க் கிறேன், ஆனால் அவனுடைய நாடி, மார்பு, ஈரல், ஆகிய வற்றின் நிலையைச்சோதித்துக் கூறுவதில் உங்களுடைய உதவியை வேண்டுகிறேன். நான் உங்களுக்கு மிகவும் கடமைப்பட்டவனாக இருப்பேன்'' என்று கூறினார். டாக்டர் அவ்வேற்பாட்டுக்குச் சம்மதித்தார்.

பாபு தனக்கும் டாக்டருக்குமிடையே நடைபெற்ற சம்பாஷணையை மணிலாலிடம் விவரித்தார். "உங்க

ஞுடைய ஜலவைத்தியமுறையை சோதித்துப் பாருங்கள் நான் முட்டையோ கோழிக்குஞ்சு சூப்போ உட்கொள்ள மாட்டேன்'' என்று மணிலால் பதிலளித்தான்.

பாபுவுக்கு மணிலாலின் பதிலைக் கேட்க மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது. ஏனெனில் தானும் சிபாரிசு செய்திருந்தால் அவன் அவற்றை உட்கொள்ளத் தயாராக இருந்திருப்பான் என்பதை அவர் அறிந்திருந்தார்.

மணிலாலுக்கு அப்பொழுது கடுமையான சுரம், —104 டிகிரி இருந்தது; இரவுமுழுவதும் அவன் பிதற்றிக் கொண்டிருந்தான். அவனது நிலைகண்டு பாபுவுக்கு மிகவும் கவலை உண்டாயிற்று. ஏதேனும் இசைகேடாக முடிந்தால் மக்கள் தம்மைப் பற்றி என்ன கூறுவார்கள், வேறு டாக்டர்களையோ ஆயுர்வேத பண்டிதர்களையோ தம்மால் கூப்பிட இயலவில்லையா, என்று கேட்கமாட்டார்களா? தம்முடைய வைத்திய முறையை அவனது உயிருக்கும் துணிந்து மேற்கொள்ள முயல்வதற்கு தமக்கு என்ன உரிமை இருக்கிறது? இச்சிந்தனைகளால் கலக்கமுற்று பாபு பெரிதும் வாட்டமடைந்தார். அவர் தமக்குத் தாமே கூறிக்கொண்டார். "நான் நோய் வாய்ப்பட்டிருந்தால் எனக்கு என்ன சிகிச்சை அளித்துக்கொண்டிருப்பேனே, அதே சிகிச்சையை எனது மகனுக்கும் அளிப்பதைக் காண கடவுள் நிச்சயம் மகிழ்ச்சியுறுவார். மணிலாலின் வாழ்க்கைக் கயிறு கடவுளின் கையில்தான் இருக்கிறது. எனவே அவர் மீது பூரண பாரத்தைப் போட்டுவிட்டு, அவருடைய பெயரில் ஜலவைத்திய முறையை ஏன் தொடர்ந்து மேற்கொள்ளக் கூடாது? அதுவே உசிதம் என்று நான் கருதுகிறேன்.''

அப்பொழுது இரவு நேரம்; பாபு மணிலாலின் பக்கத்தில் அதே படுக்கையில் அமர்ந்திருந்தார்; மணி

லாலின் உடம்பைச் சுற்றி நீர் நனைத்த துணியை வைத்து அவனுக்கு சிகிச்சை அளிக்க முடிவு செய்தார். உடனே எழுந்திருந்து ஒரு துணியை நனைத்து அதை இறுகப் பிழிந்துவிட்டு மணிலாலைச் சுற்றி அதைப் போர்த்தினார். மணிலாலின் தலை மட்டிலுமே வெளியில் தெரிந்துகொண்டிருந்தது. பிறகு அவன் மீது இரண்டு கம்பளிப் போர்வைகளையும் போர்த்தினார். நனைத்த துவாலை ஒன்றைக் கொண்டு அவனுடைய நெற்றியில் ஒத்தடம் கொடுத்தார். அவனுடைய உடம்பு சூடான ஆலை இரும்புபோன்று கொதித்துக்கொண்டிருந்தது. உடல் வற்றி உலர்ந்திருந்தது. மேலும் உடலில் வியர்வை எதுவும் காணப் படவில்லை. பாபு பெரிதும் சோர்வுற்றிருந்தார். பின்னர் மணிலாலைக் கஸ்தூரி பாயின் கையில் ஒப்படைத்துவிட்டு சற்று இளைப்பாற் றிக் கொள்வதற்காக சௌபாத்தி கடற்கரையில் சிறிது உலாவச் சென்றார்.

இரவு பத்து மணியிருக்கும்; கடற்கரையில் ஆள் அரவமற்று இருந்தது. தீவிர சிந்தனையில் ஆழ்ந்த பாபு கடவுளை நோக்கி வருமாறு பிரார்த்திக்கலாயினார். "ஓ பிரபுவே இந்த சோதனை நேரத்தில் என்னுடைய மானம் மதிப்பு அனைத்தும் உன் கையில்தான் இருக் கிறது.'' பிறகு அவருடைய வாய் சதா ராம நாமத்தை ஜபித்துக் கொண்டிருந்தது. சிறிது நேரங்கழித்து அவர் கவலை மேலிட்டு வீடு திரும்பினார்.

பாபு அறையில் நுழைந்தவுடனேயே "திரும்பி வந்துவிட்டீர்களா பாபு'' என்று மணிலால் வின வினான்.''

"ஆமாம் கண்ணு."

"என்மீதுள்ள துணிகளை அகற்றிவிடுங்கள் ; எனக்கு உடம்பெல்லாம் பற்றி எரிகிறது."

"உனக்கு வேர்க்கிறதா மகனே."

"என் உடம்பு முழுவதும் வியர்வையால் நனைந்து விட்டது. என்னை வெளியில் எடுத்து விடுங்கள்" என்று மணிலால் கூறினான்."

பாபு மணிலாலின் நெற்றியைத் தடவினார். அது முழுதும் வேர்வையினால் நனைந்திருந்தது. சுரம் சற்றுத் தணிந்து வந்துகொண்டிருந்தது. பாபு கடவுளை நோக்கி கைகூப்பி தன் நன்றியைத் தெரிவிக்கலானார்.

"குழந்தாய் மணிலால்; உனது சுரம் இப்பொழுது நிச்சயம் குறைந்துவிடும், இன்னும் சற்று வியர்வை மேலிட்டவுடன் உன்னை வெளியில் எடுத்துவிடுகிறன்."

மணிலால் மன்ருடினான். "பாபு உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். இந்த அனல் அடுப்பிலிருந்து எனக்கு விடுதலை கொடுங்கள் ; வேறு ஒருமுறை நீங்கள் விரும்பினால் அதில் சுற்றிவிடுங்கள் ; இப்பொழுது மட்டிலும் என்னை வெளியில் எடுத்துவிடுங்கள்."

பாபு அவனுக்குப் போக்குக்காட்டிக்கொண்டே கதைகளைச் சொல்லியும், இனிமை ததும்பப் பேசியும் மேலும் சில நிமிஷ நேரத்துக்கு அவனை அந்த ஈரத் துணிகளிலேயே வைத்திருந்தார். இதற்குள்ளாக அவன் முன்நெற்றி முழுவதும் வியர்வை தாரைதாரையாக

வழிந்து கொண்டிருந்தது. அதைக் கண்ட பின்னர்தான் பாபு துணிக்கட்டுகளை அவிழ்த்து அவன் உடம்பு முழுவதிலிருந்தும் வியர்வையைத் துடைக்கலானார். அது முடிந்ததும் அவர் தம் மகனருகே சென்று அணைத்துப் படுத்துக்கொண்டார். ஒரு சில கணத்தில் இருவரும் நித்திரையில் ஆழ்ந்துவிட்டனர்; இரவு முழுவதும் அவர்கள் எவ்விதச் சலனமுமின்றி உறங்கினர்.



மறுநாள் காலை மணிலாலுடைய சுரம் மிகவும் குறைந்திருந்தது. அந்நிலையில் நாற்பது நாட்கள் அவன் நீடித்து நீர் கலந்த பாலும் பழரசங்களும் ஆகாரமாக உட்கொண்டுவந்தான். இறுதியில் பூரண சொஸ்தம் பெற்று பழைய உடல் நிலையை அடைந்தான்.

மணிலால் அக்கடும் நோயிலிருந்து மீளுவதற்கு உதவியது யாது? கடவுளின் கருணையா? ஜல வைத்திய

முறையில் பாபுவின் கைத்திறஞ? அல்லது அவர் பராமரித்து வந்த முறையா? பத்திய உணவு உட்கொண்டு வந்ததா? பாபுவைப் பொருத்தமட்டில் கடவுளின்பால் தாம் வைத்துள்ள நம்பிக்கையே அதற்குக் காரணம் என்ற அசையாத நம்பிக்கை கொண்டிருந்தார். எல்லை வரையற்ற அந்த நம்பிக்கைதான் பெருந்துன்பங்களும், கஷ்டங்களும் நேரிட்ட காலங்களில்கூட அவரை விட்டு அகலாமல் ஒன்றியிருந்தது.



# 8. தொற்று நோயாளிகளுக்குச் சேவை

பின்வரும் சம்பவம் தென்னுப்பிரிக்காவைச் சேர்ந்த ஜோஹன்னஸ்பர்க் நகரத்தில் அமைந்திருந்த தொழிலாளர்கள் குடியிருப்புஸ்தலத்தில் 1904-ம் ஆண்டில் நிகழ்ந்ததாகும். மிகவும் அசுத்தமான, மற்றும் உடல் நலத்துக்குக் கேடு விளைவிக்கக் கூடிய சூழ்நிலையில் அமைந்திருந்த அந்த ஸ்தலத்தில் கட்டாயத்தின்பேரில் வேறு வழியின்றி இந்தியர்கள் குடியிருந்தனர். அந்தஇடத்தைத் துப்புறவுப்படுத்துவதற்கு ஸ்தல முனிசிபாலிடி யாதும் செய்யாமல் வாளாவிருந்தது. அச்சமயத்தில் அங்கு இரண்டு வார காலமாகப் பெய்த கடுமழையின் காரணமாக நிலைமை பின்னும் மோசமாகியிருந்தது.

அந்த ஸ்தலத்தில் பிளேக் தொற்றுநோய் திடீரென்று பரவக் கூடுமென்று பாபு அஞ்சினர். அவர் பயந்தவாறே நிகழ்ந்தது.

அவர் வெளியிட்டு வந்த "இண்டியன் ஒப்பினியன்" என்ற வாராந்திரப் பத்திரிகையின் பிரசுரகர்த்தரான மதன்ஜீத் என்பவரிடமிருந்து கடிதம் ஒன்று ஒரு நாள் வந்தது. அக்கடிதத்தில் அடங்கியிருந்த செய்தி அச்சம் தரும்வகையிலாக இருந்தது. "இந்த ஸ்தலத்தை திடீரென்று பிளேக் தொற்றுநோய் தாக்கியுள்ளது. நீங்கள் உடனே வந்து தக்க நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்" என்று அதில் கண்டிருந்தது.

அந்த ஸ்தலத்தில் அமைந்திருந்த சுரங்கங்களில் வேலேபார்த்துவந்த இந்தியர்கள் பலர் நோய் டாதிக்கப் பட்ட நிலையில் வெளிக்கொணரப்பட்டிருந்தனர். அவர் களில் பலர் ஏற்கனவே மாண்டு போயிருந்தனர். வேறு சிலர் மரணத்தருவாயில் இருந்தனர். அவர்கள் அனே வரையும் அந்தக் கடும் தொற்று நோய் தாக்கி இருந்தது.

பாபு, ஸ்தல முனிசிபல் வைத்திய அதிகாரிக்கும், நகர சிப்பந்திக்கும் உடனடியாக வரும்படித் தகவல் அனுப்பினூர். ஆனுல் அவர்கள் வருப்வரையில் அவர் வாளாவிருக்க வில்லே. ஸ்தல சுகாதார இனஸ்பெக்டர் ஒருவருடன் அவ்விடத்துக்கு விரைந்து சென்ருர்.

அங்கு அருகாமையில் ஆஸ்பத்திரி எதுவும் இருக்க வில்லே. அதே சமயத்தில் அவர்களே ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்வதற்கும் போதிய அவகாசம் இருக்க வில்லே.எனவேபாபு மதன் ஜீத் மற்றும் வேறு சில தொண் டர்கள் ஆகியோரின் உதவியுடன் அண்மையில் காலி யாகக் கிடந்த ஒரு இல்லத்தின் பூட்டை உடைத்துப் புகுந்து அங்கிருந்து சில கம்பளிகளேயும் கட்டில்களேயும் எடுத்து வந்தார்.

ஸ்தல சமூகத்தினர் கூட்டம் ஒன்று போட்டுப் பணம் வசூலித்தனர். கடைக்காரர்கள் சாமான்களேத் தந்துதவினர். ஸ்தலத்தில் தற்காலீக ஆஸ்பத்திரியொன் றும் உடனே ஏற்படுத்தப்பட்டது. நோய்வாய்ப்பட்ட வர்கள் அனேவரையும் அவ்விடத்துக்கு எடுத்துச் சென் றனர். டாக்டர் காட்ப்ரி என்ற இந்திய டாக்டர் ஒரு வரும் அச்சேவையில் கலந்து கொண்டார்.



இரவு முழுவதும், காந்திஜீயும், டாக்டரும், தொண்டர்களும் சிறிது நேரம்கூட ஓய்வு ஒழிவின்றி நோயாளிகளின் பராமரிப்பில் ஈடுபட்டுவந்தனர். அவர்கள் நோயாளிகளுக்கு உணவு அளித்தும், சிகிச்சைகளை வழங்கியும் வந்தனர்.

மறுநாட்காலை முனிசிபல் டாக்டர் அந்த ஸ்தலத்துக்கு வந்து சேர்ந்தபோது சுமார் பதினேழு பேர் உயிர் நீத்த நிலையிலோ, மரணத்தருவாயிலோ இருப்பதைக் கண்டார். பாபு டாக்டரின் அனுமதியுடன் நோயினால் பாதிக்கப்பட்டவர்களில் மூன்று பேருக்குத் தம்முடைய "மண்" சிகிச்சையை அளித்தார். அவர்களுடைய தலையிலும், மார்புகளின் மீதும் ஈரத்துணிகளைப் போர்த்தினார். அவர்களில் இரண்டுபேர் உயிர் மீட்கப்பட்டனர்; நோய்வாய்ப் பட்டவர்களில் உயிர் தரித்திருந்தவர்கள் தொற்றுநோய் பாதிக்கப்பட்டவர்களுக்கான தனி முகாம் ஒன்றுக்கு அப்புறப்படுத்தப்பட்டனர்.

பாபுவின் தீர உணர்ச்சியைக் கண்ணுற்று வேறு பலரும், அச்சேவையில் ஈடுபட முன்வந்தனர். அவர்கள் தங்கள் உயிருக்கு ஏற்படக்கூடிய ஆபத்தைக் கூடக் கருதாமல் தொற்றுநோயினுல் பாதிக்கப்பட்டவர்களுக்குச் சேவைசெய்யலாயினர். அவர்களது இரக்க உணர்ச்சி அவர்களது மரணபயத்தை வென்றது. ஆனுல் ப்பாபுவுக்கோ அந்த அனுபவம் புதிதாக இருக்கவில்லை. பல்லாண்டுகளுக்கு முன்னர் ராஜ்கோட்டில் அவருடைய இல்லத்தில் இதேபோன்று தொற்றுநோய் பாதிக்கப்பட்டிருந்த சமயத்தில், இதேபோன்று அவர் நிவாரணப்பணியில் ஈடுபட்டார்.



# 9. ஒப்பந்தத் தொழிலாளர்களுக்கு நீதி கிடைக்கச்செய்தது

ஒரு நாள் பாபு ஜோஹன்னஸ்பர்க்கில் உள்ள தமது வழக்கறிஞர் காரியாலயத்தில் உட்கார்ந்திருந்தார். மூன்று மாதங்களுக்கு முன்னர்தான் அவர் அங்கு தொழில் துவங்கியிருந்தார். அன்றுதினம் அலங்கோல நிலையில் ஒரு மனிதர் அவருடைய காரியாலயத்தின் கதவைத் திறந்துகொண்டு திடுமென்று உள்ளே நுழைந்தார். அம்மனிதருடையை துணிகள் தாறுமாருகக் கிழிந்திருந்தன. கசங்கிய தலைப்பாகை ஒன்றைத் தலையில் அணிந்திருந்தார்; அவருடைய வாயிலிருந்து ரத்தம் வழிந்துகொண்டிருந்தது. முன்பல் இரண்டு உடைபட்டுக் கீழே தொங்கிக்கொண்டிருந்தது. உள்ளே வரலாமோ வரக்கூடாதோ என்ற அச்சத்துடன் உடல் முழுவதும் நடுங்கிக்கொண்டும், கண்களில் தாரை வழிந்தவாறும் மிகவும் பரிதாபகரமான நிலையில் அவர் நின்றுகொண்டிருந்தார்.

அம்மனிதர் உள்ளே நுழைந்தவுடன் கசங்கிய தலைப்பாகையைக் கழற்றித் தம்முடைய கையில் வைத்துக்கொண்டு, துயரம் மேலிட கைகட்டி வாய்புதைத்த நிலையில் அடக்கவொடுக்கமாக ஒரு ஓரத்தில் நின்றுகொண்டிருந்தார். உள்ளே நுழைந்தவுடன் அவர் தலைப்பாகையைக் கழற்றியதற்கான காரணம்பற்றி பாபுவினல் உடனே உணரமுடியவில்லை. அதுபற்றி அவர் வினவியபோது அவருடைய தமிழ் குமாஸ்தா "அது

தான் மரியாதைக்கு அடையாளம் ஐயா. பெரியோர் முன்னிலையில் வெறுந்தலையுடன்தான் அவர்கள் நிற்க வேண்டும்'' என்று காதில் ரகசியமாக உரைத்தார்.

பாபுவுக்கு இந்த தாழ்மையுணர்ச்சி சிறிதேனும் பிடிக்கவில்லை. எனவே தலைப்பாகையைத் தலையில் மீண்டும் வைத்துக்கொள்ளும்படிச் சைகைமூலம் அம்மனிதருக்கு உணர்த்தினர். யாதும் புரியாது வியப்புற்ற நிலையில் அவர் மீண்டும் தலைப்பாகையைத் தன் தலையில் வைத்துக்கொண்டார். ஆனல் மனவொப்பின்றியே அவர் அவ்வாறு செய்தார். அவர் கூறிய வரலாற்றிலிருந்து அவர் தம்முடைய யஜமானரால் நன்கு நைய அடித்துப் புடைக்கப்பட்டிருந்ததாகத் தெரியவந்தது. அவர் ஒரு ஒப்பந்தத் தொழிலாளி. அதாவது வேறு வகையில் கூறினல் நிரந்தர அடிமை நிலையில் உள்ளவர்.

பாபுவின் குமாஸ்தா ஒரு தமிழர். அவர் அம்மனிதனின் பரிதாப நிலையைக் கண்டு அவரை விசாரிப்பதற்கு முன்வந்தார். அவர் தெரிவித்த தகவலின் பேரில் அம்மனிதரின் பெயர் பாலசுந்தரம் என்பதும், டர்பன்நகரவாசியான பிரபல ஐரோப்பியர் ஒருவரிடம் சேவை செய்ய ஒப்பந்தம் செய்துகொண்டவரென்பதும் தெரியவந்தது. அவருடைய யஜமானர் கோபவெறியில் நிதானமிழந்து அவரை நையப்புடைத்தாரென்றும் அதன் விளைவாக அம்மனிதருடைய [பற்கள் உடைந்துவிட்டன என்றும் அறியப்பட்டது.



பாபு அவரை உடனடியாக டாக்டர் ஒருவரிடம் அனுப்பிவைத்தார். அவருடைய காயங்களின் தன்மை குறித்து அத்தாட்சிப்பத்திரம் ஒன்றைத் தமக்குத் தரும்படியும் டாக்டரிடம் கேட்டுக்கொண்டார். டாக்டர் தாம் அனுப்பிவைத்த அத்தாட்சிப் பத்திரத்தில், அக்காயங்கள் அவர் கையடப்புடைக்கப்பட்டதன் காரண

மாக ஏற்பட்டவையென்று குறிப்பிட்டிருந்தார். பாபு அந்த அத்தாட்சிப் பத்திரத்தைத் தம்முடன் எடுத்துக் கொண்டு, பாலசுந்தரத்துடன் மாஜிஸ்திரேட் ஒருவரிடம் சென்று அவரிடம் எழுத்துமூலமான வாக்குமூலம் ஒன்றையும் சமர்ப்பித்தார். இந்த வாக்குமூலத்தைப் படித்த மாஜிஸ்திரேட் கடுங்கோபமுற்று இவரை இவ்வாறு அடித்துத்துன்புறுத்திய மனிதரைத் தண்டிக்க வேண்டும் என்று கூறி, அவரை நியாய ஸ்தலத்துக்கு வரும்படி சம்மன் உத்தரவொன்றையும் அனுப்பி வைத்தார்.

பாலசுந்தரத்தின் யஜமானரைத் தண்டனைக்குட் படுத்தவேண்டும் என்று பாபு உண்மையில் விரும்பவில்லை. அவருடைய ஊழியத்திலிருந்து பாலசுந்தரத்தை விடுவிக்கவே அவர் விரும்பினார். அந்த அப்பாவி மனிதர், உடலில் படுகாயமடைந்ததோடு மட்டிலுமின்றி, மனோவலிமை முற்றிலும் இழந்த நிலையில் காணப்பட்டார். மீண்டும் தம்முடைய யஜமானனிடம் திரும்ப அவர் மனம் விருப்பவில்லை. பாபு அவருடைய மனோநிலையை முற்றிலும் உணர்ந்திருந்தார். மற்றும் ஒப்பந்தத் தொழிலாளர் பற்றிய சட்டத்தின் கடுமையான நிபந்தனைகள் பற்றியும் அவர் அறிந்திருந்தார். அச்சட்டத்தின் பிரகாரம் ஒப்பந்தத்தொழிலாளர்கள் கிட்டத்தட்ட அடிமை நிலையில்தான் இருந்தனர். அவர்கள் தங்கள் யஜமானருடைய சொத்தாகவே பாவிக்கப்பட்டு வந்தனர். யஜமானன் தம்மிச்சைப்படி அவர்களை ஆட்டி வைக்கலாம். வேலையிலிருந்து விலகிச்சென்றால் அவர்கள்மீது கிரிமினல் வழக்குத் தொடர்ந்து அவர்களைச்சிறையில் வைக்கவும் அச்சட்டம் இடமளித்தது. மொத்தத்தில் அம்முறை மனிதத்தன்மையற்றதாக இருந்தது.

எனவே பாலசுந்தரத்துக்கு நிவாரணம் அளிக்க சட்டத்தின்கீழ் இரண்டே வழிகள்தான் இருந்தன. ஒப்பந்தத் தொழிலாளர்களின் காப்பு அதிகாரி அவ டைய ஒப்பந்தத்தை ரத்துசெய்து வேறு ஒரு யஜமான ரிடம் சேவைசெய்ய அவரை மாற்றலாம். அல்லது அவரை ஊழியத்திலிருந்து விடுவிக்கும்படி அவருடைய யஜமா னரைக் கேட்டுக்கொள்ளலாம்.

இரண்டாவது முறையே சரியென பாபுவின் மன துக்குப்பட்டது. பாலசுந்தரத்தின் யஜமானரிடம் அவர் சென்று "உங்கள் மீது வழக்குத் தொடர்ந்து உங் களுக்குத் தண்டனை வாங்கிக்கொடுக்கவேண்டுமென்று நான் விரும்பவில்லை. நீங்கள் பாலசுந்தரத்தை எவ்வ ளவு கடுமையாக அடித்திருக்கிறீர்கள் என்பதை உணர்ந் திருப்பீர்கள் என்று நினைக்கிறேன். ஆனல் அதே சம யத்தில், நீங்கள் அவனுடைய ஊழிய ஒப்பந்தத்தை வேறு ஒருவருக்கு மாற்ற இசையும் பட்சத்தில், நான் திருப்தியுற்று மேல் நடவடிக்கை எடுக்காமல் விட்டுவிடு வேன்" என்று பாபு கூறினர்.

ஏற்கனவே தம்முடைய மிருகச்செயலுக்காக வருந் திக் கொண்டிருந்த அம்மனிதர் அவ்வேற்பாட்டுக்கு உடனடியாக இணங்கினர். பாபு மீண்டும் தொழிலா ளர் காப்பு அதிகாரியிடம் சென்று நடந்ததை அவருக்கு விவரித்தார். பாலசுந்தரத்துக்குப் புதியதொரு யஜமா னன் ஒருவரைக் கண்டுபிடித்துக் கொடுக்கும் பட்சத்தில் அவ்வேற்பாட்டில் தமக்கு யாதொரு ஆட்சேபமும் இல்லையென்று அவ்வதிகாரி தெரிவித்தார்.

பாபுவின் வேலை அத்துடன் முடியவில்லை. அந்த அப்பாவி மனிதருக்குப் புதிய யஜமானர் ஒருவரைக் கண்டுபிடிப்பதற்காக அவர் அலைய வேண்டியிருந்தது. அச்சமயத்தில் அவர் மிகக் குறைவான ஐரோப்பியர் களையே அறிந்திருந்தபோதிலும், அவர்களில் ஒருவரைத் தம்முடைய ஊழியத்தின்கீழ் பாலசுந்தரத்தை எடுத்துக் கொள்ளும்படிச் செய்தார்.

பாலசுந்தரத்தின் வழக்கு நேட்டாலில் உள்ள ஒப் பந்தத் தொழிலாளர்களுக்கு மகிழ்ச்சியையும், நம்பிக்கை யையும் ஏற்படுத்தியது. தங்களது தரப்பு நியாயத்தை எடுத்துரைத்து, அவர்களுக்கு அநீதி இழைக்கப்படு வதற்கு எதிராகப் போராட, அவர்களுக்கு இப்பொழுது ஒரு ரட்சகர் கிடைத்தது அவர்களுக்குப் பெரிதும் உற் சாகத்தையளித்தது; அதன்பிறகு பாபு அவ்வேழைத் தொழிலாளர்களின் ரட்சகராக மாறினார்.

இச்சம்பவத்தைத் தொடர்ந்து பாபு ஒப்பந்தத் தொழிலாளர்களின் வக்கீலாக மாறுவதென்று முடிவு செய்தார். நசுக்கப்பெற்ற ஏழைமக்களுக்கு நியாயம் கிடைக்கப்பெறச் செய்வதுதான் வக்கீலின் முதலாய கடமையாகும் என்று அவர் கருதினார்.

தென்னாப்பிரிக்காவில் ஒப்பந்தத் தொழிலாளர் களுக்கு நிவாரணம் தேடிக்கொடுக்கவும், அவர்களது ஊழிய நிலைமைகளை மேம்படுத்துவதற்கும் பாபு அரும் பெரும் பாடுபட்டுவந்தார். மேலும் ஊழிய ஒப்பந்தக் காலம் தீர்ந்தபின்னர், சம்பந்தப் பட்ட தொழிலாளர் களுக்கு சுதந்திர பிரஜா உரிமை அந்தஸ்தை வாங்கிக் கொடுக்கவும் அவர் விரும்பினார்.

இந்தியாவுக்குத் திரும்பியபின்னர், ஒப்பந்த ஊழிய முறையை ஒழிப்பதற்குப் பிரச்சாரம் ஒன்றையும் அவர் மேற்கொண்டார். உயரிய நோக்குடைய பலரும், நிறுவனங்கள் சிலவும் அவருக்கு அத்துறையில் ஆதரவளித்தன. இந்த இயக்கத்தில் இந்திய மாதர்கள் கூடக் கலந்துகொண்டனர். இவ்வொப்பந்த முறையை ஒழிக்காவிட்டால் அறப்போராட்டமொன்றைத் துவங்க வேண்டியிருக்கும் என்றும் அவர் அறிவித்தார். ஆனல் 1917-ஜூலை மாதத்துக்குள்ளாக இந்திய சர்க்கார் தாமாகவே அம்முறையை ரத்துசெய்துவிட்டனர்





# 10. உண்மை உரைப்பது சாலவும் நன்று

தென்னுப்பிரிக்காவில் பார்ஸி ரஸ்டம்ஜி என்ற ஒருவர் பாபுவின் கட்சிக்காரராகவும், மற்றும் அவருடைய சகஊழியராகவும் இருந்துவந்தார். ரஸ்டம்ஜி தம்முடைய அந்தரங்க, மற்றும் குடும்ப விஷயங்களில் கூட காந்திஜியின் ஆலோசனையைக் கேட்டு அதன்படி நடந்து வந்தார்.

ஒருசமயம், ரஸ்டம்ஜி பெரும் சங்கடமொன்றில் அகப்பட்டுக்கொண்டார். அவர் பம்பாயிலிருந்தும் கல்கத்தாவிலிருந்தும் பெருமளவில் சரக்குகளை இறக்குமதி செய்துவந்தார். அடிக்கடி அவர் கள்ளக்கடத்தலில் ஈடுபடுவதுண்டு. அவர் சுங்க அதிகாரிகளுடன் சிறந்த முறையில் தொடர்பு கொண்டிருந்தமையால் அவர்கள் ரஸ்டம்ஜியைச் சிறிதும் சந்தேகிக்கவேயில்லை. அவர்களில் சிலர் ரஸ்டம்ஜிக்கு உதவி வந்ததாகவும்கூடக் கூறப்பட்டது.

ரஸ்டம்ஜி ஒருநாள் குலுங்கக் குலுங்க அழுது கொண்டு பாபுவிடம் வந்து சேர்ந்தார். “பாய், உங்களை நான் ஏமாற்றிவிட்டேன். இன்று என்னுடைய குற்றம் வெட்டவெளிச்சமாகிவிட்டது. நான் கள்ளக் கடத்தல்களில் ஈடுபட்டு வந்தேன். இப்பொழுது அது அம்பலமாகிவிட்டது. நான் சிறைக்கு அனுப்பப்பட்டால் சர்வநாசமாகிவிடுவேன். நீங்கள் ஒருவர்தான் என்னை இந்தப் பேராபத்திலிருந்து காப்பாற்றமுடியும்.

இந்தக் கள்ளக்கடத்தல் விஷயம் ஒன்றைத் தவிர வேறு எதையும் உங்களிடமிருந்து இதுவரை நான் ஒளிக்க வில்லை. அது பற்றி இப்பொழுது மிகவும் வருந்து கிறேன்'' என்று கூறினர்.

பாபு அவரைச் சாந்தப்படுத்திவிட்டு, "உங்களைக் காப்பாற்றுவதும், காப்பாற்ற முடியாததும் இறைவ னின் கையில்தான் இருக்கிறது. என்னைப் பொறுத்த மட்டில் என் வழிதான் உங்களுக்குத் தெரிந்த விஷய மாகும். நீங்கள் குற்றத்தைப் பகிரங்கமாக ஒப்புக் கொண்டால் நான் உங்களைக் காப்பாற்ற முடியும்'' என்று கூறினர்.

இவ்வாறு பாபு கூறியது ரஸ்டம்ஜிக்குச் சுருக் கென்றுபட்டது. "உங்களிடம் என் குற்றத்தை ஒப் புக்கொண்டது போதாதா'' என்று கேட்டார்.

"நீங்கள் சர்க்காருக்குத் தவறு இழைத்திருக்கிறீர் கள் எனக்கல்ல; எனவே என்னிடம் நீங்கள் குற் றத்தை ஒப்புக்கொண்டது எப்படி உங்களுக்கு உதவும்?'' என்று பாபு வினவினர்.

அதன்பேரில் ரஸ்டாம்ஜி, பாபுவின் ஆலோ சனைப்படியே நடக்க ஒப்புக்கொண்டார்.

ரஸ்டம்ஜியின் கள்ளக்கடத்தல் நடவடிக்கை கள் வெகுகாலமாக நடைபெற்று வந்தவையாகும். ஆனல் அவற்றில் சம்பந்தப்பட்டிருந்த சரக்குகளின் மதிப்பு அற்ப சொற்ப தொகையிலாகத்தான் இருந்தன.

விவரங்களை விசாரித்தறிந்த பாபு ரஸ்டம்ஜி யிடம், "இவ்வழக்கு நீதிமன்றம் வரையில் எடுத்துச்

செல்லப்படவேண்டியதில்லை. உங்கள்மீது வழக்குத் தொடருவதோ அல்லது உங்களை விட்டுவிடுவதோ சுங்க அதிகாரியின் உசிதத்துக்குரியதாகும். அவர் தம் தரப் பில் சர்க்கார் வக்கீலின் யோசனைப்படி நடந்து கொள்ள வேண்டியிருக்கும். அவர்கள் விதிக்கும் அபராதத்தை நீங்கள் தயங்காது கட்டிவிடவேண்டும்; அனேகமாக அவர்கள் அதற்குச் சம்மதிப்பார்கள் என்று நினைக் கிறேன். அவ்வாறு அவர்கள் சம்மதிக்காவிடில் நீங்கள் சிறைக்குச் செல்லத்தயாராக இருக்கவேண்டும். புரிந்த குற்றம்தான் அவமானத்துக்குரியதேயொழிய அதற் காகச் சிறைக்குச் செல்வது அவ்வளவு அவமானகரமான காரியம் இல்லை. அவமானப்படவேண்டிய செயல் ஏற் கனவே புரிந்தாகிவிட்டது. எனவே சிறைக்குச் செல் வதை அதற்குப் பிராயச்சித்த நடவடிக்கையாகவே நீங் கள் கருதவேண்டும். உண்மையில் கூறப்போனால் மீண்டும் கள்ளக்கடத்தலில் ஈடுபடுவதில்லையென்று நீங் கள் உறுதிகொள்வதுதான் அதற்குச் சரியான பிராயச் சித்தமாகும்.''

ரஸ்டாம்ஜிக்கு பாபுவின் ஆலோசனை வேம்பு போன்று கசப்பாக இருந்தது. அவர் உண்மையில் தைரியமுள்ளவர்தான். ஆனால் அச்சமயத்தில் அவரு டைய தைரியம் அவரைக் கைவிட்டுவிட்டது. அவரு டைய பேரும் புகழும் சிதறிப்போகவிருந்தன; அவர் இத்தனை நாளாக கவனமும் பாடும் பட்டு நிருமாணித்த வாழ்க்கைக் கோபுரம் இடிந்து தூளாகிவிட்டால் அவர் கதி என்னாவது?

இறுதியில் அவர் பாபுவிடம், "நீங்கள் கூறியபடி நான் முற்றிலும் நடப்பதாகச் சொல்லிவிட்டேன்.

இனி நீங்கள் உங்கள் விருப்பம்போலச் செய்வதைச் செய்யலாம்'' என்று கூறினர்.

பின்னர் காந்தி சுங்க அதிகாரியைச் சந்தித்து சிறிதும் மனதில் அச்சமின்றி விவரங்கள் அனைத்தையும் அவரிடம் தெரிவித்ததோடு, ரஸ்டம்ஜியின் சார்பில் மன்ருடவும் செய்தார். ரஸ்டம்ஜியின் கணக்குப் புத்தகங்கள் அனைத்தையும்கூட அவரிடம் சமர்ப்பிக்கத் தயாராக இருப்பதாகவும் கூறினர். ரஸ்டம்ஜி அவருடைய செயல்களுக்கு மிகவும் வருந்துவதாகவும் அவரிடம் தெரிவித்தார்.



சுங்க அதிகாரி பாபுவுக்குப் பதில் அளிக்கையில், "இந்த கிழப்பார்சியிடம் எனக்கு அபிமானம் உண்டு. ஆனல் அவர் முட்டாள்தனமாக நடந்துகொண்டது

எனக்கு வருத்தமாக இருக்கிறது. என்னுடைய கடமை என்னவென்பது உங்களுக்குத் தெரியும். அட்டர்ணி ஜெனரல் இந்த விஷயத்தில் என்ன யோசனை கூறு கிறரோ அவ்வாறுதான் நான் நடக்கவேண்டியிருக்கும். எனவே அவரைச் சம்மதிக்கச் செய்வதில் நீங்கள் முய லுங்கள்'' என்று கூறினர்.

ரஸ்டம்ஜி மீது வழக்குத் தொடரப்படமாட்டாது என்ற வரையில் சுங்க அதிகாரியிடம் அவர் வாக்குறுதி பெற்ருர். அதன்பேரில் அவ்விஷயம் பற்றி விவரித்து அட்டர்ணி ஜெனரலுக்குக் கடிதம் ஒன்றை எழுதினர். அவர் பாபுவின் ஒளிவுமறைவற்ற தன்மையைப் பாராட் டியதுடன், அவ்வழக்கில் ராஜியாகப்போகவும் ஒப்புக் கொண்டார். கள்ளக்கடத்தலில் சம்பந்தப்பட்ட தொகைமதிப்புக்கு இருமடங்கு சமமான தொகையை ரஸ்டம்ஜி அபராதமாகச் செலுத்தவேண்டியிருந்தது; அவர் அத்தொகையை உடனே செலுத்திவிட்டார். மேலும் அவ்வழக்கு சம்பந்தப்பட்ட விவரங்கள் அனைத் தையும் எழுதி, அக்காகிதத்தைக் கண்ணுடிச்சட்டத்தில் பொருத்தி தனது காரியாலயத்தில் ஓரிடத்தில் தொங்க விட்டுக்கொண்டார். அது தம்முடைய வாரிசுதாரர் களுக்கும், தமது சக வியாபாரிகளுக்கும் எப்பொழுதும் ஒரு எச்சரிக்கையாக இருந்துவரவேண்டும் என்பதே அவர் எண்ணமாகும்.



## 11. வழக்கறிஞர் தொழிலில் ஈடுபட்டது

வழக்கறிஞர் தொழிலில் ஈடுபடுபவர்கள் சில சமயங்களில் பொய் சொல்லும்படியான நிர்ப்பந்தம் ஏற்படும் என்பதை காந்தி சிறுவராக இருந்தபோதே உணர்ந்திருந்தார். ஆயினும் அவர் இத்தொழிலில் ஈடுபட்ட போது அவர் எவ்வகையிலும் பாதிக்கப்படவில்லை. ஏனெனில் பொய் கூறுவதன் மூலம் பணமோ பதவியோ பெற அவர் சிறிதும் விரும்பவில்லை.

பாபு வழக்கறிஞர் தொழிலை மேற்கொண்டு தென்னாப்பிரிக்காவில் தொழில் நடத்திவருகையில், ஒருபொழுதும் பொய் கூறுவதில்லை யென்பதையே அவர் பிரதான லக்ஷியமாகக் கொண்டிருந்தார்; அவரது லக்ஷியம் பல முறை சோதனைக் குள்ளாகியது. தன்னுடைய எதிர்க் கட்சியாளர்களின் வழக்கறிஞர் அவர்களுடைய சாட்சிகளுக்கு எவ்வாறு சாட்சியமளிக்கவேண்டும் என்று நன்கு போதித்திருந்ததுபற்றி பாபு நன்கறிவார். ஆனால் அதே சமயத்தில் வழக்கில் வெற்றி பெறுவதற்கென சாட்சிக்காரர்களைப் பொய் கூறும்படி அவர் ஒருபொழுதும் அவ்வாறு போதித்ததில்லை.

தன்னுடைய கட்சிக்காரரின் வழக்கு உண்மையிலேயே நியாயமானதாக இருந்தால்தான், தான் அதில் வெற்றி பெறவேண்டும் என்பதே பாபுவின் உள்ளார்ந்த விருப்பமாக இருந்துவந்தது. வழக்கின் வெற்றி தோல்வியைப் பொறுத்த அடிப்படையில் அவர் ஒருபொழுதும் தமது கட்டணங்களை நிர்ணயிக்கவில்லை.

பொய் வழக்கை எடுத்துக்கொள்ளவோ, பொய் சாட்சிகளை ஜோடிக்கவோ தாம் ஒருபொழுதும் உடன் படுவதில்லை என்பதை பாபு புதிதாக வருகிற கட்சிக் காரர்கள் ஒவ்வொருவரிடம் எச்சரிப்பது வழக்கமாகும்.

ஒரு சந்தர்ப்பத்தில் பாபு, ஜோஹன்னஸ்பர்க்கில் மாஜிஸ்திரேட் ஒருவர்முன்பு வழக்கு ஒன்றை நடத்திக் கொண்டிருந்தார். தமது கட்சிக்காரர் பொய் விவரங் கள் கொடுத்து தம்மை ஏமாற்றியது பற்றி இவருக்குப் பிறகு தெரியவந்தது; அவரது கட்சிக்காரர் சாட்சியம் கூறும்பொழுது திக்குமுக்காடியதை அவர் கண்டார். எனவே வழக்கை மேற்கொண்டு தொடராமல் அதைத் தள்ளிவிடுமாறு அவர் மாஜிஸ்திரேட்டைக் கேட்டுக் கொண்டார். பொய் வழக்கு ஒன்றைத் தம்மிடம் கொண்டுவந்தது பற்றி அவர் தம் கட்சிக்காரரிடம் கடிந்துகொண்டார். பாபுவின் எதிர்கட்சி வக்கீல் அது கண்டு பெரிதும் ஆச்சரியத்தில் ஆழ்ந்தார். காந்திஜீயின் நேர்மையுணர்ச்சியைக் கண்டு மாஜிஸ்திரேட் பெரிதும் மகிழ்ச்சியுற்றார்.



வாய்மையைக் கிஞ்சித்தும் வழுவாது கடைப்பிடித்து வந்தது பாபுவுக்குப் பேரும் புகழையும் கொண்டுவந்தது; நேர்மையான கட்சிக்காரர்களே அவரிடம் வரவாரம்பித்தனர். பாபு இந்தியராக இருந்த போதிலும், வெள்ளைக்கார வழக்கறிஞர்கள் அவரைப் பெரிதும் நேசித்து வந்தனர்.

தென்னாப்பிரிக்காவில் பாபு வழக்கறிஞர் தொழில் நடத்திவந்ததில் சமுதாயத்துக்குச் சேவை செய்யும் நோக்கத்தையே பிரதான குறிக்கோளாகக் கொண்டு வந்தார்.



# 12. தன் கையே தனக்கு உதவி

தன் கையே தனக்கு உதவி என்பதில் பாபு பெரிதும் நம்பிக்கை கொண்டிருந்தார். அவர் இங்கிலாந்தில் மாணவராக இருந்தகாலத்தில் தன்னுடைய காலை உணவைத் தாமே சமைத்துச் கொள்வது வழக்கமாக இருந்து வந்தது.

தென்னாப்பிரிக்காவில் பாபு எளிய வாழ்க்கையையே மேற்கொள்ள விரும்பினார். வாழ்க்கைச் செலவுகளைக் குறைத்துக்கொள்ளுவதற்காக பல அலுவல்களைத் தாமே மேற்கொள்ளவேண்டும் என்பதையும் அவர் உணர்ந்தார். முதலில் தமது உடைகளைத் தாமே



தோய்த்துக் கொள்வதென்ற முடிவுக்கு அவர் வந்தார். அக்கலையைத் தாம் பயின்றதுடன், கஸ்தூரிபாய்க்கும் கற்றுக் கொடுத்தார். நாளடைவில் அவர் அக்கலையில் தேர்ந்தவர் ஆனார்.

இதேபோன்று பாபு முடிவெட்டும் கலையிலும் தேர்ச்சி பெற்றார். பிரிட்டோரியாவில் உள்ள வெள்ளைக்கார முடிதிருத்தும் தொழிலாளி ஒருவர் பாபுவின் முடியைத் திருத்த ஒரு சமயம் மறுத்தார். அதுகண்டு மிகவும் மனம் நொந்து உடனடியாக முடிதிருத்த சாதனங்களை வாங்கித் தாமே தமது முடியை வெட்டிக் கொள்ளலாயினார். முன்முடியை ஒருவாறு திருத்திக் கொள்ள முடிந்தபோதிலும் பின்முடி பற்றிய மட்டில் அவரால் சரியாக வெட்டிக்கொள்ள முடியவில்லை. இறுதியில் அக்கலையிலும் அவர் தேர்ந்தவர் ஆனார்.

இவ்வாறு தன் கையே தனக்கு உதவி என்னும் குறிக்கோள் பாபுவின் இளவயதிலேயே முளைவிட்டு வளர்ந்திருந்தது. அது பின்னர் விருக்ஷமாக வளர்ந்து அவரது பிற்கால வாழ்க்கையில் பேருதவியாக இருந்தது.



# 13. உடல் உழைப்பில் ஈடுபாடு

தாழ்மையிலும் கீழ்மையான தொழிலாளர்களுடன் பாபு தம்மை ஒன்றுபடுத்திக்கொண்டுவந்தார். பேச்சில் மட்டிலுமின்றி செயலிலும் அவர் அதைக் காட்டிவந்தார்.

"இடைவிடாது உழைப்பில் ஈடுபட்டுவருவதிலேயே இவ்வாழ்க்கையில் மகிழ்ச்சியுறுகிறேன்." என்று அவர் கூறுவது வழக்கம்.

அவர் ஊழியர்களுக்கு முன்னணியில் நின்று ஊழியராகவும் தொண்டராகவும் சதா சேவை செய்துவந்தார். "எவர் ஒருவர் தம்மைப் பணிவுணர்ச்சியுடன் தாழ்மைப் படுத்திக்கொள்ளுகிறாரோ அவரே உயர் பதவியில் அமர்த்தப்படுவார்." என்ற பைபிள் நல்லுரைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக அவர் விளங்கிவந்தார்.

தென்னாப்பிரிக்காவில் போனிக்ஸ் ஆசிரமத்திலும், டால்ஸ்டாய் பண்ணையிலும் அங்கு விஜயம் செய்யும் பிரமுகர்களுக்கு அவ்வப்போது விருந்து உபசாரங்களும் வரவேற்புகளும் கொடுக்கப்படுவதுண்டு; அத்தகைய சந்தர்ப்பங்களில் பாபு முன்வரிசையிலோ, பிரதான விருந்தாளியின் அண்மையிலோ ஒருபொழுதும் காணப் படமாட்டார்.

அவரைச் சமையல் அறையில் எடுபிடிகாரியங்களில் ஈடுபட்டு வருவதையும், விருந்தாளிகளைக்கவனித்து உபசரித்துவருவதையும் அப்பொழுது காணலாம்.

மேலும் வேலைக்காரர்களுடன் அன்யோன்யபாவத்துடன் அவர் பழகி வந்தார்.

கோபால கிருஷ்ண கோகலே தென்னாப்பிரிக்காவுக்கு விஜயம் செய்தபோது அவருடைய பிடித்தமான உத்தரீயத்துக்கு பாபுதான் கஞ்சியிட்டு இஸ்தரி போட்டுக்கொடுத்தார். அவர் அந்தக் காரியத்தை செய்யமுடியுமா என்பதில் கோகலேயுக்கு முதலில் சந்தேகமாகத் தான் இருந்தது. ஆனால் பாபு அவ்வேலையை மிகச் சிறப்பாக செய்தது கண்டு பெரிதும் மசிழ்ச்சியுற்று, பாபு ஒரு தலைசிறந்த சலவையாளர் என்றும் பாராட்டினார்.

செருப்புத்தைக்கும் கலையிலும் பாபு நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். தென்னாப்பிரிக்காவில் சிறைச்சாலை ஒன்றில் இருந்துவரும் காலத்தில் ஜனரல் ஸ்மட்ஸுக்கென ஒரு ஜோடி செருப்பை அவர் தம் கையினாலேயே தைத்துக் கொடுத்தார். சிறைச்சாலையில் தான் முடிதிருத்தும் தொழிலாளியாகக்கூட பணியாற்றிவந்ததாக பின்னர் ஒரு காலத்தில் இந்தியாவில் முடிதிருத்தும் தொழிலாளர்கள் ஒருசிலருடன் உரையாடிக்கொண்டிருக்கையில் கூறினார்.

சபர்மதியில் ஏற்படுத்திய தமது ஆசிரமத்திலும் கூட பாபு மிகவும் கீழ்மையான பணிகளைச்செய்து சிறந்த முன்மாதிரியாக விளங்கிவந்தார். இதர ஆசிரமவாசிகளைப் போலவே மாவு அரைப்பது, கிணற்றிலிருந்து தண்ணீர் சேந்துவது போன்ற காரியங்களையும் அவர் செய்து வந்தார்.

கக்கூஸுகளைச் சுத்தப்படுத்தும் வேலையைக்கூட அவர் இழிவான காரியமாகக் கருதவில்லை. "அத்தகைய

துப்புரவு வேலையைப் பணத்துக்காகச் செய்யும்போது அது ஒரு தியாகமோ சேவையோ ஆகாது'' என்று அவர் கூறுவார். "ஆனால் சேவா உணர்ச்சியுடன் அந்த ஊழியத்தைச் செய்து வந்தால் அதில் ஒரு தனி மதிப்பு இருக்கிறது.''

"எந்த ஒரு ஊழியமும் இழிவானதோ அவமானகரமானதோ இல்லை. நான் கக்கூஸுகளை சுத்தப்படுத்தச் வில்லையா? அதில் எத்தகையதொரு அகௌரவமும் இல்லை. அதற்கு மாறாக அதைச் செய்வது பெரும் சேவையேயாகும். ஒவ்வொரு அன்னையும் தினந்தோறும் காலை குழந்தையை கழுவி விட்டு சுத்தப்படுத்துவதை நாம் அகௌரவமாகவா கருதுகிறோம்? ஏன் சுத்திகரிப்புத் தொழிலாளியையும் நாம் அவ்வாறு கருதி வரக் கூடாது?'' என்று பாபு வினவுவார்.

அவசியம் ஏற்படும்போது இத்தகைய துப்புரவு வேலையைச்செய்ய மேற்கொள்ளுவதற்கு பாபு ஒருபொழுதும் தயங்கியதில்லை என்பதை அப்துல் கபர்கான் நன்கு விளக்கியுள்ளார். சேவாகிராமத்தைச் சேர்ந்த சுத்திகரிப்புத் தொழிலாளி வேலையைவிட்டு ஓடிவிட்டதாக பாபுவிடம் ஒருமுறை அறிவிக்கப்பட்டது. பாபு உடனே கூறினார். "நாம் போகலாம் வாருங்கள்; வாளியையும் துடைப்பத்தையும் எடுத்துவந்து அந்த இடத்தைச் சுத்தப்படுத்துங்கள். பின்னர் அவர் கான் சாப் உள்பட தொண்டர்கள் பலரை அழைத்துச் சென்று அந்த கக்கூஸுகளைச் சுத்தப்படுத்துவதில் ஈடுபட்டார்.



கடவுளின் பெயரில் மேற்கொள்ளப்படும் எந்த வேலையும் சரி, அவருடைய சேவைக்கென அர்ப்பணிக்கப் படும் எவ்வேலையும் சரி, அற்ப சொற்பமானதல்ல என்று பாபு கருதி வந்தார்.

உடல் உழைப்பு அனைத்திலும் பணிவுணர்ச்சியும் மகிழ்ச்சியும் உள்ளது. அத்தகைய உழைப்புக்கு ஒரு தனி மதிப்பும் இருக்கிறது என்று பாபு கூறுவார்.



# 14. பானு பாபாவின் செருப்புக்கள்

ரேவாகிராமத்திலுள்ள காந்திஜியின் ஆசிரமத்துக்கு பானுபாபா என்னும் கந்தல் உடையணிந்த ஏழைக் கிழவன் ஒருவன் வந்துசேர்ந்திருந்தான். அவன் நாள் முழுவதும் கடுமையாக உழைத்துவந்தான். குப்பை கூளங்களை அகற்றித்துப்புரவு செய்வதுபோன்ற எளிமை யான பணிகளை அவன் செய்துவந்தான். தினந்தோறும் ஒருமுறைதான் ஆகாரம் உட்கொண்டு வந்தான். முது கிழவனாக இருந்தபோதிலும் சிறந்த உடல் நலத்தை அவன் பெற்றிருந்தான். அவன் பற்களும் உறுதியாக இருந்தன. தினந்தோறும் அன்றாட வேலையை முடித்த பின்னர் அவன் பெருமகிழ்ச்சி அடைவது வழக்கம். வெய்யிலாக இருந்தாலும்சரி, கடு மழைபெய்தபோதி லும் சரி, துப்புரவு அதிகாரியின் பணியைப்போன்ற தான தனது கடமைகளைச் சிறிதேனும் புறக்கணிக்காது செவ்வனே செய்துவந்தான். மழைக்காலங்களின்போது கூட அவன் தனது மாமூலான கிழிந்த உடைகளையே அணிந்து வந்தான். அது அவனை எவ்வகையிலும் பாதித்ததாகத் தெரியவில்லை.

ஒருநாள் அவனுக்கு ஒரு ஜோடி செருப்பு பெரி தும் தேவையாக இருந்தது. பகல் நேரத்தில் வேலை செய்யும்போது அவனுக்குச்செருப்பு தேவைப்படவில்லை. ஆனால் இரவு நேரங்களிலோ, மழை பெய்யும்போதோ வெளியில் செல்ல நேரிட்டபோது வெறுங்காலுடன் அவனால் செல்ல இயலவில்லை. கழிவு அட்டைகளைக் கொண்டு கரடுமுரடான செருப்பு ஒன்றைத் தனக்கு

அவன் தைத்துக்கொண்டிருந்தான். ஆனால் ஒருநாள் கனத்த மழைக்குப் பின்னர் அந்த செருப்புகள் உபயோகமற்றதாகிவிட்டன.

"பாபு, பழசாகிப்போன ஒரு ஜோடி செருப்பு ஏதேனும் உங்களிடம் இருக்குமா? என்று அவன் கேட்டான்.

"ஏன்? பழசாகிப் போன ஜோடிதான் வேண்டுமா? என்று பாபு பதில் கேள்வி கேட்டார்.

"எனக்குப் புதிய செருப்பு எதற்கு வேண்டும்? எவ்வாறு மீதப்படும் உணவைக் கொண்டு நான் ஜீவித்து வருகிறேனோ அதே போன்று பழைய செருப்புகளும் எனக்குப்போதுமானதாகும்.'' என்று புன்முறுவலுடன் அவன் பதில் அளித்தான்.''

"உனக்கெனப் புதிதாக ஒரு ஜோடி செருப்பைத் தருவிக்கட்டுமா?''

"என் மீது தயவு வையுங்கள்; எனக்கு இந்த நாகரீக காலணிகளோ மிதியடிகளோ பிடிப்பதில்லை. வெளித் தையல்போட்ட எனது பழைய "ஓகாய்'' செருப்புகள் தான் வேண்டும்.''

"அப்படியே ஆகட்டும். நால்வாடியிலுள்ள நமது தோல் தொழிற்சாலையில் அதைத் தைத்துக்கொள்ளலாம்.''

"இந்த விநோதமான செருப்புக்களை அவர்களால் செய்ய முடியுமா? நால்வாடிக்குச் சென்று அவற்றை எப்படிச் செய்வதென்று நான் அவர்களுக்குக் காண்பிக்கட்டுமா? ஆனால் ஒரு நாளைக்குக்கூட என்னால் வேலையை விட்டுப் போக முடியாதே?

பாபு அவனை நோக்கிப் புன்முறுவல் புரிந்தார்.''

“நீயும் உன்னுடைய வேலையை விட்டுப் போக வேண்டாம். செருப்புத் தைப்பவரையும் இங்கு கூப்பிடவேண்டாம். அந்த அட்டையை என்னிடம் கொடு. நான் செருப்புக்கு வடிவமைத்துத் தருகிறேன்: நமது செருப்புத்தைப்பவரிடம் அதைக் காட்டித் தைக்கச் சொல்லலாம்.

இவ்வாறு கூறிக்கொண்டே, பானுபாபா வியப்புடன் பார்த்து நின்று கொண்டிருக்கையிலே பாபு உடனே அந்த வடிவமைப்பு வேலையில் ஈடுபடலாயினர். தாம் பார்த்து முப்பது ஆண்டு காலத்துக்குமேல் ஆகி விட்டிருந்த அந்த பழைய “ஒகாய் செருப்பின் வடிவமைப்பை அவர்மீண்டும் நினைவுக்குக் கொண்டுவந்தார். ஒருசில நிமிஷங்களில் அந்த அட்டையைக்கொண்டு மாதிரி செருப்பை ஒன்றையும் அவர் தயாரித்துவிட்டார். பாபு தயாரித்த வடிவமைப்பின் உதவியுடன் பானுபாபாவின் செருப்பு ஜோடி தயாரிக்கப்பட்டது.

பானுபாபா தமது கந்தலாடைகளை அணிந்து கொண்டு புதிதாகத் தயாரிக்கப்பட்ட “ஒகாய் செருப்புகளைக் காலில் மாட்டிக்கொண்டு அன்றாட வேலைக்கு வீறுநடை போட்டுச் செல்வதைக் கண்டு பாபு பெரிதும் மகிழ்வுற்றார்.



# 15. உழைப்பின் மேன்மை

ஒவ்வொருவரும் அவர்களது கைகளைக் கொண்டு வேலை செய்யவேண்டும் என்பதில் பாபு தீவிர நம்பிக்கை கொண்டிருந்தார். அதில் எத்தகையதொரு இழிவோ, தாழ்வோ இல்லை என்றும், உழைப்புக்குத் தனித்ததொரு சிறப்புண்டு என்றும் அவர் கூறுவார்.

பாபுவின் ஆசிரமத்துக்கு வந்திருந்த ஒருவர் அவரிடம் கேட்டார். "பாபு, உழைப்பின் மேன்மைபற்றி நீங்கள் உபதேசிப்பது அதை ஒரேயடியாகத்தூக்கி வைப்பதாக இல்லையா? நீங்கள் அதற்கு அளவுக்கு மீறிய முக்கியத்துவம் அளிக்கிறீர்களே ஏன்?

பாபு அதற்குப் பதிலளிக்கையில் "இல்லவேயில்லை; நான் அதுபற்றிக் கொண்டுள்ள கருத்தையேதான் கூறி வருகிறேன். உழைப்புக்கு எவ்வளவு முக்கியத்துவம் அளித்தாலும் தகும். பகவத் கீதையில் கூறப்பட்டுள்ள நல்லுரையையே நானும் கூறிவருகிறேன். கீதையில் கிருஷ்ண பகவான் கூறுகிறார் 'உறக்கம் இன்றி உழைப்பில் நான் சதா ஈடுபட்டு வராவிட்டால் மானிட சமுதாயத்துக்கு ஒரு தவறான வழியைக் காட்டியவன் ஆவேன்.' அதனால்தான் நானும்கூட உயர் அலுவல்களில் ஈடுபட்டுவரும் நபர்களைக்கூட இராட்டையில் நூல் நூற்கும்படி வேண்டுகோள் விடுத்துவருகிறேன். அவர்கள் அவ்வாறு உழைப்பில் ஈடுபட்டால் நாட்டின் இதர மக்களுக்கு அது ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கிவரும்.

பாபுவைப் பார்க்க வந்த மனிதர் ஒரு கணம் சிந்தனையில் ஆழ்ந்தார். "பகவான் புத்தரை நீங்கள் சந்திக்க நேர்ந்தால் இதே போன்று கூறுவீரா?"

மனதில் சிறிதும் தயக்கமின்றி "நான் அவ்வாறே கூறுவேன்" என்று பாபு பதிலளித்தார்.

"அப்படியானால் துக்காராம், ஞானதேவர் போன்ற மகான்கள் பற்றி நீங்கள் என்ன கூறுகிறீர்கள்."

"அவர்கள் பற்றி தீர்ப்புக்கூற நான் யார்?"

வந்தவருக்கு ஒன்றும் புரியவில்லை.

"ஆனால் நீங்கள் புத்தர் பற்றித் தீர்ப்பு அளிப்பேன் என்று கூறுகிறீர்களா?" "நான் அவ்வாறு கூறவில்லை. பகவான் புத்தர் போன்ற ஒருவரை நேரில் சந்திக்கும் நல்வாய்ப்பு கிடைத்தால், உழைப்பின் மேன்மை பற்றி உபதேசிக்காமல் அவர் ஏன் சிந்தனையின் சிறப்புபற்றி உபதேசித்து வந்தார் என்று கேட்கச் சற்றும் தயங்கமாட்டேன்" என்று பாபு கூறினார். "நீங்கள் பின் சொன்ன மகானகளைக்காண வாய்ப்பு கிடைத்தாலும் இதையேதான் அவர்களிடம் கேட்பேன்."



## 16. சிறு குழந்தைகளிடம் பேரபிமானம்

குழந்தைகள் என்றால் பாபுவுக்குக் கொள்ளை ஆசை; "குழந்தைகள் எனது உயிர்நாடியாவர். அவர்களைத் தங்கு தடையின்றி என்னிடம் வரவிடுங்கள்," என்று அவர் கூறுவது வழக்கம். சிரித்த முகத்துடன், குதூகலமாக அவர்களுடன் அவர் விளையாட்டுக்களில் ஈடுபடுவார்; குழந்தைகளும் தமது பங்கில் அவரைப் பெரிதும் கவர்ந்துவந்தனர்.

ஆரம்ப நாட்களிலிருந்தே குழந்தைகளைப் பேணுவதிலும், அவர்களைச் சீராட்டுவதிலும் பாபுவுக்குப் பெரிதும் நாட்டம் இருந்து வந்தது. தென்னாப்பிரிக்காவில் அவர் நிறுவிய போனிக்ஸ் பண்ணை ஸ்தலத்தில் அவர் ஸ்தலவாசிகளின் சிறு குழந்தைகளை தன் கையில் ஏந்திப்பேணுவது வழக்கம். அச்சந்தர்ப்பங்களில் அவர் முகம் பிரகாசமடைந்து, கண்களில் அன்பொளி வீசும்.

இன, மத, ஜாதி வேறுபாடு எதுவும் இன்றி எல்லாக் குழந்தைகளிடமும் ஒருப்போன்று அவர் அன்பு காட்டிவந்தார். அக்குழந்தைகளிடையே, வெளிறிய முகத்துடன் நோய்வாய்ப்பட்ட நிலையில் இருந்த காஸிம் என்னும் பெயருடைய முஸ்லிம் குழந்தையொன்று, அவருடைய அபிமானத்தைப் பெரிதும் பெற்றிருந்தது. அவர் மாலை நேரம் முழுவதும் அக்குழந்தையைத் தமது துடைகளில்போட்டுக்கொண்டு சீராட்டுவார்; அடிக்கடி குனிந்து உடம்பு வலிக்கிறதா என்றும் அன்புடன் வினவுவார்.

மற்றொருமுறை ஜுலு இனத்தவரைச் சேர்ந்த சின்னஞ்சிறு பெண்ணொருத்தி பாபுவின் அபிமானத்தைப் பெரிதும் பெற்றாள். பேரமைதி நிலவிய மாலைநேரத்தில் பாபு அக்குழந்தையைச் சீராட்டிக் கொண்டு, பக்திப்

பாடல் ஒன்றைப் பாடிக்கொண்டிருப்பார். மானிட இனம் அனைத்தவரையும் அனுக்கிரகிக்கும்படி கடவுளுக்குப் பிரார்த்தனை செலுத்தி அவர் எவ்வாறு காலங் கழித்துவந்தார் என்பதை தீனபந்து ஆண்ட்ரூஸ் விவரித்துள்ளார். “அங்கு ஆப்பிரிக்காவிலே கிறிஸ்துவை நான் நிதரிசனமாகக் கண்டேன்; அவ்விரட்சகர் ஆசிரமத்தில் உலவிவருவது போலவும் மாலை உணவுக் காலத்தில் எங்களுடன் வீற்றிருப்பது போலவும், லோக கர்த்தரின் பிரார்த்தனையில் எங்களுடன் கலந்துகொள்வது போலவும் ஒரு சித்திரம் என் மனதில் பிரதிபலித்தது.”

பாபுவின் வேறு ஒரு சகபாடியும், சக ஊழியரும் ஆன ஹென்றி போலக் என்பவர் இதுபோன்ற மற்றொரு சம்பவம்பற்றிவிவரித்துள்ளார். சின்னஞ்சிறுகுழந்தைகள் விஷயத்தில் தாய்மை அன்பை அவர்களிடம் பாபு எவ்வாறு காட்டிவந்தார் என்பதற்கு அது சிறந்த உதாரணமாக விளங்குகிறது. பாபு ஒருமுறை போலக்கின் நண்பர்களான ஒரு ஐரோப்பிய தம்பதியரின் விருந்தினராக வந்திருந்தார். அவர்களிடம் இருந்த ஒரு சின்னஞ்சிறு குழந்தை இரவு முழுவதும் சதா அழுதுகொண்டே இருந்தது; பாபு அப்பொழுதுதான் சிறையிலிருந்து விடுதலையாகி வெளிவந்திருந்தார். சிறையில் அவர் பெரிதும் சிரமத்துக்குள்ளாகியிருந்தார். எனவே அவருக்கு அமைதியும் ஓய்வும் அவசியமாக இருந்தது. தன்னை உபசரித்த தம்பதியினர் குழந்தையின் தொல்லை காரணமாக ராத்தூக்கமின்றி கஷ்டப்படுவதை அவர் கண்டார். மறு இரவு தனது நண்பர்கள் துயிலுறச் சென்றபிறகு, பாபு ஓசைப்படாமல் அறையில் பிரவேசித்து குழந்தையைத் தன் அறைக்கு எடுத்துச் சென்றார். அங்கு அதைச் சீராட்டித் தூங்கவைத்ததுடன், இரவுமுழுவதும் அதன் தேவைகளைக் கவனித்து வந்தார்.



குழந்தைகளைச் சீராட்டுவதில் அவர்களை ஐரோப்பியர், இந்தியர், ஆப்பிரிக்கர் என்று ஒருபொழுதும் பாகுபாடு வேறுபடுத்தியதில்லை. ஒரு சமயம் டர்பன் நகரத்தில் மேயர் ஊர்வலமொன்றில் குழந்தைகளும் கலந்து கொண்டு சென்றதை அவர் கவனித்தார். அந்த ஊர்வலத்தில் ஆப்பிரிக்கக் குழந்தைகளோ, கறுப்பர்குழந்தைகளோ எவரும் காணப்படவில்லை. அதை அவர் பெரிதும் ஆட்சேபித்து, “கறுப்பு நிறத்தவரின் குழந்தைகளாகப் பிறந்ததன் பாவத்துக்கு அவர்களுக்கு அளிக்கப்படும் தண்டனையா அது? ‘சின்னஞ்சிறு குழந்தைகள் அனைவரையும் என்னிடம் வரும்படி விடுங்கள்’ என்று புனிதர் கிறிஸ்து கூறியதை தென்னாப்பிரிக்கர்கள் பொய்ப்பிக்க விரும்புகின்றனரா” என்று அவர் கோபமுற்றுக் கேட்டார்.

—:O:—

# 17. குழந்தைகளிடையே குழந்தையாக விளையாடியது

குழந்தைகளைக் கவரும் கலையை பாபு நன்கு அறிந்திருந்தார். அதுதான் குழந்தைகளிடையே குழந்தையாக நடந்துகொள்வது. இந்த வித்தை பாபுவுக்கு இயற்கையாகவே அமைந்திருந்தது. அவர் உள்ளத்தில் குழந்தையாகவே இருந்தார். மனிதருடேயும், இயற்கையினிடையேயும் காணப்படுகிற சுசீல குணங்களுக்கும் அழகுணர்ச்சிக்கும் உள்ளத்தை அளிப்பது அவருக்கு இயல்பான பண்பாக அமைந்திருந்தது.

தென்னுப்பிரிக்காவில் நிறுவப்பட்ட டால்ஸ்டாய் ஆசிரமத்தில், குழிகளைத் தோண்டுவது, மரம் வெட்டுவது, பளு எடுத்துச் செல்வது போன்ற பண்ணை வேலைகளில் பெரும்பகுதியில் பையன்களும், பெண்களும் ஈடுபட்டு வந்ததை பாபு கண்டார். இந்த வேலைகள் அவர்களுக்குப் போதிய அளவு உடற்பயிற்சிக்கு வகைசெய்வதாக இருந்தன. மேலும் சிறுவர்கள் அத்தகைய வேலையைச் செய்வதில் தீவிர உற்சாகமும் சாட்டிவந்தனர். அதைச் செய்வதில் பெருமிதமும் கொண்டனர். மற்றும் அவர்கள் வேலைகளில் மட்டிலும் அல்லாமல், விளையாட்டுக்களிலும் கூட பெரிதும் ஆர்வம் காட்டிவந்தனர். பாபு தினந்தோறும் சில மணி நேரம் அவர்களுடன அவ் விளையாட்டுக்களில் கலந்துகொள்வதும் வழக்கம். அவர்களில் சிறு குழந்தைகளுக்கு அவர் கதைகளும் கூறுவது உண்டு.

ஆசிரமத்தில் குழந்தைகளுடன் அளவளாவுவதற்குத் தமக்குப் போதிய அவகாசம் கிடைக்காதது பற்றி பாபு பெரிதும் வருந்துவார். அவர்கள் ஒவ்வொருவரையும் தனித்தனியே பெயரிட்டுக் கூப்பிட்டு அவர்கள் விளையாட்டில் கலந்து கொள்ளவும் அவர்களுடைய நேசத்தையும், நம்பிக்கையையும் பெறவும் அவர் பெரிதும் விரும்பினார். அவர் சிறைத்தண்டனை அனுபவித்துவந்த காலங்களில் அவர்கள் ஒவ்வொருவருக்கும் தனித் தனியே கடிதம் எழுதுவது வழக்கம். அவர்கள் தங்கள் கடிதங்களில் கேட்டிருந்த பல விஷயங்களுக்கு விவரமாக விளக்கங்களையும் அளித்துவந்தார்.

பாபு குழந்தைகளிடம் பலவகைப்பட்ட வேலைகளை வாங்குவது வழக்கம்; அவர்களைத் தமது "வானர சேனை'' என்றும் அவர் அன்புடன் குறிப்பிடுவார். லங்கைக்கு பாலம் அமைக்க பிரபு ஸ்ரீராமனுக்கு உதவிய அவரது குரங்குசேனையைப் போன்று அவர்கள் சேவை செய்து வந்தனர். குழந்தைகளை வேலையில் ஈடுபடுத்தத் தூண்டும் பல தந்திரங்களையும் பாபு அறிந்திருந்தார். உதாரணமாக 1896-ம் ஆண்டில் ராஜ்கோட்டில், சில குழந்தைகளுக்கு ஆப்பிரிக்க நாடுகளின் தபால்தலைகளை அன்பளிப்பாக வழங்கி அதற்குப் பதிலாக அவருடைய துண்டுப்பிரசுரமொன்றை மடித்து ஒட்டி விநியோகத்துக்கு அனுப்பிவைக்கும் பணியை அவர்களிடம் ஒப்படைத்தார்.

தாம் உரை நிகழ்த்திய பொதுக்கூட்டங்கள் அனைத்திலும், சிறுவர்கள்பால் அவர் விசேஷ அக்கறை காட்டுவார். மக்கள் தனக்கு அன்பளிப்பாக வழங்கும் பழங்

ளை கூட்டத்துக்கு வந்த சிறுவர் சிறுமியர்களிடையே வினியோகிப்பார். அவருக்குக் கூட்டங்களில் அணிவிக்கப்பெற்ற மாலைகள் இறுதியில் மேடையில் அமர்ந்திருந்த சிறுகுழந்தைகளின் கழுத்துக்களை அலங்கரிக்கும்.

பாபு குழந்தைகளுக்குப் பெரிதும் முக்கியத்துவம் அளித்துவந்தார். அவர்களை நாட்டின் செல்வங்களென அவர் வர்ணிப்பது வழக்கம். நாட்டின் விடுதலைப் போராட்டங்களில், மற்றும் ஊர்வலங்களில் சிறுவர் சிறுமியர்கள் கலந்துகொண்டும், தேசீயப் பாடல்களைப் பாடி மகிழ்வித்தும், கொடிவணக்கங்களில் கலந்து கொண்டும், குண்டாந்தடியடிக்குள்ளாகியும் வீரசேவை புரிந்தபோது பாபு பெரிதும் மகிழ்ச்சியுறவில்லையா? அச்சம்பவங்கள் குறித்து அவர் "தங்களது விளையாட்டுப் பொம்மைகளையும், தங்களது காற்ருடிகளையும், தங்களது பட்டாசு வெடிகளையும் கைவிட்டுவிட்டு, சுயராஜ்யப்போராட்டத்தின் வீரர்களாக இச்சிறுவர் சிறுமியர்களால் எப்படிச் சேவை செய்ய முடிந்தது? நமது விடுதலைப்போராட்டம் சாத்வீகப் போராட்டமாக அமைந்திருந்ததே அதற்குக் காரணமாகும்'' என்று அவர் கூறுவார்.

மற்றும் சிறுவர் சிறுமியர்கள் பாபுவின் வசிய சக்தியினுல் எவ்வாறு கவரப்பட்டு வந்தனர் என்பது பற்றியும், ஏழை ஹரிஜனங்களுக்காக அவர் நன்கொடை கேட்டபொழுது அவர்கள் தங்களது சின்னஞ்சிறு ஆபரணுதிகளை எவ்வாறு கழற்றிக் கொடுத்தனர் என்பது பற்

றியும் விவரிக்கும் சம்பவங்கள் கணக்கிலடங்காது. நாம் பின்னும் சிறந்ததான உலகத்தை உருவாக்கவேண்டின், பிற்காலத்தில் ஒரு நாள் நாட்டை ஆளக்கூடிய] சிறுவர் சிறுமியர்களிடையே அதற்கு வித்திட்டு வரவேண்டு மென்று கூறிவந்தார்.

பாபு இவ்வாறு தமது மந்திரக்கோலான அன்பு வெள்ளத்தைக் கொண்டு சிறுவர் சிறுமியர்களைக் கவர்ந் தது வந்ததுடன், குழந்தைகளிடையே அவரும் ஒரு குழந்தையாகவே நடமாடிவந்தது மிகவும் குறிப்பிடத் தக்கதாகும்.



# 18. இங்கிலாந்தில் ஈஸ்ட் எண்ட் சேரிக் குழந்தைகளிடையே பாபு

இந்தியாவுக்கு விடுதலையளிக்க வேண்டியதற்கான அவசியம் பற்றி வட்ட மேஜை மகாநாட்டில் எடுத்துக் கூறுவதற்காக, பாபு 19 1-ம் ஆண்டில் இங்கிலாந்து சென்றார். அங்கு அவர் லண்டனில், கிங்ஸ்லிஹால் என்னுமிடத்தில் தங்கவிரும்பினார். அந்த ஸ்தலம் ஈஸ்ட் எண்ட் என்னும் நகரப்பகுதியில் ஏழைத் தொழிலாளர்களின் வாசஸ்தலங்களுக்கிடையே அமைந்திருந்தது.

பாபு அங்கு வரப்போகிறார் என்ற தகவல் கேட்டு அந்த ஸ்தலத்தைச் சேர்ந்த தொழிலாளர்களிடையே ஒரு பரபரப்பு காணப்பட்டது. பாபு கிங்ஸ்லி ஹால் வந்துசேர்ந்தவுடன் யார் அவரை முதன் முதலில் வரவேற்பது? சிறுவர் சிறுமியர்களில் எவர் எவரை அதற்குத் தயார்படுத்துவது என்பதே அவர்களுக்கு விசேஷப் பிரச்சனையாக இருந்தது.

அதுவிஷயம் பற்றி ஒரு சிறுமி "நம்முடைய சின்னஞ்சிறு பிராங்கியை அதற்குத் தெரிந்தெடுங்கள்; அவன்தான் சதா காந்தியைப் பற்றியே பேசிக்கொண்டிருக்கிறான்; முன்பு ஒரு ராத்திரி பாபுவைப்பற்றி அவன் கனவு ஒன்று கண்டானாம்; பிறகு விழிப்புற்று "மிஸ்டர் காந்தி எங்கே என்று கேட்டானாம்" என்று கூறினார்கள்.

ஆகவே பாபு வந்தவுடன் தனது சிறிய நண்பர்களின் சார்பில் அவரை வரவேற்கும் நல்வாய்ப்பு சிறுவன் பிராங்க்கிக்குக் கிட்டியது. பாபு அந்த ஸ்தலத்தில் தங்கியிருந்த காலத்தில் அவர் அலுவல்களை முடித்து ஓய்வாக இருந்தபோதெல்லாம் ஸ்தலத்தைச் சேர்ந்த சின்னஞ்சிறு குழந்தைகள் அனைவரும் அவரைச் சூழ்ந்து கொள்வார்கள்; ஆசிரமக் குழந்தைகளுடன் எவ்வாறு தங்கு தடையின்றி சகஜமாக இருந்தாரோ அதேபோன்று இக்குழந்தைகளுடனும் அவர் சகஜமாக அளவளாவினார். அவர்கள் பல விஷயங்கள் பற்றி பாபுவிடம் கேள்விகள் கேட்டனர்: பாபு அவர்களுக்குத் தக்கவகையில் பதிலளித்து, அவர்களிடையே வாய்மை, அன்பு ஆகிய நற்குணங்கள் பற்றிப் போதித்தும் வந்தார்.

ஒரு சிறுவன் "காந்திஜீ உங்களுடைய மொழி என்ன?" என்று வினவியதற்குப் பதிலளிக்கையில், ஆங்கிலத்திலும், இந்திய மொழிகளிலும் பொதுப்பட்டதாக காணப்படுகிற வார்த்தைமூலங்கள் பற்றி பாபு எடுத்துரைத்தார். மொழிகள் அனைத்தும், ஒரே தந்தையின் குழந்தைகள் எனபதை அவர்களுக்கு எடுத்துரைக்க அவர் விரும்பினார். எல்லா மொழிகளிலும் வார்த்தைகள் ஒருப்போன்று இருந்ததைக் கண்டு ஒரு பையன் பெரிதும் ஆச்சரியத்தில் ஆழ்ந்தான். அப்படியானால் நாம் எல்லோரும் ஒரே இனத்தவர் என்பதையே அது எடுத்துக்காட்டுகிறது" என்றும் அவன் கூறினான். அதைக்கேட்டு எல்லோரும் சிரிப்பில் ஆழ்ந்தனர். பாபு கூறினார்; "நாம் எல்லோரும் ஒரு குடும்பத்தைச்சேர்ந்தவர்கள் என்பது நிரூபணமாகிவிட்டது. எனவே நாம் நண்பர்களாக இருக்க வேண்டும்."

பின்னர் அச்சிறுவர் சிறுமியர்கள், இந்தியாவின் பருவநிலை பற்றியும், இந்தியக் குழந்தைகள் எவ்விளையாட்டுகளைப் பெரிதும் விரும்புகின்றனர் என்பது பற்றியும் அறியவிரும்பினர்.

ஒரு பையன் அவர் அணிந்திருந்த உடை பற்றிக் குறிப்பிட்டு, அவர் ஏன் அத்தகைய உடையை அணிந்துள்ளார் என்பது பற்றியும், அவர் ஏன் ஈஸ்ட் எண்ட் பகுதியில் அவர்களிடையே வசித்துவருகிறார் என்பது பற்றியும் வினவினான். பாபு அதற்கான காரணங்களை அவர்களுக்கு விளக்கிக்கூறினார். முனபு ஒரு சமயம் இதே கேள்வியை பத்திரிகை நிருபர் ஒருவர் கேட்டபொழுது "நான் ஈஸ்ட் எண்ட் பகுதியையே பெரிதும் விரும்புகிறேன்; முக்கியமாக அதில் தெருக்களில் நடமாடும் சிறுபிள்ளைகளைப் பெரிதும் நேசிக்கிறேன். ஏனெனில் அவர்கள் என்னை இன்முகத்துடன் வரவேற்கின்றனர்.'' என்று பாபு பதிலளித்தார்.

ஈஸ்ட் எண்ட் குழந்தைகளுக்கு அஹிம்சைத் தத்துவம் பற்றி எடுத்துரைக்க பாபு விரும்பினார்· யாராவது ஒருவர் தம்மை அடித்தபொழுது அவர்களை எவரேனும் திருப்பி அடித்திருக்கிறீர்களா என்று அவர் அப்பையன்களை கேட்டபோழுது பத்துப் பன்னிரண்டு பேர் தங்கள் கைகளைத் தூக்கினார்கள். பாபு பின்னர் அவர்களுக்கு அஹிம்சைத் தத்துவத்தின் கொள்கை பற்றி விளக்கினார். தம்முடைய இளவயது சம்பவம் ஒன்று பற்றி அவர்களுக்கு விரித்துரைத்தார். அவர் ஒருமுறை தம்முடைய தகப்பனாருடைய தோட்டத்தில் பழம் பறிப்பதற்காக மரமொன்றில் ஏறிக்கொண்டிருந்த சமயத்தில் அவருடைய மூத்த சகோதரன் அவர் காலைப் பிடித்திழுத்துக் கீழே தள்ளிவிட்டான். அழுதுகொண்டே

தன்னுடைய தாயாரிடம் சென்று அதுபற்றிப் புகார் செய்தபொழுது அவருடைய தாயார் சகோதரனைத் திருப்பி அடித்துவிடும்படி அவரிடம் கூறினார். அடிக்குப் பதிலடி கொடுக்கும்படி தாயார் கூறிய யோசனையை கேட்டு அவர் ஆச்சரியமுற்றார். "அம்மா, அண்ணாவைத் திருப்பி அடிக்கும்படி என்னிடம் கூறுவதற்குப் பதிலாக என்னை அவன் ஹிம்சிக்காமல் நீங்கள் தடுக்கவேண்டுமே இல்லையா?" என்று தனது தாயாரிடம் திருப்பிக்கேட்டார். அச்சம்பவத்தை ஈஸ்ட் எண்ட் பையன்களுக்கு விவரித்துவிட்டு, "நான் உண்மையில் என்ன செய்திருக்க வேண்டும்" என்று அவர்களைப் பார்த்து வினவினார். "அவனுடன் சமாதானம் செய்துகொண்டு மீண்டும் சினேகிதமாக இருந்திருக்க வேண்டும்" என்று அவர்கள் பதில் கூறினர்.

ஈஸ்ட் எண்ட் பையன்களிடையே பாபு ஒன்றிய உணர்ச்சியுடன் காணப்பட்டார்.. குதூகலத்துடன் காணப்பட்ட அத்தகைய குழந்தைகள் அவரைப் புடை சூழ்ந்துகொண்டது அவருக்குப் பெரிதும் மகிழ்ச்சியை அளிப்பதாகவே இருந்தது. அங்கு அவர்களிடையே தாம் ஒரு அன்னியர் என்ற உணர்ச்சியே அவருக்கு ஒரு பொழுதும் ஏற்பட்டதில்லை.

தங்களிடையே வாழ்ந்துவந்த பாபுவைப் பற்றி ஈஸ்ட் எண்ட் சிறுமியர்களின் மனதில் பிரதிபலித்த எண்ணங்கள் பல வகையிலாக இருந்தன. அவர்கள் பாபுவைப் பற்றிப் பல கட்டுரைகளை எழுதினர். பத்து வயதுச் சிறுமி யொருத்தி, "காந்தி மாமா" என்னும் கட்டுரையொன்றில் வருமாறு எழுதியிருந்தாள். "அஸிஸியைச் சேர்ந்த புனித பிரான்ஸிஸ் மகான் அஸிஸியின் ஏழைமனிதரென அழைக்கப்பட்டு வந்தார். எல்லாவகை

களிலும் காந்தியும் அவரைப் போன்றே யுள்ளார். அவர்கள் இருவரும் குழந்தைகள், பறவைகள், பூக்கள் போன்ற இயற்கை அம்சங்களைப் பெரிதும் நேசிக்கின்றனர். பிரான்ஸிஸ் மகான் இப்புவியில் இருந்தசமயத்தில் அணிந்தது போன்று காந்தியும் அரைத்துணியையே உடுத்தியிருக்கிறார்.



"காந்தி, பிரான்ஸிஸ் மகான் இருவரும் பணம் படைத்த வர்த்தகர்களின் புத்திரர்கள் ஆவர். ஓரிரவு பிரான்ஸிஸ் மகான் தம்முடைய சீடர்களுடன் உண வருந்திக்கொண்டிருந்த சமயத்தில், ஏழை இத்தாலியர்கள் பற்றிய எண்ணம் அவர் மனதில் உதித்தது. அவர் உடனே வெளியே ஓடிவந்து தம்முடைய பணக்கார உடைகளையும் பணங்களையும் ஏழை எளியவர்களுக்குக் கொடுத்துவிட்டு காந்தியைப்போன்று கந்தல் துணிகளையே உடுத்திக்கொண்டார்,

"பிரான்ஸிஸ் மகான் தம்முடன் சில சீடர்களைச் சேர்த்துக்கொண்டார். அவர்கள் மரங்களில் கிடைக்கும் பொருள்களைக்கொண்டு குடில்களை அமைத்துக் கொண்டனர். காந்தியும் அவ்வாறே செய்தார். ஏழை இந்திய மக்களுக்காக அவர் தமது தனம் அனைத்தையும் தியாகம் செய்துவிட்டார். லண்டனுக்கு வருவதற்காக காந்தியின் மக்கள் அவருக்கு அரைத்துணியை வழங்கினர். கிங்ஸ்லி ஹாலுக்குச் சென்ற குழந்தைகளிடம், தாம் அத்துணியை வாங்குவதற்குக்கூடப் பணம்படைத்திருக்கவில்லை என்று அவர் கூறியிருக்கிறார்."

"திங்கட்கிழமை தோறும் அவர்களுடைய மதச் சம்பிரதாயங்களின்படி காந்தி மௌனம் அனுஷ்டித்து வருகிறார். காந்தியின் பிறந்த நாளன்று அவருக்கு மரத்தினாலான விளையாட்டு சாமான்கள், மெழுகுவர்த்திகள், இனிப்புப் பண்டங்கள் ஆகியவை அன்பளிப்பாகக் கிடைத்தன. அவர் ஆட்டுப்பால், நிலக்கடலை மற்றும் பழ வகைகள் ஆகியவற்றைக்கொண்டே ஜீவித்து வருகிறார்."

பத்து வயதுப் பையன் ஒருவன் பாபுவைப் பற்றிய தனது கட்டுரையில் வருமாறு எழுதியிருந்தான்.

"சாதிஜி ஒரு இந்தியர்; அவர் 1890-ல் லண்டனில் சட்டமாணவராகக் கல்வி பயின்றார். தமது நாடு யேப்பட்ட நிலையையடையும் பொருட்டு அவர் தம் தொழிலைத் துறந்தார்."

"இந்தியா தன்னுடைய வர்த்தகத்தைத் திரும்பப் பெறுவதற்கு வகைசெய்யும் பொருட்டு இந்திய வட்ட மேஜை மகாநாட்டில் கலந்துகொள்வதற்காக அவர் இப்பொழுது இங்கிலாந்து வந்துள்ளார். பிராமணர்கள் அவர்களுடைய கோயில்களில் தீண்டாதார்களை அனுமதிக்கும்படிச் செய்வதில் அவர் முனைந்துள்ளார்."

"நல்ல சாப்பாட்டைக் கண்டறியாத மக்கள் சுமார் 6,00,000 பேர் இந்தியாவில் உள்ளனர். காந்திஜி தனக்குச் சொந்தமானவற்றையெல்லாம் துறந்துவிட்டு, ஏழை இந்தியர்களில் ஒருவராக இருப்பதற்கு முயன்று வருகிறார். அதனால்தான் அவர் அரைத்துணியையே உடுத்தி வருகிறார்."

"ஆட்டுப்பால், பழவகைகள், காய்கறிகள் ஆகியவையே அவரது உணவாகும். உயிர்வதையை அவர் விரும்பாததால் அவர் மாமிசமோ, மீனோ சாப்பிடுவதில்லை. காந்தி ஒரு கிறிஸ்துவ இந்தியராவார். காந்திஜி பருத்தியைத் தானே நூலாக நூற்றுக்கொள்ளுகிறார். இங்கிலாந்தில் தினந்தோறும் அவர் ஒரு மணி நேரம் நூல் நூற்கிறார். ஆஸ்பத்திரியில் இருந்துவந்த காலத்திலும் அவர் இவ்வாறே நூல் நூற்றுவந்தார். லங்காஷயரில் உள்ள பருத்தி ஆலைகளுக்கு விஜயம் செய்துவிட்டு அவர் இப்பொழுதுதான் திரும்பியுள்ளார். காந்திஜி ஞாயிற்றுக்கிழமை மாலை 7 மணியிலிருந்து திங்கட்கிழமை மாலை 7 மணிவரை பிரார்த்தனையில் ஆழ்ந்திருப்பார்: அச்சமயத்தில் நாம் அவரிடம் பேசினால் அவர் பதில் பேசமாட்டார். அவர் எங்கள் பகுதிக்கு விஜயம் செய்தபொழுது எங்கள் வீட்டுக்கு வந்திருந்தார். அச்சமயம் என் தாயார் துணிகளுக்கு இஸ்திரி போட்டுக்கொண்டிருந்தார். அது கண்டு அவர் 'நீங்கள் உங்கள் வேலையை நிறுத்தவேண்டாம்; நானே அவ்வேலையைச் செய்திருக்கிறேன்' என்று கூறினார். நான் அவருடன் கை குலுக்கியிருக்கிறேன். "ஹலோ குட்பை" என்ற ஆங்கில வார்த்தைகளுக்கு நமஸ்கார் என்று இந்திய மொழியில் கூறவேண்டும்."

பாபு லண்டனில் தங்கியிருந்த காலத்தில் சிறுவர் விடுதியொன்றுக்கும், ஈஸ்ட் எண்ட் பகுதியில் உள்ள சிகிச்சை நிலையமொன்றுக்கும், சிசுபராமரிப்பு நிலைய மொன்றுக்கும் விஜயம் செய்தார். அங்கு அவர் கண் டது அனைத்தும் அவரைப் பெரிதும் கவர்ந்தது. "இவ் வனுபவத்தை நான் எப்பொழுதும் நினைவில் வைத்திருப் பேன்'' என்றும் அவர் கூறினர்.

குழந்தைகளை அவர்களது இல்லங்களிலும், பொதுக்கூட்ட ஸ்தலங்களிலும் சந்தித்தபொழுது காந்தி பெரிதும் மகிழ்ச்சியுற்ருர். இத்தகைய கூட்டமொன் றில், அங்குள்ள சிறுவர் சிறுமியர்கள் சிலர், இந்தியக் குழந்தைகளுக்கு நட்புணர்ச்சியைத் தெரிவிக்கும் செய்தி யொன்றை ஒரு சிறு பிரதிநிதி கோஷ்டி மூலம் அனுப்பி வைப்பதென்றும் முடிவு செய்தனர்.



இங்கிலாந்தில் பாபுவின் பிறந்ததினத்தன்று உள்ளத்தைத் தொடும் சம்பவமொன்று நிகழ்ந்தது. ஈஸ்ட் எண்ட் பகுதியைச் சேர்ந்த சிறவர் சிறமியர்கள் தங்களது கைச்செலவு பணத்தைத் திரட்டி அவருக்கென சில சின்னஞ்சிறு வெகுமதிகளைக் கொண்டு வந்திருந்தனர். அவர் இந்தியாவுக்குத் திரும்பிச் செல்லும் சமயம் வந்தபொழுது ஸௌத்ஹாம்ப்டன் செல்வதற்காக விக்டோரியா ஸ்டேஷனில் ரயில்வண்டியில் ஏறிக்கொண்டார். அச்சமயம் தன்னை உபசரித்து வழியனுப்பவந்த ம்யூரியல் லெஸ்டர் என்பவரிடம் "விளையாட்டு சாமான்கள் யாவும் சரியாக உள்ளனவா'' என்று கேட்டார். 'பௌள' பகுதியில் சிசு நிலயத்தைச் சேர்ந்த குழந்தைகள் தமக்கு அன்பளிப்பாக வழங்கிய கம்பளியிலாலான சிறு பிராணிகளின் பொம்மைகள், வர்ண மெழுகுவர்த்திகள், வரைபடங்கள் ஆகியவற்றையே மனதில் நினைத்து அவர் அவ்வாறு கேட்டார்'' நான் இங்கு வரும்பொழுது என்னுடன் கொண்டுவந்த சாமான்களைத் தவிர இவையொன்றைத்தான் என்னுடன் இந்தியாவுக்குத் திருப்பியெடுத்துச் செல்லுகிறேன்'' என்றும் அவர் கூறினர்.

பாபு இந்தியா திரும்பியவுடன் கைது செய்யப்பட்டு, யெரவாடா சிறையில் வைக்கப்பட்டார். அங்கிருந்து பௌள பகுதி குழந்தைகளுக்கு நீண்ட கடிதமொன்றை வரைந்தனுப்பினர். அதில் அவர் எழுதியதாவது:

நான் உங்களைப் பற்றி அடிக்கடி நினைத்துக் கொள்ளுகிறேன். நாம் ஒன்று கூடியிருந்த அந்த பிற்பகலின்போது என்னுடைய கேள்விகளுக்கு நீங்கள் பளிச்சென்று அளித்த பதில்கள் எனக்கு நினைவுக்கு

வருகின்றன. நீங்கள் எனக்கு அனுப்பியிருந்த அன்புப் பரிசுகளுக்கு நன்றி தெரிவித்துக்கடிதம் ஒன்றை அனுப்ப, கிங்ஸ்லி ஹாலில் இருந்தபோது எனக்கு அவகாசம் கிடைக்கவில்லை. இந்தப் பரிசுகளை ஆசிரமக் குழந்தைகளுக்கு வழங்க நினைத்திருந்தேன். அவர்கள் பற்றி ம்யூரியல் மாமியிடம் நீங்கள் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள். நான் விரும்பியபடி அந்த ஆசிரமத்தை என்னால் அடையமுடியவில்லை. உங்களுக்கு என்னிடமிருந்து சிறைச்சாலையொன்றிலிருந்து கடிதம் வருவது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும் இல்லையா?

சிறைச்சாலையில் இருந்தபோதிலும் ஒரு கைதியாக இருப்பதாகவே நான் உணரவில்லை. நான் தவறு செய்ததாக உணரவில்லை. உங்கள் எல்லோருக்கும் என் அன்பு ஆசிகள்."

இப்படிக்கு
உங்கள் காந்தி மாமா



# 19. என்னருமைக் குழந்தைகளே...

கடிதங்கள் எழுதுவதில் பாபுவுக்குச் சலிப்புத் தட்டுவதேயில்லை; அவர் எழுதிய கடிதங்களில் நூற்றுக்கணக்கானவை குழந்தைகளுக்கு எழுதியவனவாகும். ஆசிரமத்தில் இருந்தாலும் சரி, வெளிஸ்தலங்களில் இருந்தாலும் சரி, இந்தியாவிலோ, வெளிநாட்டிலோ எல்லாவிடங்களிலிருந்தும் அவருக்குச் சிறுவர் சிறுமியர்கள் எழுதும் கடிதங்களுக்கு பதில்களைத் தப்பாது அனுப்புவது பாபுவின் வழக்கமாக இருந்துவந்தது. அவருக்குக் கடிதம் வரைந்த எந்த ஒரு குழந்தையும் பதில் கிடைக்காது ஏமாந்து போனதில்லை.



ஆசிரமத்தில் பல குழந்தைகள் இருந்தனர். இந்து, சாரதா, மாதவலால், மங்களா, ஆனந்த், ஜேகோர், புஷ்பா, மோஹன், வனமாலா இன்னும் வேறு பலர் ஆசிரமத்தில் வசித்துவந்தனர். அவர்கள் ஒவ்வொருவருக்கும்

தனித்தனியே கடிதம் எழுதுவது பாபுவுக்கு சாத்திய மாக இருக்கவில்லை. முக்கியமாக அவர் நாடு முழு வதிலும் பயணம் செய்துகொண்டிருக்கையில் அது சாத் தியமாக இருக்கவில்லை. அவர் சிறைச் சாலையில் இருந்துவந்த காலத்தில்தான் அவர்களுக்குக் கடிதம் எழுத அவருக்கு அவகாசம் கிடைத்தது; சில சமயங் களில் எல்லோருக்குமாகச் சேர்ந்து அவர் கடிதம் எழுது வார்; சில சமயங்களில் தனித்தனியேயும் கடிதங்கள் அனுப்பிவைப்பார்.

யெரவாடா சிறைச்சாலையில் அவர் இருந்தபோது அவர் ஒரு முறை பின்வரும் கடிதத்தை ஆசிரமக் குழந் தைகளுக்கு அனுப்பிவைத்தார்.

"பறவைகளுக்குச் சிறகுகள் இல்லாவிடின் அவற்றி னல் பறக்கமுடியாது; சிறகுகள் இருப்பின் நம் எல்லோ ராலும் பறக்க இயலும். சிறகுகள் இன்றி நீங்கள் பறக் கக் கற்றுக்கொண்டால் உங்கள் பிரச்சினைகள் அனைத் தும் தீர்ந்துவிடும். நான் உங்களுக்கு போதிப்பேன். எனக்குச் சிறகுகள் இல்லை. ஆனல் தினந்தோறும் சிந் தனையிலே உங்களிடம் பறந்துவருகிறேன். இங்கு பாருங்கள்; அதோ குட்டி வனமாலா நிற்கிருள். இங்கு ஹரி நிற்கிருன்; அதோ தர்மகுமார் நின்றுகொண்டிருக் கிருன். நீங்கள் கூட சிந்தனையின் மூலம் என்னிடம் பறந்துவரமுடியும். சிந்திக்கத் தெரிந்தவர்களுக்கு வாத் தியார் எவரும் தேவையில்லை. வாத்தியார் நமக்கு வழி காட்டியாகத்தான் இருக்கமுடியும்; நமக்குச் சிந்தனு சக்தியை அவர் அளிக்க முடியாது. சிந்தனு சக்தி நமது உள்ளிடையே இருக்கிறது. ஞானமுள்ளவர்களுக்கு நற் சிந்தனைகள் எளிதில் உதிக்கும்.

தனக்குக் கடிதம் எழுதிய குழந்தை ஒவ்வொன்றுக்கும் எவ்வாறு பதில் எழுத வேண்டும் என்பது பாபுவுக்கு நன்கு தெரியும். ஒரு குழந்தைக்கு அவர் வருமாறு எழுதுவார்: "உன் கையெழுத்து திருந்தவேண்டும்; கறைகள் எதுவும் இருக்கக்கூடாது." மற்ருெரு குழந்தைக்கு "நாட்குறிப்பு ஒன்றை எழுதிவா; உன்னுடைய சிந்தனைகளையும்: செயல்களையும் சீரிய கிரமத்தில் வைத்துக்கொள்ள அது பெரிதும் உதவியாக இருக்கும்.." என்று அவர் எழுதுவார். மழைக்காலத்தில் பூச்சிபொட்டுக்களின் தொந்தரவு குறித்துப் புகார் செய்து எழுதியிருந்த குழந்தைக்கு அவர் வருமாறு எழுதினர். "மழைக்காலத்தின்போது எண்ணற்ற பூச்சி பொட்டுக்கள் ஜனிக்கின்றன. நீ நத்தைகளைச் சேகரிக்க முயலவேகூடாது. பூச்சியினங்கள் கடவுளின் படைப்புக்கள். அவை ஏன் படைக்கப்படுகின்றன என்பது நமக்குத் தெரியாது."

கடவுள் பற்றி விளக்கம் கேட்டு வினவிய ஷாமலுக்கு அவர் பின்வருமாறு எழுதியிருந்தார்.

"சகல வகைப்பட்ட ஜீவராசிகளிலும் கடவுளைக் காண முயலுவதே அவரை வணங்குவதற்கான சிறப்பான முறையாகும்; அதன் மூலம் நாம் அந்த ஜீவராசிகளுக்கு அன்புடன் சேவை செய்துவருவோம்."

பாபுவினுல் குழந்தைகளுக்கு நீண்ட கடிதங்கள் எழுதமுடியவில்லை. அதுபற்றி குழந்தைகளுக்கு அவரிடம் சில சமயம் கோபம் கோபமாக வரும். உதாரணமாக ஒரு குழந்தை எழுதிய கடிதத்தில் "பாபுஜி, நீங்கள் எப்பொழுதும் கீதையைப் பற்றிக் கூறுகிறீர்கள். கீதையில் அர்ஜுனன் ஒரு கேள்விதான் கேட்கிருன். பக

வான் கிருஷ்ணனே முழு அத்தியாயமாக பதில் அளிக்கிறார். நீங்களோ நாங்கள் பக்கம்பக்கமாகக் கேள்வி கேட்டு எழுதுவதற்கு ஒரே வார்த்தையிலோ ஒரே வாக்கியத்திலோ பதில் கூறி முடித்துவிடுகிறீர்கள். இது நியாயமா பாபு!''? அதற்குத் தாம் அளித்த பதிலில் பாபு கூறியிருந்ததாவது:

"சரி, கிருஷ்ண பகவான் ஒரு அர்ஜுனனுக்குத் தான் பதில் சொல்லவேண்டியிருந்தது; நானே பல அர்ஜுனர்களுக்குப் பதில் சொல்லவேண்டியிருக்கிறதே? எனக்குச் சற்றுக் கருணை காட்டவேண்டாமா? இந்த பதில் கேட்டு சிறுவர் சிறுமியர்கள் விழுந்துவிழுந்து சிரித்தனர்.

தமக்குக் கடிதம் எழுதிய ஒவ்வொரு குழந்தையின் பாலும் அவை எழுதிய கடிதங்களிலும் பாபு ஆழ்ந்த அக்கறை காட்டிவந்தார். தம்முடைய அனுபவங்கள் பற்றியும் அவர்களுக்கு எழுதுவார்; உதாரணமாக அவர் யெரவாடா சிறையிலிருந்து எழுதிய கடிதமொன்றில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்.

"எனக்கு நீ கடிதம் எழுத முயன்றது சிறப்பான காரியமாகும். நீ அனுப்பியிருந்த கலைமான்தான் எவ்வளவு சிறந்ததாக இருந்தது? அதன் கொம்புகள்தான் எவ்வளவு அழகாக இருந்தன? வெள்ளாடுகள் தினந்தோறும் கறக்கப்படுவதற்குக் கொண்டுவரப்பட்ட போதிலும் நான் அவற்றுடன் விளையாடுவதில்லை என்று கூற வருத்தமாக இருக்கிறது. அவை வரும்பொழுது நான் ஏதாவது வேலையில் ஈடுபட்டிருப்பதனால் நான் அவற்றுடன் விளையாடுவதில்லை. ஆமாம்; இங்கு பூக்கள் சில உள்ளன. ஆனால் விசேஷமாகக் குறிப்பிடும்படியாக அவை இல்லை. இங்கு தரையில் கற்கள் நிறைந்துள்

ளன. சிறைச்சாலைகளில் பூந்தோட்டங்கள் அமைப்பது சாத்தியமில்லை''

வேறு ஒருமுறை அதே குழந்தை பறவைகளுடன் தான் தமாஷாகப் பொழுது போக்கியது பற்றிக் கடிதம் எழுதியிருந்ததற்கு பாபு பின் வருமாறு பதில் எழுதியனுப்பினர். "பறவைகளை சிநேகிதம் பிடிக்க நீ முயன்று வருவதை அறிந்தேன்; நாங்கள் இங்கு ஒரு பூனையுடனும் அதன் குட்டிகளுடனும் சிநேகிதமாக இருக்கிறோம். நான அதை என் தங்கை என்றும் அழைத்துவருகிறேன். அப்பூனை தன் இளம்குட்டிகளை அன்புடன் தழுவி விளையாடுவதைப் பார்க்க மிகவும் மகிழ்ச்சிகரமாக உள்ளது. பல காரியங்களைச் செய்து காட்டி அது அவற்றைப் பழக்கிவருகிறது.''

குழந்தைபோன்ற ஆர்வத்துடன் அவர் வேறு ஒரு குழந்தைக்கு எழுதிய கடிதத்தில் "உனக்கும், துர்கிக்கும் வர்ணக் கடுதாசுகளை ஜாக்கிரதையாகச் சேர்த்து வைத்திருக்கிறேன்'' என்று அறிவித்திருந்தார். மற்றொரு குழந்தைக்கு எழுதிய கடிதத்தில் தம்முடைய தனிப்பட்ட பாணியிலே விளையாட்டுப் போக்கிலும் அதே சமயத்தில் ஆழ்ந்த கருத்துக்களை உடையதாகவும் அவர் எழுதியிருந்தார்.



# 20. உயிர் இனங்களிடம் இரக்க உணர்ச்சி

"உயிரினங்கள் அனைத்தும் ஒன்று என்பதில் நான் அசையாத உறுதி கொண்டிருக்கிறேன்...கீழ் வகைப் பட்ட உயிரினங்கள் மீது நாம் ஆதிபத்தியம் செலுத்தி வருவது, அவற்றைக் கொல்வதற்காக அல்ல. அதற்கு மாருக பரஸ்பர நலன்தான் பிரதானமாகக்கொள்ளப் படவேண்டும். ஏனெனில் என்னைப்போன்று அவற் றுக்கும் ஒரு ஆன்மா நிச்சயம் இருப்பதாக நான் கருது கிறேன்" என்று பாபு கூறுவார்.



உதாரணமாக பசுவை எடுத்துக்கொள்ளுங்கள் — பாபு அதை கருணையின் கவித்துவரூபமாக கருதிவந்தார். அவரது கண்களில் பசு கீழ்வகைப்பட்ட உயிரினங்களுக்கு பிரதிநிதியாக இருந்து வந்தது. விவசாயிகள் பல விஷயங்களுக்குக் கால் நடைகளையே பெரிதும் நம்பியுள்ளனர். அதனால்தான் இந்துக்கள் பசுவைப்புனிதமானதொருபொருளாகக்கருதிவருகின்றனர். பசுவினிடத்திலும் இதர பிராணிகளிடத்திலும் எத்தகையதொரு கொடூரத்தன்மையையும் காட்டிவரலாகாது. காட்டுவதும் தவறானதாகும் என்று பாபு கருதிவந்தார்.

பசுவுக்கு எந்த ஒரு வகையிலும் தீங்கு விளைவித்தாலும் பாபுவினால் பொறுக்க முடியாது. கடைசித்துளிவரை பாலைக் கறப்பதில் அதற்கு துன்பம் ஏற்படுவதனால் ஆவின் பாலை சாப்பிடுவதையே அவர் நிறுத்திவிட்டார். பசு வதையையும் அவர் எதிர்த்து வந்தார். எப்படிப் பார்த்தாலும் அது தவறானதொரு காரியமாகும். பசுவைச் சிறந்த வகையில் பராமரித்து வருவதே அதன் வதையைத்தடுப்பதற்கான சிறந்த முறையாகும். நலிந்துபோன பிராணிகளைக்கூட பராமரித்து வரவேண்டும் என்று நமக்கு மதம் போதிக்கிறது.

பிராணிகளை வதைப்பதை, முக்கியமாக தீங்கு விளைவிக்காத பிராணிகளைக் கொல்லுவதை நியாயமானதென்று பாபு கருதவில்லை; "நான் எப்படி பசு ஒன்றைக்காப்பதற்காக மானிடன் ஒருவனைக்கொல்ல மாட்டேனோ அதேபோன்று மனித உயிரை அது எவ்வளவு மதிப்புமிக்கதாய் இருந்தபோதிலும் காப்பதற்காக பசுவைக் கொல்லமாட்டேன்.''

மருத்துவ விஞ்ஞான சோதனைகளின் பெயரில் வலியோ உபாதையோ தரக்கூடியதும் சிதைவையோ

மரணத்தையோ விளைவிக்கக்கூடியதுமான சோதனைகளுக்கு பிராணிகளைப் பயன்படுத்துவதை பாபு எதிர்த்து வந்தார். இளம் வயதில் தாம் பிற்காலத்தில் ஒரு டாக்டராக வேண்டுமென்று பாபு ஆசை கொண்டிருந்தார். ஆனால் தவளைகளையோ வேறு இதர பிராணிகளையோ அறுத்து சோதனை செய்வதற்கு அவர் மனம் ஒப்பவில்லை; ஆதலால் அந்த எண்ணத்தைக் கைவிட்டு விட்டார்.

பிராணிகளுக்குச்சேவை செய்வதில் பாபு ஆழ்ந்த அக்கறை காட்டிவந்தார். மனிதன் தனக்குள்ளான துன்பம் பற்றி பிறருக்கு விளக்கிக் கூறமுடியும், அத்துன்பத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளவும் அவனால் இயலும்; ஆனால் பிராணிகளால் அவ்வாறு செய்ய முடியாது. எனவே பிராணிகளுக்குக் கொடுமை விளைவிக்காமல் இருப்பது மிகச் சிறப்பான மத அனுஷ்டானமாகும் என்று அவர் கூறுவார்.



## 21. உயிரினங்கள் அனைத்தும் ஒன்றே

பாபு தமது இளம் பிராயத்திலிருந்தே செடிகொடிகளைப் பராமரித்து வருவதில் மிகுந்த ஈடுபாடு காட்டிவந்தார். அவருடைய வீட்டில் தோட்டம் போடுவதற்கு வசதியான நிலப்பகுதி ஏதும் இல்லை. ஆகவே சட்டிகளில் செடிகள் பலவற்றை வளர்த்து வீட்டின் தளத்தின்மீது அவற்றை வைப்பார். அவரது குடும்பம் ராஜ்கோட்டுக்கு இடம் மாறிய பொழுது அங்கு வீட்டின் வெளி முற்றத்தில் அவருக்கென ஒரு சிறு பூந்தோட்டம் கிடைத்தது.

பள்ளியிலிருந்து திரும்பியவுடன் மாலை நேரங்களில் அவர் அத்தோட்டத்துக்குச் சென்று அங்கு குழிகளை நோண்டுவதிலும் செடிகளைப் பராமரிப்பதிலும் ஈடுபட்டு வந்தார். மேலும் அதிகாலையில் எழுந்து நகர்ப்புறப் பகுதிகளில் அமைந்திருந்த தோட்டம் ஒன்றுக்குச் செல்வார். அங்குள்ள குளம் ஒன்றில் தனது துணிகளை துவைத்துக் கொண்டு திரும்பும் வழியில் நாற்றுக்கள் சிலவற்றை எடுத்து வருவார். அவற்றைத் தமது தோட்டத்தில் நட்டுவைப்பார். இவ்வாறாக செடிகொடிகள் பற்றியும், புஷ்பங்கள் பற்றியும் அவர் பல விஷயங்களை அறிந்துணர்ந்தார். செடிகொடிகளிடமும் மரங்களிடமும் பாபு காட்டிவந்த ஈடுபாடு அவருடைய கடைசி காலம் வரையில் விடாது நீடித்து வந்தது.



# 22. நோய்வாய்ப் பட்டவர்களை பராமரிப்பதில் இன்பம்

"நோய்வாய்ப் பட்டவர்களை பராமரிப்பதைக் காட்டிலும் மிகச் சிறந்தது வேறு ஏதுமில்லை. ஒருவருடைய மதத்தின் பெரும்பகுதி அதிலேயே அடங்கியிருக்கிறது." என்று தமது மகன் மணிலாலுக்கு எழுதிய கடிதமொன்றில் பாபு குறிப்பிட்டிருந்தார்.

தென்னாப்பிரிக்காவில் வசித்து வந்த காலத்திலிருந்தே நோய்வாய்ப்பட்டவர்களின் பராமரிப்பில் பாபு



ஆழ்ந்த அக்கறை காட்டிவந்தார். அவர் ஒருமுறை நோய்வாய்ப்பட்டவர்கள் இரண்டுபேரைக் கவனித்து

வருகையில் அமெரிக்க மதபோதகர் ஒருவர் அவருடைய மதம் என்னவென்று வினவினர். உடனே பாபு நோயாளிகளைச் சுட்டிக்காட்டி, "இவர்களுக்குச் சேவை செய்வதே எனது மதமாகும்'' என்று கூறினர். நோய் வாய்ப்பட்டவர்களுக்குச் சிகிச்சை அளித்து ஆற்று வதற்கு உதவி அளித்து வருவதில் அவர் தீவிரமாக ஈடு பட்டுவந்தார்.

பாபு நோயாளிகளைப் பார்க்கச் செல்லும்போது அவருக்கு என்ன கோளாறு என்றே, அவர் எவ்வாறு நோய்வாய்ப் பட்டார் என்றே கேட்கமாட்டார். நோயாளியுடன் கலகலப்பாக சம்பாஷணையில் ஈடுபடு வார். அவர் அவ்விடத்தை விட்டுச் செல்லும்போது அந்நோயாளி பெரிதும் உற்சாகத்துடன் காணப்படு வது வழக்கம்.

நோயாளிகளுக்குச் சிகிச்சை அளிப்பதில் பாபு பெரி தும் மகிழ்ச்சியடைந்துவந்தார். அவர்களைக் காலையிலும், மாலையிலும் தவருமல் போய்ப்பார்ப்பார். யார் நோய் வாய்ப்பட்டாலும் சரி, எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக அவரைப் போய்ப்பார்ப்பார். அவர்களை குழந்தைபோல் பராமரித்து வருவார். அவ ருடைய குன்ருத நம்பிக்கையும் மனேவலிமையும் நோய் வாய்ப் பட்டவர்களை உற்சாகத்தில் ஆழ்த்திவந்தது.



# 23. குஷ்டரோகிகளுக்குச் சேவை

குஷ்டரோகிகளின் சேவையில் பாபு விசேஷ அக்கறை காட்டிவந்தார். அது இறுதியில் அவரது ஆயுட்கால சேவையாகவே அமையப் பெற்றது.

பல்லாண்டுகளுக்கு முன்பு தென்னாப்பிரிக்காவில் ஒருதடவை புறநகர்ப்பகுதிகளில் அமைந்திருந்த இந்தியர் குடியிருப்புக்களைப் பாபு சுற்றிப் பார்த்துக்கொண்டிருந்தார். அவரும் அவருடைய சகஊழியர்களும் புதிதாக ஏற்படுத்தப்பட்ட நேட்டால் இந்தியர்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்துக்கு அங்கத்தினர்களைச் சேர்ப்பதற்காகவும், அதற்கு நிதி திரட்டுவதற்காகவும் அங்கு சென்றிருந்தார்கள்.

அந்த ஸ்தலத்தில் இந்தியர்களின் குடியிருப்புக்கள் இரண்டுக்கு இடையே மரங்கள் நெருங்கி அடர்ந்த பிரதேசம் ஒன்றின் வழியாக பாபு செல்லவேண்டியிருந்தது. அங்கு அவர் நடந்து சென்று கொண்டிருக்கையில் தொலைதூரத்தில் சில மனித உருவங்களின் நடமாட்டம் அவர் கண்ணுக்குத் தென்பட்டது. அவர்கள் மரங்களுக்குப்பின்னே மறைந்துகொள்ள விரைந்துகொண்டிருந்தனர். மறைவிலிருந்துகொண்டு அவரைக்காண அவர்கள் முயல்வதாகவும் அவருக்குத் தோன்றியது.

பாபு தன் தோழர்களிடம் திரும்பி, "இந்த மனிதர்கள் யாவர்? அவர்கள் இங்கு என்ன செய்துகொண்டிருக்

ன்றனர்? அவர்களைப் பார்த்தால் நம்முடைய மனிதர்களைப் போன்று தெரிகிறதே?'' என்று கேட்டார்.

அவருடைய சகாக்கள் யாதும் பேசாமல் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நின்றிருந்தனர். அவர்களில் சிலருக்கு அப்பகுதி ஏற்கனவே பரிச்சயமாக இருந்ததுபோலவும் தெரிந்தது. பாபுவின் கேள்விக்கு எவ்வாறு பதில் அளிப்பது என்ற குழப்பத்தில் அவர்கள் ஆழ்ந்திருந்தனர். கடைசியில் அவர்களில் ஒருவர் "பாய், அவர்கள் நம்மைச் சேர்ந்த மக்கள் என்பதில் சந்தேகமில்லை; ஆனால் அவர்கள் குஷ்டரோகத்துக்குள்ளாகியிருப்பதால் நகரத்தின் எல்லைப்பகுதிகளில் வசிக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது.'' என்று கூறினர். மற்றொருவர் கூறினர் "பாய், நீங்கள் இவ்வழியே செல்லப் போவதாக அவர்கள் கேள்விப்பட்டிருப்பார்கள்; உங்களைப் பார்த்துப்போக ஆவலுடன் வந்திருக்கலாம்.'' என்று கூறினர். மூன்ருமவர், "வாருங்கள் பாய், இங்கு தங்குவது நல்லதல்ல; அவர்கள் அனைவரும் நோய் முற்றிய நிலையில் உள்ளவர்கள். நாம் இங்கிருந்து போய்விடுவோம்'' என்று கூறினர்.

பாபு இதற்குச் சம்மதிக்கவில்லை. "இல்லை, நாம் அவ்வாறு செய்யமுடியாது. இவ்வேழை ஆத்மாக்கள், நம்முடைய வருகைக்காக இத்தனை நேரம் காத்திருந்திருக்கின்றனர். அவர்களைப் பார்க்காமல் நான் போகமாட்டேன்.'' என்று கூறினர். அவ்வாறு கூறிவிட்டு அவருடைய சகாக்களின் ஆட்சேபத்தையும் பொருட்படுத்தாமல், அவர்களை நோக்கி அவர் முன்னேறினர். பின்னர் அவர்களை ஆசுவாசப்படுத்தி, மகிழ்வித்து சிறிது

நேரம் அவர்களுடன் அளவளாவிவிட்டு பின்னர் அங்கிருந்து அகன்றார்.

வேறு ஒரு சமயத்தில் குஷ்டரோகியொருவர் பாபுவின் இல்லத்தைத்தேடி வந்திருந்தார். பாபு அவருக்கு ஆகாரம் அளித்தார். அவரை அப்படியே அனுப்பிவிட அவர் மனம் ஒப்பவில்லை. அவரை உள்ளே அழைத்துச் சென்று அவருடைய புண்களுக்குக் கட்டுகட்டி அவரைக் கவனித்துவந்தார். ஆனால் அவரைத் தம்முடன் எப்பொழுதும் வைத்துக்கொள்ளும் நிலையில் அவர் இல்லாததால் ஒப்பந்தத் தொழிலாளர்களுக்கான சர்க்கார் ஆஸ்பத்திரிக்கு அவரை அனுப்பி வைத்தார்.

பின்னர் பல ஆண்டுகாலம் கழித்து, சேவாகிராமத்தில் உள்ள அவரது ஆசிரமத்துக்கு ஒருநாள் காலையில் அவருடைய குடிலில் ஒருவர் பிரவேசித்தார். பாபு அவரை உடனே அடையாளம் கண்டுகொண்டார். அவர் ஓர் அரசியல் தொண்டர்; பலதடவை நாட்டின் சேவைக்காகச் சிறைசென்றவர்; மற்றும் சமஸ்கிருத மொழியில் நல்ல புலமை பெற்றவர். அவர் குஷ்டரோகத்தினால் பாதிக்கப்பட்டு அவதியுற்ற நிலையில் இருந்தார். எல்லோராலும் புறக்கணிக்கப்பட்ட அவர் இங்கும்அங்குமாக அலைந்தவண்ணமாக இருந்தார். தமது கோர நோயினால் வெறுப்புற்று, பலமுறை நீண்டகாலம் உபவாசமிருந்தார். முற்றிலும் துறந்த நிலையில் பல்லாண்டுகாலம் அவர் வடக்கில் ஹரித்துவாரில் வாழ்ந்துவந்தார். இறுதியில் அங்கிருந்து கால்நடையாகவே ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தார். அவர் பாபுவைக் கண்டவுடன் பெரிதும் உவகையடைந்தார். "இப்பொழுது உங்கள் தரிசனம் கிடைத்துவிட்டபடியால் மிகவும் சந்தோஷத்தை அடைந்துள்ளேன். உங்களுக்காக நான் நூற்ற நூலைக் கொண்டு

வந்துள்ளேன். நானே நேரிடையாக உங்களுக்கு அதைக் கொண்டுவந்து கொடுப்பதற்காகவே இங்கு வந்தேன். இனி அதோ எதிரில் உள்ள மரத்தின் நிழலடி யில் இன்று இரவைக் கழித்துவிட்டு, காலையில் இங் கிருந்து சென்றுவிடுவேன்'' என்று உள்ளம் நெகிழ்ந்து கூறினர்.

பாபு அவரது அன்புணர்ச்சியினுல் நெக்குருகிப் போனர். அவரை அப்படியே போக விட்டுவிடுவதா அல்லது ஆசிரமத்தில் சேர்த்துக்கொள்வதா என்ற பிரச்சனை இரவு முழுவதும் அவரைச் சஞ்சலத்தில் ஆழ்த் தியது. இறுதியில் மறுநாட்காலை தீர்மானமான முடிவு ஒன்றுக்கு வந்தார். பராச்சுரே சாஸ்திரியை (அதுதான் அம்மனிதரின் பெயர்) அங்கேயே இருத்திக் கொள்வதென்றும் அவர் தீர்மானித்தார். அவருக்காகத் தன்னுடைய குடிசைக்கருகேயே வேறு ஒரு குடிசை யைக் கட்டிக்கொடுத்து அவரை அங்கு குடியமர்த்தினர். பிறகு தினந்தோறும் அவரைப் பார்த்துவந்ததுடன்,



தன்னுடைய கையினாலேயே அவருடைய புண்களுக்கு ந்து போட்டு அவரைப் பேணிவந்தார்,

பாபுவின் இரக்க உணர்ச்சிக்கு இச்சம்பவம் மிகச் சிறந்த உதாரணமாக விளங்குகிறது. ஒருமுறை கிறிஸ்துவ பாதிரியொருவர், ஒரிஸ்ஸாவில் உள்ள குஷ்ட ரோகிகள் குடியிருப்பு ஒன்றுக்கு விஜயம் செய்யும்படி பாபுவுக்கு அழைப்பு ஒன்றை விடுத்திருந்தார். அவ்வழைப்பைத் தயங்காமல் ஏற்று அவர் உடனே அங்கு சென்றதுடன், அங்குள்ள குஷ்டரோகிகளிடையே உரையொன்றையும் நிகழ்த்தினார். தமது உரையின் இறுதியில் "நான் இம்மனிதர்களுடன் கலந்து அளவளாமல் போயின், அவர்களை என்னுடைய சகோதரர்கள் என்று எவ்வாறு கூறிக்கொள்ளமுடியும்?" என்று அவர் கூறினார். பின்னர் அவர்களை ஒவ்வொருவராகத் தம்முன் கொண்டுவரும்படிக் கேட்டுக் கொண்டார். அவர்களில் பலர் அவ்வியாதி தங்களை எங்கு பாதித்துள்ளது என்பதை அவருக்குக் காட்டினார்கள். பாபு அவர்கள் ஒவ்வொருவரையும் இன்முகத்துடன் வரவேற்று அவர்கள் தலையை ன்புடன் தடவிக் கொடுத்து உற்சாகப்படுத்தி அனுப்பிவைத்தார்.

இந்தியாவில் குஷ்டரோகிகளின் பரிதாபகரமான நிலைபற்றிக் குறிப்பிட்டு பாபு ஒருமுறை கூறியதாவது; "இந்தியாவில் குஷ்டரோகத்தினால் பீடிக்கப்பட்டுள்ளவர்கள் பெருமளவில் உள்ளனர். நாம் அவர்களைப் புறக்

கணித்து நம்மை அண்டவிடாமல் தொலைவிலேயே வைக்கிறோம். மற்றவர்களைப் போன்று அவர்களும் நம்முடைய சகோதரர்களே என்பதை நாம் உணரவேண்டும். எக்காரணம் கொண்டும் அவர்களை நாம் புறக்கணிக்கலாகாது.''

குஷ்டரோகத்தினால் பாதிக்கப்பட்டவர்களிடையே நாம் எப்படி அன்புணர்ச்சியுடன் நடந்துகொள்ளவேண்டும் என்பதை பாபு தம்முடைய செய்கையின் மூலம் பலமுறை எடுத்துக் காட்டியிருக்கிறார்.



# 24. அங்கஹீனமடைந்தவர்களுடன் பாபு

அங்கஹீனர்கள் விஷயத்தில் பாபு விசேஷ அக்கறை காட்டிவந்தார். அவர்களை அவர் கையாண்ட விதமே அலாதியானதாகும்.

எழுபது வயதுக்கும் அதிகமான வயது முதிர்ந்த மாது ஒருவரிடமிருந்து பாபுவுக்கு ஒருமுறை கடிதம் ஒன்று வந்தது. அதில் அவள் எழுதியிருந்தாள்; "உங்களுடைய தொண்டை நான் பல்லாண்டு காலமாகக் கவனித்துவருகிறேன். நீங்கள், கண்ணிழந்தும், செவிப் புலன் இழந்தும் தவிக்கும் என்போன்ற ஏழை மக்களுக்குப் பெரிதும் ஆறுதல் அளிக்கிறீர்கள் என்பதைக் கூற விரும்புகிறேன், இந்த கடிதத்தை நான் தப்பும் தவறுமாக டைப் அடித்து அனுப்பியிருக்கிறேன் எனினும் நீங்கள் அதைப் படித்துக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன். பதில் எழுதுவதற்காக காந்தி அவள் கடிதத்தைத்தான் முதன்முதலில் எடுத்துவைத்தார். தமது பதிலில் "நீங்கள் குருடருமல்ல; செவிடருமல்ல. புறநிலையை நன்கு அறியக்கூடிய ஆத்மீகக் கண்களைத் தாங்கள் பெற்றிருக்கிறீர்கள்" என்று அவர் அதில் குறிப்பிட்டிருந்தார்.

ஏழ்மை நிலையில் உள்ளவர்கள், நோயினால் பாதிக்கப்பட்டு அவதிப்படுபவர்கள் ஆகியோரின் பிரச்சனைகளைக் கவனிப்பதில் பாபு விசேஷமாக ஈடுபட்டுவந்தார்.

பதினேழு வயதுடைய இளைஞன் ஒருவன் ஒருமுறை பாபுவைக் காணுவதற்காக வார்தாவில் உள்ள மகன்வாடி என்னுமிடத்துக்கு வந்திருந்தான். அவன் ஒருவகைப் பட்ட நரம்பு நோயினால் பாதிக்கப்பட்டிருந்தான். தன் கைகால்களின் நடுக்கத்தை அவனால் கட்டுப்படுத்த இயலவில்லை. எவரும் அவனை வேலைக்கு வைத்துக் கொள்ள இஷ்டப்படவில்லை. எனவே அவன் மனது தளர்ந்து இறுதியில் பாபுவிடம் வந்திருந்தான்; அவருட னேயே தங்கிவிடுவதென்றும் அவன் முடிவு செய் திருந்தான்.

முதலில் அவனை அனுப்பிவிடுவதென்றுதான் பாபு யோசித்தார். அவனைத் தம்முடன் வைத்துக்கொண்டு என்ன செய்யமுடியும்? ஆனால் சிறிது நேரம் கழித்து அவரது மனம் மாறியது. "நான் அவனைத் திருப்பி அனுப்பிவிட்டால் அவன் எங்கு போவான்? "என்று தம் மைத் தாமே அவர் கேட்டுக்கொண்டார்.'' அவன் இங் கேயே இருக்கட்டும்; எப்படிச் சிறந்த வகையில் அவனை உபயோகித்துக் கொள்வது என்று தீர்மானிப்போம்'' என்று அவர் எண்ணினார்.

பாபு அவனைச் சமயலறையில் வேலைக்கு அனுப்பி வைத்தார். அங்கு அவனால் காய்கறிகளை திருத்திக் கொடுக்க முடியுமா என்று வினவினார். தான் அதைச் செய்ய முயலுவதாக அவன் கூறினான். நாளடைவில் பழக்கம் காரணமாக கத்தியை உபயோகிப்பதற்குக்கூட அவன் கற்றுக்கொண்டுவிட்டான். சில மாதங்களுக்குள் ளாகவே அவன் நோய் குணமாகி சகஜ நிலையை எய்தி விட்டான்.

பாபு அவனிடம் காட்டிய அன்பு, அனுதாபம், பரிவுணர்ச்சி ஆகியவை அனைத்தும் அவனுக்குப் பெரிதும் உதவியது. இறுதியில் தன்னுடைய மனோபலத்தின் மூலமே அவன் தன்னுடைய நோயின் பிடிப்பிலிருந்து விடுபட்டான்.

பாபு அங்கஹீனமடைந்தவர்களிடத்தும், ஊனமுற்றவர்களிடத்தும் காட்டிவந்த அன்புணர்ச்சி அவர்கள்பால் கிறிஸ்து காட்டிய அக்கறையை நினைவுறுத்தும் வகையிலாக இருந்தது. "உழைத்துக் களைத்துப்போனவர்கள் அனைவரும் என்னிடத்தே வாருங்கள்; என்னுடைய நுகத்தடி உங்களைச் சிறிதும் வலிபுறுத்தாது; என்று அவர் தமது உபதேசத்தில் கூறியிருக்கிறார்.

  

# 25. இயற்கை வைத்தியத்தில் நம்பிக்கை

அகத்தூய்மையும் புறத்தூய்மையும் முழுமையாக உள்ள விடத்தில் நோய் தலை வைத்துப் படுக்காது. வாழ்வதற்காக உண்பவனும், பஞ்ச பூதங்களான நீர், நிலம், வானம், சூரியன், காற்று ஆகிய ஐந்து சக்திகளுடன் நட்புடைத்தவனும், இவ்வெல்லாவற்றையும் படைத்த அந்த மாபெரும் ஆதிபகவானுக்கு ஊழியன் செய்பவனும் ஆன எந்த ஒருவனும் நோய்வாய்ப்படமாட்டான். இதுவே பாபுவின் அசையாகக் கொள்கையாக இருந்து வந்தது.

மனிதன் தனிப்பட்ட முறையிலும், வீட்டிலும், பொதுஸ்தலங்களிலும் தூய்மையைச் சிறிதும் தவறாது அனுசரித்து வரவேண்டும்; உணவு விஷயத்திலும் உரிய கவனம் செலுத்திவரவேண்டும். மேலும் அவ்வாறு செய்துவந்தால் நோய் நொடி எதுவும் அண்டாது என்பதே பாபுவின் சித்தாந்தம்.

நோய் தாக்கிய சமயங்கள் அனைத்திலும் பாபு அதற்கு நிவாரணம் தேட மருந்துகளை நாடிச் செல்வதில்லை. இயற்கை விதித்துள்ள சட்டதிட்டங்களை மீறியதே அதற்குக் காரணம் என்பார் அவர். எனவே நோயின் மூலகாரணம் யாது என்று அறிய அவர் முற்படுவார்.

வியாதியால் பாதிக்கப்பட்டவரை இயற்கைவழிகளை வழுவாது அனுசரிக்கச் செய்வதன் மூலம் அந்

நோய்க்குப் பரிகாரம் காண அவர் முற்படுவார். மருந்துகளைக் காட்டிலும் இயற்கை வழியிலான வாழ்க்கை முறையின் மூலம் அவன் உடல் நலத்தைத் திரும்பப்பெறலாம் என்பார் அவர்.

இதை பாபு இயற்கை வைத்தியமுறை எனக் கூறி வந்தார். உணவும், நீரும் சீரிய முறையில் உட்கொண்டு வருவதன் மூலமும், மண் சிகிச்சையின் மூலமும், இது போன்ற கைவைத்தியங்களின் மூலமும் நோய்களில் பெரும்பான்மையானவற்றைக் குணப்படுத்தலாம் என்று அவர் உறுதியாக நம்பிவந்தார். இவ்வகையில் ஒவ்வொருவரும் தனக்குத் தானே வைத்தியனாக விளங்கலாம் என்றும் அவர் கூறிவந்தார். கடவுளின் மீது அசையாத நம்பிக்கையும், இயற்கை வழியிலான வாழ்க்கை முறையுமே சீரிய உடல் நலத்துக்கு வழி காட்டிகளாகும் என்றும் அவர் போதித்து வந்தார்.



# 26. ஆபத்துக்காலங்களில் நிதானம் கைகொடுத்துதவும்

தென்னுட்பிரிக்காவில் டால்ஸ்டாய் ஆசிரமத்தில் இருந்து வந்த காலத்தில் தம்முடைய நண்பர் காலன்பாச்சிடம், பாம்புகளையும் அவை போன்ற இதர ஜந்துக்களையும் கொல்வது பாவம் என்று பாபு கூறிவந்தார். அதைக்கேட்டு காலன்பாச்சும் அவருடைய ஐரோப்பிய நண்பர்களும் திடுக்கிட்டுப் போயினர்.

நாளடைவில் ஆசிரமத்தில் உள்ளவர்கள் பாம்புகள் பற்றிய பயத்தை விட்டொழித்தனர். ஆனுல் அதே சமயத்தில் பாபு அவற்றைக் கொல்லுவதைப் பூரணமாகத் தடுக்கவில்லை. ஒரு குறிப்பிட்ட வழிமுறையைக் கையாள்வதில் ஹிம்சையும், பாவமும் உள்ளது என்பதில் நம்பிக்கை வைப்பது வேறு என்றும், அந்த நம்பிக்கைக்கேற்ப நடப்பது வேறு என்றும் காந்திஜி கூறிவந்தார். பாம்புகளைக் கண்டு நடுங்கும் ஒருவன், அதே சமயத்தில் அவன் உயிரை இழக்க விரும்பவில்லை என்ருல், அவன் அத்தகைய ஆபத்தில் சிக்கும்போது பாம்புகளைக் கொல்லாமல் இருக்கமுடியாது என்றும் அவர் கூறுவார்.

இந்த உண்மையை பாபு ஒருமுறை தம்முடைய வாழ்க்கையிலேயே நிதரிசனமாக விளக்கிக்காட்டினுர். அச்சம்பவம் 1917-ம் ஆண்டில் சபர்மதி ஆசிரமத்தில் ஒருநாள் மாலையில் நிகழ்ந்தது. அன்றைய தினத்தின் மாலைநேரப் பிரார்த்தனை அப்பொழுதுதான் முடிவுற்றிருந்தது. பாபு தன்னுடைய சாய்வுப் படுக்கையில் தலையணையொன்றின்மேல் அமர்ந்திருந்தார். கஸ்தூரி

பாய் அன்னையார் அவருடைய முதுகுப்புறத்தையும் தோள்களையும் கம்பளிப்போர்வை ஒன்றினால் போர்த்தியிருந்தார். ஆசிரமவாசிகளில் ஒருவரான ரவ்ஜீபாய் பாபுவிடம் பேசிக்கொண்டிருந்தார். திடீரென்று வெள்ளைத்துணியின்மீது கருப்பாக ஏதோ ஒன்று ஊர்ந்து வருவதை அவர் கண்டார். எட்டிநோக்கி அதை ஊன்றிக்கவனித்தபோது மிகப் பெரிய கருநாகமொன்று காந்திஜியின் முதுகுப்புறத்தில் ஏறியிருப்பதை அவர் கண்டார். அடுத்தபடியாக ஏறுவதற்குத் தக்க பிடிப்பு ஒன்றையும் அது தேடிக்கொண்டிருந்தது.



பாபு, ரவ்ஜீபாய் முகத்தில் படர்ந்த பீதியைக் கண்ணுற்று "என்ன விஷயம்?" என்று கேட்டார். அதற்குள்ளாக ரவ்ஜீபாய் தன்னுடைய வழக்கமான நிதானத்தை அடைந்துவிட்டார். அவர் நிதானமிழந்து கூக்குரலிட்டிருந்தாலோ அல்லது திகிலை யெழுப்பியிருந்தாலோ கஸ்தூரிபாய் அன்னையும் மற்றவர்களும் பீதியுற்று நடுங்கியிருப்பார்கள். அந்த பீதியைக் கண்டு பாம்பு காந்திஜியைக் கடித்துவிட்டிருக்கும்.

எனவே அவர் மிகவும் மெல்லிய குரலில், "விசேஷமாக ஒன்றுமில்லை, பாபுஜீ; உங்கள் பின்புறத்தில்

பாம்பு ஒன்று ஏறிக்கொண்டிருக்கிறது. சிறிதும் அசையாமல் இருங்கள்'' என்று கூறினர்.

காந்திஜியும் குரலில் நிதானம் இழக்காமல், "நான் அசையாமல் இருக்கிறேன். நீ என்ன செய்வதாக உத்தேசித்திருக்கிருய்'' என்று கேட்டார்.

"நான் உங்கள் சால்வையின் நான்கு புறங்களையும் ஒன்றுசேர்த்துப் பிடித்திழுத்து உங்கள் முதுகுப்புறத்திலிருந்து பாம்பையும் சேர்த்து உதறிவிடுவேன்'' என்று கூறினர்.

காந்திஜி தலையை அசைத்து "எனக்குப் புரிகிறது. நான் சற்றும் அசையாமல் இருக்கிறேன். நீ ஜாக்கிரதையாக இரு'' என்று கூறினர்.

ரவ்ஜிபாய் மெதுவாக அடியெடுத்து பாபுவிடம் வந்தார். இதற்குள்ளாக அப்பாம்பு ஏதோ நேரப் போவதை உணர்ந்து, சால்வையின் இடுக்குகளில் புகுந்து கொண்டது. ரவ்ஜிபாய் துரித கதியில் சால்வையின் நுனிகளைப் பிடித்து ஒன்று சேர்த்து எடுத்துக் கொண்டு வெளிப்புறம் நோக்கிச்சென்ருர். பாம்பு விடுபட்டு வெளிவருவதற்கு முன்னரே அதை எட்டித்தூக்கி எறிந்துவிட்டார்.

அச்சம்பவத்தின்போது பாபு எத்தகைய உணர்ச்சி வயப்பட்டிருந்தார் என்று பின்னர் ஒரு சமயம் கேட்கப்பட்டதற்கு, பாபு பின்வருமாறு பதிலளித்தார்: "முதலில் ஒரு கணம் நான் திகில்மேலிட்டு நின்றேன். ஆனல் ஒரே ஒரு கணம்தான் அத்தகைய உணர்ச்சி பரவியிருந்தது. பின்னர் என் நிதானத்தை அடையப்பெற்றேன். அந்த பாம்பு என்னைக் கடித்திருந்தால், அதைக் கொல்லாமல் விட்டுவிடும்படியே நான் கூறியிருப்பேன்.



# 27. அஞ்சாநெஞ்சம் படைத்தவர்

தமது இளமைப்பருவத்தில் பாபு எதைக்கண்டாலும் பயமும் பீதியும் கொண்டிருந்தார். இருட்டைக் கண்டாலும் சரி, பேய் பிசாசுகள் பற்றியும் சிறுகுழந்தைகள் போன்று அவருக்கு இயற்கையிலேயே பயம். ஒரு நாள் அவருடைய தாதி ரம்பா ராமாயணத்தின் ரகசியத்தை அவருக்கு எடுத்துரைத்தார். "உனக்கு பயம் ஏற்படும்போதெல்லாம் ராமநாமத்தை ஜபித்தால் பய உணர்ச்சி உன்னைவிட்டு அறவே அகன்றுவிடும்'' என்று அவள் அவருக்கு உபதேசித்தாள். பாபு அம்முறையைக் கையாண்டு நற்பயன் பெற்றார். அவர் பகவான் மீது முழு நம்பிக்கை வைத்துவந்ததன் காரணமாக அவரை பயமோ பீதியோ மீண்டும் அண்டவில்லை.

பயம், பீதி போன்ற உணர்ச்சிகள் கடவுளின்மீது உள்ள நம்பிக்கைக் குறைவு காரணமாக ஏற்படுபவை என்றும், சகல ஜீவராசிகளையும் காப்பவர் கடவுள் என்ற உண்மையை அறிந்தவர்கள் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லை என்றும் பாபு ஆசிரமவாசிகளுக்கு ஒருமுறை எழுதியிருந்தார். பாபு கடவுளின்மீது அசையாத நம்பிக்கை கொண்டிருந்ததால் அவர் ஒருபொழுதும் பய பீதி உணர்ச்சிகளினால் ஆட்கொள்ளப்படவில்லை.

ஒருமுறை தென்னாப்பிரிக்காவில், பாபு தன்னுடைய ஜெர்மானிய நண்பர் காலென்பாச் ரவைகள் நிரப்பப்பட்ட கைத்துப்பாக்கியொன்றை தம்முடன் வைத்திருந்ததைக் கண்டார். அவர் அதை வைத்திருப்பதற்

கான காரணம் பற்றி பாபு கேட்டதற்கு காலென்பாச் "பாய், துஷ்ட மனிதர்கள் சிலர் உங்களைத் தாக்கத் திட்டமிட்டுள்ளதாக அறிகிறேன்" என்று கூறினர். "நீங்கள் என்ன, இத்தகைய தாக்குதலிலிருந்து என்னைப் பாதுகாக்க விரும்புகிறீர்களா" என்று கேட்டதற்கு அவர், "ஆமாம்" என்று பதிலளித்தார்.

அதுகேட்டு பாபு புன்முறுவலித்துக் கூறினர். "எனக்கு அதுவிஷயமாக இனி எத்தகைய பயமும் இருக்கவேண்டியதில்லை. என்னைக் காக்கவேண்டியது பற்றிய பகவானின் பொறுப்பை நீங்களே ஏற்றுக் கொண்டுவிட்டீர்கள். நீங்கள் இருக்கும் வரையில் எனக்கு எத்தகைய ஆபத்தும் ஏற்படாது என்று நிச்சயமாக நம்பலாம். உங்களுக்கு என்மீதுஉள்ள பாசம், என்னைக்காப்பதற்காக உங்களை கடவுளின் ஸ்தானத்தை ஏற்கச்செய்துள்ளது" என்று வேடிக்கையாகக் கூறினர். அதைக்கேட்டு வெட்கமுற்ற காலென்பாச் தம்முடைய கைதுப்பாக்கியை வெளியில் எடுத்து வைத்துவிட்டார்.

இந்தியாவில் சம்பரான் என்னுமிடத்தில் விவசாயிகளின் இன்னல்கள் பற்றி பாபு விசாரித்துக்கொண்டிருந்த சமயம்; அவ்விவசாயிகளைத் தங்கள் நிலங்களில் அவுரியைச் சாகுபடி செய்யும்படி வெள்ளைக்காரத் தோட்ட முதலாளிகள் அவர்களை நிர்ப்பந்தித்து வந்தது பற்றி விசாரிக்க அவர் அங்கு சென்றிருந்தார். ஒருநாள் சில மனிதர்கள் பாபுவிடம் வந்து, "இந்தப் பகுதியைச் சேர்ந்த தோட்ட முதலாளி மிகவும் கொடூரமானவன். அவன் உங்களைக் கொலைசெய்வதென்று உறுதியாக உள்ளான்; அதற்காக துஷ்ட மனிதர்கள் சிலரையும் அவ்வேலையில் ஈடுபடுத்தியிருக்கிறன்" என்று கூறினர்.

பாபு அச்செய்தியைக் கேட்டவுடன் இரவு நேரத்தில் தன்னந்தனியே அந்த மனிதரின் பங்களாவுக்குச் சென்றார். "என்னை ஒழித்துக்கட்டுவதற்காக நீங்கள் ஆட்களை ஏவிவிட்டிருக்கிறீர்கள் என அறிகிறேன். அதனால் நானே இரகசியமாக உங்கள் வீட்டிற்கு வந்திருக்கிறேன்'' என்று பாபு அம்மனிதரை நோக்கிக் கூறினார். அதுகேட்ட அத்தோட்ட முதலாளி வெட்கத்தினால் வாயடைத்துப்போனார்.

பயங்கொள்வதற்கான பல சந்தர்ப்பங்கள் பாபுவின் வாழ்க்கைக் காலத்தில் இருக்கத்தான்செய்தன; வேறு ஒருவராக இருந்தால், அவர்கள் நாடி தளர்ந்து போயிருப்பார்கள். ஆனால் பாபுவோ அந்த இக்கட்டான நிலைகளை நிதான உணர்ச்சியுடன் சமாளித்துவந்தார். தமக்கு அவசியமானபோதெல்லாம் பகவான் தன்னைக் காத்து நிற்பார் என்று நம்பிக்கையே அவருக்கு அந்த மனோஉறுதியை அளித்தது.

இந்த அஞ்சாநெஞ்ச உணர்ச்சி பாபுவுக்கு சர்வ சாதாரணமாகவும், இயல்பாகவும் இருந்துவந்தது. ஒரு முறை பாபு, வடமேற்கு எல்லை மாகாணத்தைச் சுற்றிப் பார்வையிடுவதற்காகச் சென்றிருந்தார். உடல்வலிமை பெற்ற குதாய் கித்மத்காரர்கள் (கடவுளின் தொண்டர்கள்) எவ்வாறு அஹிம்சைப் போராட்டத்தின் வீரர்களாக மாறினர் என்பதை நேரில் காணுவதற்காகவே அவர் அங்கு விஜயம் செய்தார்.

பாபு அக்காலத்தில், குதாய் கித்மத்காரர்களின் தலைவரான கான் அப்துல் கபார் கானின் விருந்தினராக வந்திருந்தார். கபார்கான் அஹிம்சைத் தத்துவத்தில் பாபுவுடன் ஒன்றியவகையிலாக இருந்ததால் அவரை மக்கள் எல்லைகாந்தி என்றே அழைத்து வந்தனர்.

சர்ஸ்தா என்னுமிடத்தில் தங்கியிருந்தபோது வீட்டைச் சுற்றிலும் துப்பாக்கி ஏந்திய பட்டாணிய வீரர்கள் காவல் நிற்பதைக் பாபு கண்டார். அது கண்டு கபார்கானை நோக்கி "இது எல்லாம் என்ன? ஆயுதந்தரித்த காவலர்கள் ஏன் இங்கு உள்ளனர்?" என்று கேட்டார்.

"பாபு, அவர்கள் உங்கள் பாதுகாப்புக்காகவே இங்கு உள்ளனர். உங்களை ஹிம்சிக்க யத்தனிப்பவர்களை அண்டவிடாமல் செய்யத்தான் அவர்களை நாங்கள் அமர்த்தியிருக்கிறோம். அந்த மனிதர்களின் மனதில் பயத்தை ஏற்படுத்துவதற்காகத்தான் இவர்கள் துப்பாக்கி ஏந்தி நிற்கின்றனர்." என்று கபார்கான் பதிலளித்தார்.



தமக்கு அது பிடித்தமில்லை என்று கூறும்வகையில் தலையசைத்துவிட்டு, 'எனக்கு அவர்கள் தேவையில்லை. அவர்களை அனுப்பிவிடுங்கள்'' என்று பாபு கூறினர். கபார்கான் பாபுவின் மனதைப் புரிந்துகொண்டார். கடவுளின்மீது நம்பிக்கை வைத்துள்ளவர்களுக்கு அவரைத் தவிர வேறு காவலர் எவரும் தேவையில்லை. எனவே காவலர்களிடமிருந்து துப்பாக்கிகளை எடுத்துச்செல்லும்படியாக அவர் உத்தரவிட்டார். தீரம் மிக்க அந்த பட்டாணியக்காவலர்கள் அது கண்டு வியப்புற்று, ''என்னே இந்த மனிதரின் வீரம்! இவர் மரணத்துக்குக்கூட அஞ்சுபவராகத் தெரியவில்லையே'' எனப் பாராட்டினர்.

ஆமாம், பாபு மரணத்தைக் கண்டுகூட அஞ்சுபவரல்ல.

பயபீதி உணர்ச்சிகளை அறவே ஒழித்துவிட வேண்டுமென்று மக்களுக்கு உபதேசிப்பதையே வாழ்க்கை லக்ஷியமாகக் கொண்டவருக்குப் பீதியுணர்ச்சி எவ்வாறிருக்க முடியும்? பாபு, மக்களை அஞ்சாநெஞ்சத்துடன், வீறுநடை போட்டுச் செல்லவேண்டுமென்றும், எவரையும் அஞ்சாமல் எதிர்நோக்கவேண்டுமென்றும் உபதேசித்து வந்தார். பயத்தை விட்டொழித்து காலனைத் தலையணையாக வைத்துப் படுப்பவனே தலையாய நிலையை எய்த முடியும் என்றும் அவர் கூறிவந்தார்.



# 28. அஞ்சாநெஞ்சம் படைத்த வீரமாதர்கள்

மாதர்கள் அஞ்சாநெஞ்சம் படைத்தவர்களாக விளங்க வேண்டும் என்று பாபு அடிக்கடி கூறிவந்தார். பாபுவுடன் வாழ்ந்துவந்த மக்கள் அனைவரும் அஞ்சா நெஞ்ச உணர்ச்சியை அவரிடமிருந்து பெற்றிருந்தனர். வார்தாவில், மாதர்கள் ஜனநடமாட்டமில்லாதவிடங் களுக்கு எத்துணையுமின்றி தனியே சென்று வந்தனர். இராக்காலங்களில்கூட அவர்கள் தனியே சென்று வந்த னர். முன்பின் அறியாதவர்களுடன் சகஜமாக வாழ்ந்து வந்தனர். அத்தகைய மாதர்களில் மீரா பென் என்ப வரும் ஒருவராவர்.

ஒருநாள் பாபு மீராபென்னை நோக்கிக் கேட்டார் "ஆயிரக்கணக்கான ஆடவர்களிடையே நீ தன்னந் தனியாக வாழ்வது பற்றி எவரும் கவலை கொண்டதாகத் தெரியவில்லையே? மற்றும் எல்லோரும் உன்னிடம் பெரி தும் நம்பிக்கை வைத்திருக்கின்றனரே? அவர்களுடைய நம்பிக்கையைப் பெறுவதற்கு நீ என்ன செய்தாய்?" என்று கேட்டார்.

மீராபென் தன் கண்களில் உவகைநீர் பொங்க, "நான் ஏதும் செய்யவில்லை. எல்லாம் உங்கள் செயல் தான்" என்று கூறினர்.

"ஆனல் நான் உன்னைத் தனிப்பட்ட ரீதியில் பாவிக்க வில்லையே? உனக்கு அதனுல் ஏற்பட்ட கஷ்ட நஷ்டங் களைத்தான் நீ நன்கு அறிவாயே?" "அது சரிதான் : ஆயி

னும் நீங்கள் எனக்கு அஞ்சாநெஞ்ச உணர்ச்சியை ஊட்டுவித்தீர்கள்; லக்ஷக்கனக்காணவர்களிடையே தன்னந்தனியாக வாழ்க்கை நடத்துவதற்கு பயமோ பீதியோ அற்ற தன்மையை எனக்கு அளித்துள்ளீர்கள்'' என்று மீராபென் கூறினுள்.

1930-ம் ஆண்டில் உப்புச் சத்தியாக்கிரக இயக்கத்தின்போது, பாமரர்களான கிராமவாசிகள் பலரின் வீர தீரங்கள் பற்றிய பல சம்பவங்கள் பாபுவின் காதுக்கு எட்டின. வீரச்செயல்களைப் புரிவதிலும் சரி, அஞ்சா நெஞ்சத்துடன் நடந்துகொள்வதிலும் சரி, ஆடவர்களுக்குத் தாங்கள் எவ்வகையிலும் சளைத்தவர்கள் அல்ல என்பதை மாதர்கள் பலர் நிரூபணம் செய்திருந்தனர்.

அத்தகைய சம்பவம் ஒன்றினுல் மனம் நெகிழ்ந்து அது பற்றி விவரித்துத் தமது பத்திரிகையான "யங் இண்டியா'' வில் காந்தி வருமாறு எழுதியிருந்தார்.

"சென்ற ஆண்டில் மாதர்களுக்கிடையே ஏற்பட்ட பெரும் எழுச்சியின்போது வீரச்செயல்களைப் புரிந்த மாதர்கள் பலரின் சேவைகளை நாடு முழுவதும் அறிவதற்கில்லை. அத்தகைய வீரத்தொண்டு பற்றிய சம்பவங்கள் குறித்து எப்பொழுதாவது ஒருமுறைதான் விவரங்கள் கிடைக்கின்றன. எனது நண்பர் ஒருவர் அனுப்பியுள்ள அத்தகைய தொண்டு ஒன்றை இங்கே விவரித்துள்ளேன்.''

பாலாடோங்கல், நாட்டில் உள்ள ஆயிரக்கணக்கான கிராமங்களில் ஒன்ருகும். உப்புச் சத்தியாக்கிரகத்தின்போது காங்கிரஸ் தொண்டர்கள் —அதிலும் பெரும்பகுதியினர் இளம் பையன்கள் —அருகாமையில்

இருந்த நகரமொன்றில் பயிற்சி முகாம் ஒன்றை நடத்தி வந்தனர். சர்க்கார் அச்சமயத்தில் காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தடைசெய்திருந்தனர். எனவே அம்முகாம் சட்டவிரோதமானதென அறிவிக்கப்பட்டு, போலீசாரின் ஆக்கிரமிப்புக் குள்ளாகியது; தொண்டர்களில் சிலர் அடிபட்டு கீழே மயங்கிவிழுந்தனர். பலர் கைது செய்யப்பட்டனர். அவர்களில் ஒருவரான இளம்பாலகன் ஹாபு, பாலாடோங்கல் கிராமத்தைச் சேர்ந்த விதவையொருத்தியின் மகனுவான்.

ஹாபு போலீஸ் வண்டியில், அரைகுறை நினைவுடன் இழுத்துத் தள்ளப்பட்டுக் கொண்டிருக்கையில், மற்ற பையன்களிடம் சன்னக்குரலில் அவன் கூறினுன். "என்னுடைய கிராமத்துக்குச் சென்று எனக்கு கிடைத்த தடியடி பற்றி என் அன்னையிடம் கூறவும். போலீசாருக்கு நான் பயப்படவில்லையென்பதையும், அவர்களின் குண்டாந்தடிப் பிரயோகத்தை அஞ்சாநெஞ்சத்துடன் ஏற்றேன் என்பதையும் அவருக்குக் கூறவும்'' என்று கூறினுன்.

அதன்பேரில் அவர்கள் பாலாடோங்கல் கிராமத்துக்குச் சென்று ஹாபுவின் குடிசை இருக்குமிடத்தைத் தேடலாயினர். அங்கு அவர்கள் ஹாபுவின் தாயாரைக் கண்டு போலீசார் ஹாபுவை அழைத்துச் சென்றுவிட்டதாகக் கூறினர். அவன் அஞ்சாநெஞ்சத்துடன் இருந்ததாகவும் அவர்கள் கூறினர்.

ஹாபுவின் தாயார் அவ்வீர வரலாற்றை உன்னிப்புடன், கண்கொட்டாமல் மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். அவள் கண்களில் நீர் தத்தளித்தது. பின்னர் சமாளித்துக்கொண்டு, புன்னகை செய்து "நான்

ஒரு அசடு. நான் ஏன் அழவேண்டும்? தாய்நாட்டுக்கு விடுதலை தேடித்தருவதற்காகவே ஹாபு சிறை சென்றுள்ளான். நான் அவனுடைய தாயாரல்லவா? ஆகவே அவனைப்பற்றிப்பெருமை கொள்ளவேண்டுமேயொழிய அவனுக்காக அழக்கூடாது" என்று கூறினாள்.



பிறகு அத்தொண்டர்களைத் தன் குடிசையில் சிறிது நேரம் தங்கிவிட்டுச்செல்லும்படி வலியுறுத்தினாள். "உனக்கு போலீசிடம் பயமில்லையா? நீ எங்களுக்குத் தங்க இடம் கொடுத்ததாக அவர்களுக்குத் தெரியவந்தால் என்ன நேரும் தெரியுமா? அவர்கள்

அதற்காக உன்னைக் கடுமையாகத் தண்டிப்பார்களே?!" என்று கேட்டனர்.

ஹாபுவின் தாயார் புன்னகை புரிந்து, "ஏழை விதவையை அவர்கள் என்ன செய்துவிடமுடியும்? என்னையும் சிறையில் தள்ளிவிட்டால் நல்லது அல்லவா? ஹாபு அஞ்சாநெஞ்சத்துடன் இருந்தான். அவனைப்போன்று பயமற்று இருப்பதன்மூலம்தான் நான் அவனுடைய தாயார் என்று கூறிக்கொள்ள எனக்கு அருகதை இருக்கும்" என்று கூறினாள்.

அவளுடைய பதிலைக்கேட்டு தொண்டர்கள் மௌனம் சாதித்தார்கள். அவளுடைய வீரத்தை அவர்கள் பெரிதும் பாராட்டினர். அத்தகைய வீரமாது ஒருத்திக்குப் பிறந்த ஹாபு அஞ்சாநெஞ்சம் படைத்தவனாக இருப்பதில் ஆச்சரியமில்லை யென்றும் கூறினர்.

ஹாபுவின் தாயார் அந்த கிராமத்தில் சேவை செய்துவந்த காங்கிரஸ் தொண்டர்களுக்கு சற்றும் அயராது அல்லும் பகலும் சமைத்து வந்தாள். அவர்களில் நோய்வாய்ப்பட்டவர்களுக்குச் சிகிச்சையளித்துப் பராமரித்து வந்தாள். சஞ்சலத்துக்கும் மனோவேதனைக்கும் உள்ளானவர்களுக்கு ஆறுதல் கூறி தேற்றினாள். குடும்பத்தையும், பெற்ற அன்னையையும் விட்டுப் பிரிந்து வெகுதூரம் வந்து தொண்டாற்றிய அவ்விளம் பாலகர்களுக்கு தனது தொண்டின்மூலம் அவர்களது உண்மையான அன்னையாக அவள் விளங்கிவந்தாள். அவர்களில் இரண்டொரு பட்டதாரிகளும்கூட இருந்தனர். அவர்கள் தங்கள் கல்லூரிக்கல்வி பற்றிப் பெருமிதம் கொண்டிருந்தனர். ஆயினும் அச்சம்பவத்துக்குப் பிறகு எழுத்தறிவில்லாத அவ்வேழை மாதின்

வீர உணர்ச்சியில் மனதைப் பறிகொடுத்து அதுபற்றிப் பெருமையடைந்தனர். அன்புடன் அவளை அம்மா என்றும் அவர்கள் அழைத்து வந்தனர்.

தனது மஹாத்மா பட்டம் பற்றிக் குறிப்பிட்டு பாபு ஒருமுறை, "என்னுடைய மஹாத்மா பட்டம், ஆடவர்களுக்குத் தாங்கள் எவ்வகையிலும் சளைத்தவர்கள் இல்லை என்று நிதரிசனமாக விளக்கிக்காட்டியுள்ள, அஞ்சாநெஞ்சம் படைத்த எண்ணற்ற மாதர்களின் தியாகங்களையும், அவர்களுடைய வீரப்பிரதாபங்களையும் ஆதாரமாகக் கொண்டிருக்கிறது என்டதைப் பலர் அறியார்" என்று கூறினர். ஹாபுவின் தாயார் போன்ற மாதர்களை தன் மனதில் நினைத்துத்தான் அவர் அவ்வாறு கூறினர் என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை.

  

# 29. பாபுவின் நகைச்சுவை

"எனக்கு நகைச்சுவை இல்லாது போயின், என்றோ நான் தற்கொலை செய்துகொண்டிருக்கவேண்டும்." என்று பலமுறை பாபு கூறியிருக்கிறார்.

உலக வரலாற்றிலேயே பாபு போன்று பெருஞ் சுமைகளையும், பொறுப்புக்களையும் தாங்கி நின்றவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் கலந்துகொள்ளும்படி அவர் விடுத்த குரலுக்கு இணங்கி முன்வந்த பல்லாயிரக்கணக்கான வர்கள், மீண்டும் மீண்டும் பன்முறை சிறைசென்றிருக் கின்றனர். ஆயிரக்கணக்கானவர்கள் தங்கள் வேலை களைக் கைவிட்டு அவ்வியக்கத்தில் ஈடுபட்டனர்; வேறு சிலரோ தங்கள் சொத்துச் சுதந்திரங்களையும், இதர உடைமைகளையும்கூட இழந்து நின்றனர். நூற்றுக்கணக் கானவர்கள் கை கால்களை இழந்து பரிதவித்தனர். சிலர் தங்கள் உயிர்களையும்கூட இழந்தனர்.

இவ்வியக்கம் மும்முரமாக நடைபெற்றுவருகை யில், பிரிட்டிஷ் சர்க்கார் கட்டவிழ்த்துவிட்ட குண்டாந் தடிப் பிரயோகங்களிலும், துப்பாக்கிப் பிரயோகங்களி லும், பலர் கைகால்களையும், இதர அங்கங்களையும் இழந் தனர். சிலர் தங்கள் உயிரையே கூட பணயம் வைக்க நேரிட்டது. அப்போராட்டத்தின் போது பாபு, தென் னாப்பிரிக்காவிலும், மற்றும் இந்தியாவிலும் பலமுறை சிறைவாசத்துக்குள்ளாக நேரிட்டது. அத்துடன் வேறு பலசொல்லொணா இன்னல்களையும் அனுபவிக்கும்படி ஏற்

பட்டது; சிறைச்சாலைகளில் எவரும் அவரை வந்து பார்க்க அனுமதிக்கப்படவில்லை. படிப்பதற்குப் பத்திரிகைகள் அனுமதிக்கப் பெறவில்லை. கடைசியாக அவர் ஆகாகான் அரண்மனையில், தமது மகன் போன்று நெருங்கித் தொண்டாற்றிவந்த, அவரது காரியதரிசியான மஹாதேவ தேசாயையும், அறுபதாண்டு காலத்துக்குமேல் அவருடைய வாழ்க்கைத் துணைவியாக இருந்துவந்த அன்னை கஸ்தூரிபாயையும் காலனுக்குப் பறிகொடுக்க நேரிட்டது. அச்சமயம் நாட்டில் ஏற்பட்ட கஷ்டங்கள் அனைத்துக்கும் பாபுதான் பொறுப்பாளி என்று சர்க்கார் குற்றம் சாட்டிவந்தனர். எனவே அவர் பெருந்துன்பங்களையும், மனத்துயரங்களையும் தன்னந் தனியே சமாளிக்கவேண்டியிருந்தது. ஆனால் இத்துணை இன்னல்களுக்கிடையேயும் அவர் தன் நகைச்சுவையை ஒருபொழுதும் இழக்கவில்லை. அவருக்கே உரித்தான அந்த மோஹனப்புன்னகை அவரைவிட்டு என்றுமே அகலவில்லை.

காந்திஜியுடன் தொடர்பு கொண்டு வந்தவர்கள் அனைவரும் அவருடைய நகைச்சுவையைக் கண்டு ஆச்சரியமடைந்து வந்தனர்; அவர் எப்பொழுதும் உற்சாகத்துடன் இருந்துவந்ததையும், தமாஷில் ஈடுபட்டுவந்ததையும், அவர் எந்த ஒரு விஷயத்தையும் நகைப்புணர்ச்சியுடன் அணுகும் தன்மையைப் பெற்றிருந்ததையும் அவர்கள் கவனித்தனர். காந்திஜியின் மகன் தேவதாஸ் காந்தி அது குறித்து ஒருமுறை விவரிக்கையில், "பாபுவின் நினைவு நமக்கு வருகையில் அவருடைய நித்தியமான மோகனச் சிரிப்பே நம் கண்முன்னே நிற்கிறது" என்று கூறினார். தன்னம்பிக்கை, கடவுள்நம்பிக்கை, அனைத்தும் நன்மைக்கே என்பதில் அசையாத உறுதி, சம்பவங்கள் அனைத்திலும், மக்கள் அனைவரிலும், நன்மை பயப்

பனவற்றையும், நற்குணங்களையும் காணுவது ஆகியவை அனைத்தும் அதற்கு அடிப்படையாக விளங்கின. அவருடைய மோகனச் சிரிப்பு அவரைச் சுற்றியிருந்த மக்களையும் சிரிப்பில் ஈடுபடச் செய்தது. பாபுவின் நகைச் சுவை பற்றி, அவரது அமெரிக்க நண்பரான, டாக்டர் ஜோன் ஹேயின்ஸ் ஹோம்ஸ் என்பவர் வருமாறு விவரித்துள்ளார்; "காந்திஜியின் நகைச்சுவை உடனடியானதும், பிறரை உடனே தொற்றிக்கொள்ளும் தன்மையுடைத்ததாகவும் இருந்தது; உவகையும், களிப்பும் தாண்டவமாடிய அவருடைய மோகனக் கண்களின் வீச்சுக்கு மயங்காதவர்கள் எவருமில்லை.''

காந்திஜியே தம்முடைய நகைச்சுவை பற்றி ஒரு முறை வருமாறு குறிப்பிட்டுள்ளார். "எனக்கு நகைச் சுவை இருந்திராது போயிருப்பின், நான் சமாளிக்க வேண்டியிருந்த தாக்குதல்கள் என்னை எப்பொழுதோ தீர்த்துக் கட்டியிருக்கும். ஆனால் நான் கடவுளின் நம்பிக்கையில் அசையாத உறுதிகொண்டவன். அவர் எனக்கு வழிகாட்டியாக இருக்கும் வரையில் பிறமக்கள் என்னைப்பற்றி எது கூறினாலும் நான் லட்சியம் செய்யமாட்டேன். அவற்றைச் சதாரணமாகவே எடுத்துக்கொள்வேன். என்னைக் கண்டு எள்ளி நகையாடுபவர்களோடு நானும் சேர்ந்து சிரிக்கிறேன். இவ்வுணர்ச்சியே அயர்வோ, தளர்வோ அடையாமல் மேலே செல்லுவதற்கு எனக்குப் பேருதவியாக இருந்து வந்திருக்கிறது.'

சின்னஞ்சிறு குழந்தைகளுடன் பழகும்போது காந்திஜி காட்டிவந்த உல்லாச உணர்ச்சி ஒரு தனித்தன்மை வாய்ந்ததாக இருந்தது. அவர் யெரவாடா சிறைச் சாலையில் இருந்த சமயத்தில் ஆசிரமவாசியான சுமித்ரா

என்ற ஒரு இளம்பெண் தானும் பாபுவுடன் சிறைக்கு வந்துவிட விருப்பம் தெரிவித்தாள். இது பற்றி வேறு ஒரு பெண்ணிடமிருந்து கேள்விப்பட்ட பாபு, அவளுக்கு எழுதிய கடிதத்தில் வருமாறு குறிப்பிட்டிருந்தார்: "சுமித்ரா சிறைக்குள் வரவேண்டுமானால் அவள் திருட்டு ஒன்றில் ஈடுபட்டுத் தண்டனை பெற்றுவரவேண்டும். ஆண் வேஷத்தில், யந்திர மொன்றின் உதவியுடன் பதி னாறு வயதுக்குரிய உருவத்தைப் பெற்றுவர வேண்டும். அல்லது இரண்டு கால்களுக்குப் பதிலாக நான்கு கால் களையும் ஒரு வாலையும் பெற்றிருக்கவேண்டும். அப்படி யானால் அவளை நான் ஒரு பூனையாக வைத்திருக்க அனு மதிப்பார்கள். நான்கு கால்களும், ஒரு வாலும் கூடிய தான பூனையாக மாற சுமித்ரா விரும்புகிறாளா? அப்படி யானால் இங்கு வரவிருக்கும் கங்காபென்னிடமிருந்து மருந்துவாங்கி உட்கொண்டு நான்கு கால்களையும், ஒரு வாலையும் அவள் பெற்ற பின்னர் அவளை இங்கு அனுப்பி வையுங்கள்."

ஒருமுறை பொதுக்கூட்டமொன்றில் பேசவந்த போது காந்திஜி மிகவும் அயற்சியுற்ற நிலையில் இருந் தார். எனவே அவருடைய உரையில் அவர், "எனக்கு நீங்கள் அளித்துள்ள வரவேற்புரை படிக்கப்பட்டதாகக் கொள்ளப்பட்டது பற்றி மகிழ்ச்சி கொள்ளுகிறேன். இதேபோன்று என்னுடைய விரிவுரையும் படிக்கப்பட் டதாக நீங்களும் சொல்வீர்கள் என விரும்புகிறேன். ஆனால் நீங்கள் எனக்குக் கொடுக்கவிருக்கும் பண முடிப்பைமட்டிலும் கொடுத்துவிட்டதாகக் கொள் வதற்கில்லை" என்று கூறினார்.

காந்திஜி நோய்வாய்ப்பட்டிருந்த சமயத்தில்கூட அவருடைய நகைச்சுவை அவரை விட்டுச் செல்லவில்லை.

அவருடைய உடல்நிலை பற்றி ஒருவர் கவலைப்பட்டு விவரம் கேட்டிருந்ததற்கு அவர் அளித்த பதிலில் வருமாறு குறிப்பிட்டிருந்தார். "டாக்டர்கள் என்னுடைய ரத்த அழுத்தம் மிகவும் அதிகமாக இருக்கிறதென்று கூறியுள்ளபோதிலும் நான் அதைச் சிறிதும் உணரவில்லை. நேற்று மூன்றுடாக்டர்களுடைய, மூன்று அளவைக்கருவிகள், மூன்று வேறுபட்ட அழுத்த அளவுகளை, முறையே 200, 180, 160, ??? என்று காட்டின. இவ்வாறு டாக்டர்களுக்கிடையையே வித்தியாசம் இருந்தால் நாம் என்ன செய்யமுடியும்?'' காந்திஜி டாக்டர்கள் எழுதிக் கொடுக்கும் மருந்துக் குறிப்புகளில் அதிகம் நம்பிக்கை வைப்பதில்லை. ஒருதடவை சிறந்ததான சலவை சவுக்காரம்ஒன்றையும்,சிறந்ததொருகுளியல் சோப்ஒன்றையும் தயாரிப்பதற்கு செய்முறை ஒன்று அவருக்குத் தேவையாக இருந்தது. அதுபற்றி அவருடைய சகஊழியரொருவருக்கு எழுதிய க்டிதமொன்றில், "பற்பொடி பற்றி டாக்டர் பிரபுல்லா சந்திர ரே கூறியதை நீங்கள் மறந்திருக்க மாட்டீர்கள். தொழிற்சாலையில் தயாரிப்பான பற்பொடி முட்டாள்களின் உபயோகத்துக்கானதாகும்; சாக்பீஸ் அல்லது அடுப்புக் கரியைத் தூள் செய்து உபயோகிப்பது விவேகமுள்ளவர்கள் கடைப்பிடிக்கவேண்டிய சிறந்த பற்பொடியாகும் என்று அவர் குறிப்பிட்டிருந்தார்; அதுபோன்று அறிஞர்கள் உபயோகிப்பதற்கான சாதாரண சோப் எதுவும் இல்லையா?'' என்று கேட்டிருந்தார்.

காந்திஜியின் டாக்டர் நண்பரொருவர் தம்முடைய பற்களை இழந்திருந்தார். பாபு அது பற்றிக் குறிப்பிட்டு "என்னைப்போன்று டாக்டரொருவர் பொக்கைவாயினராகயிருப்பது எத்தகைய வெட்கத்துக்குரிய விஷயமாகும்? டாக்டர்களே நோய்வாய்ப்பட்டால் நாம் எவரிடம் நம்பிக்கை வைக்கமுடியும்'' என்று

ஹரிபாயைக் கேட்கவேண்டும்" என்று வரைந்திருந்தார்.

பாபுவின் குதூகல மனப்போக்கை விவரிக்கும் வரலாறுகளும், சம்பவங்களும் எண்ணிலடங்காது; அவர் வெளிநாட்டவரிடத்திலும்கூட தமது நகைச்சுவையைக் காட்டிவந்தார் என்பதை அவை நமக்கு எடுத்துணர்த்துகின்றன.

காந்திஜி 1931-ம் ஆண்டில் வட்டமேஜை மகாநாட்டில் கலந்து கொள்வதற்காக லண்டன் வந்திருந்தபோது ஒருநாள் காலையில், பிரபல சினிமா சிரிப்பு நடிகர் சார்லி சாப்ளின் அவரைப் பார்க்க வந்திருந்தார். தம்மைப் பற்றி பாபு எதுவும் கேள்விப்பட்டிருக்கவில்லையென்று அறிந்தபோது சாப்ளின் திடுக்கிட்டுப் போனார். ஆனால் அது எவ்வகையிலும் அவர்கள் சம்பாஷணைக்குத் தடையாக இருக்கவில்லை. அடுத்த அரைமணி நேரத்துக்கு அவர்கள் சிரித்து உரையாடிக்கொண்டிருந்தார்கள். ஆனால் காந்திஜிதான் தன்னுடைய நகைச்சுவையின் மூலம் அச்சிரிப்பு நடிகரையே சிரிப்பில் ஆழ்த்திக் கொண்டிருந்தார், என்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும்.

லங்காஷயருக்கு காந்திஜி விஜயம் செய்தபோது தொழிலாளர் ஒருவரைச் சந்தித்து அவருக்கு எத்தனை குழந்தைகள் என்று வினவினார். "எட்டுப்பேர் ஐயா, அவர்களில் நான்குபேர் குமாரர்கள், நான்குபேர் குமாரிகள்" என்று அவர் பதிலளித்தார். "எனக்கும் நான்கு குமாரர்கள் இருக்கின்றனர். எனவே உன்னுடன் பாதி வரை நான் போட்டியிட முடியும்" என்று காந்திஜி கூறினார். எல்லோரும் சிரிப்பில் ஆழ்ந்தனர்.

லண்டனில் இருந்தகாலத்தில், அப்போதைய இந்தியச் சக்கிரவர்த்தியான ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் பக்கிங்ஹாம் அரண்மனையில் தன்னை வந்து காணும்படியாக பாபுவுக்கு அழைப்பு விடுத்திருந்தார். மன்னரைக் காணவருபவர்கள் சம்பிரதாய உடைகளை அணிந்து வர வேண்டும் என்றிருந்த உத்தரவுகள் காந்திஜி விஷயத்தில் விலக்கப்பட்டிருந்தன. பாபு தம்முடைய மாமூல் உடையான அரைத்துணியுடன் அரண்மனைக்குச் சென்றார். அச்சம்பவம் மேற்கத்திய நாடுகளின் பத்திரிகைகளில் பிரமாதப்படுத்தப்பட்டு கொட்டை எழுத்துக்களில் வெளியிடப்பட்டன. மேல்நாட்டு அன்பர் ஒருவர் அது பற்றி காந்தியிடம் வினவியதற்கு, ''மன்னர் அணிந்திருந்த ஆடைகளே எங்கள் இருவருக்கும் போதுமான அளவுக்கு இருந்தது'' என்று வேடிக்கையாக காந்திஜி பதிலளித்தார்.

காந்திஜியின் நகைச்சுவை பற்றி விவரிக்கும் சம்பவங்கள் இன்னும் எத்தனையோ உள்ளன. அவை ஒவ்வொன்றிலும் ஆழமானதொரு கருத்து அடங்கியுள்ளது. காந்திஜியின் குழந்தை உள்ளத்தையும், அவருடைய மனிதாபிமானத்தையும், அவர் மனோவிகல்பங்களுக்குக் கட்டுப்பட்டவர் அல்லர் என்பதையும் அவை நமக்கு எடுத்துணர்த்துகின்றன. அவ்வியல்பு எத்தகைய சூழ்நிலையையும் சமாளிப்பதற்கான மனோபலத்தை அவருக்கு அளித்தது.



# 30. நேரம் தவறாமை

நேரம் தவறாது அந்தந்த அலுவலை அதனதற்குரிய காலத்தில் நிறைவேற்றுவதில் பாபு மிகுந்த சிரத்தை காட்டிவந்தார். எத்தனை கஷ்டம் நேரிட்டபோதிலும் தாம் நிறைவேற்றவேண்டிய அலுவல்கள் அனைத்தையும் அக்கறையுடன், இம்மிநேரம் பிசகாது அவர் நிறை வேற்றி வந்தார்.

ஒருசமயம் பாபு சபர்மதி ஆசிரமத்தில் இருந்து வந்தபோது, குஜராத்தி வித்தியா பீடத்தின் பிரதிநிதி சபைக் கூட்டமொன்றில் கலந்துகொள்ளவேண்டியிருந் தது; அவருக்கு குறித்த நேரத்தில் எத்தகைய வாகன வசதியையும் அனுப்பிவைக்க இயலவில்லை. அதுபற்றி சஞ்சலமுற்ற பாபு, கால்நடையாகவே அந்த இடத்துக் குச் செல்லத் தீர்மானித்தார். அவ்விடத்துக்கு உரிய நேரத்தில் போய்ச் சேருவதில் அவர் உறுதியாக இருந் தார். பாதிவழி வந்தவுடனே தாம் சடுதியில் அங்கு செல்ல இயலாது என்பதை அவர் உணர்ந்தார். தூரத்தில் கதர் உடை அணிந்த தொண்டர் ஒருவர் சைக்கிள் ஒன்றில் விரைந்து வருவதைக் கண்டார். அவரை உட னேயே மறித்து நிறுத்தி, தாம் வித்தியா பீடத்துக்கு விரைந்துசெல்ல வேண்டியதன் அவசியம் பற்றி எடுத் துரைத்து அவரிடமிருந்து அந்த சைக்கிளை வாங்கிக் கொண்டார்: பிறகு சைக்கிளில் ஏறிக்கொண்டு தம் மால் இயன்ற அளவுக்கு வேகமாக ஓட்டிச்சென்றார். கூட்டத்துக்கு வந்திருந்தவர்கள் அவர் சைக்கிள் ஓட்டிக்

கொண்டு வருவதைக் கண்டு வியப்புற்று நின்றனர். காந்தி சைக்கிள் ஓட்டுவதை அவர்கள் அப்பொழுது தான் முதன்முதலில் கண்டனர்.



டாக்காவில் நிகழ்ந்த ஒரு சம்பவம் ஒன்று பாபு நேரம் தவறுமைக்கு எவ்வளவு முக்கியத்துவம் அளித்துவந் தார் என்பதை நன்கு விளக்குகிறது. அவர் நவாப்கஞ்ஜ் என்ற ஒரு கிராமத்தில் உரையொன்றை நிகழ்த்த வேண்டியிருந்தது. அப்பகுதியில் ஏற்பட்ட நிலச்சரிவு ஒன்றின் காரணமாக மெயில்வண்டி தாமதமாக அவ் விடத்துக்கு ஓடிக்கொண்டிருந்தது; அவர் வேறு ஏதா வது உபாயத்தைக் கையாண்டாலன்றி அவ்விடத்துக்கு உரிய நேரத்தில் போய்ச்சேரமுடியாது என்பதை உணர்ந்தார். விசேஷ ரயில் வண்டியொன்றை ஏற்பாடு

செய்துகொள்ளலாம் என்று அவருடைய சகஊழியர்கள் கூறிய யோசனையின் பேரில் அவ்வாறே செய்வதெனத் தீர்மானித்தார்.

"மக்களுடன் எனக்குள்ள அலுவல்கள், வைஸிராயுடன் உள்ளவற்றைப் போலவே உரியமுக்கியத்துவம் அளிக்கப்பட்டு குறித்த நேரத்தில் நிறைவேற்றப்படவேண்டியதாகும்" என்று பாபு கூறினார். எனவே அவர் கோலன்டோ என்னுமிடத்தில் விசேஷ ரயில்வண்டியொன்றின் மூலம் சென்று, அங்கு அப்பொழுதுதான் கிளம்பிக் கொண்டிருந்த படகு ஒன்றில் ஏறி கூட்டத்துக்குச் சரியான சமயத்தில் நவாப்கஞ்ஜ் போய்ச் சேர்ந்தார்.

நேரந்தவறாது அலுவல்களை நிறைவேற்றுவது விஷயத்தில், யாராகயிருந்தாலும் சரி, அவர் எவ்வளவு பெரியவராக இருந்தாலும் சரி, பாபு மிகவும் கண்டிப்புடன் இருந்துவந்தார்.

ஒருமுறை குஜராத்தில் கோத்ரா என்னுமிடத்தில் நடைபெறவிருந்த அரசியல் மகாநாட்டில் உரைநிகழ்த்தும் பொருட்டு அவர் உரிய நேரத்தில் வந்து சேர்ந்தார். அவர், தம்முடைய உரையை முடித்துக்கொண்டார். லோகமான்ய திலகரும் அக்கூட்டத்தில் பேசவேண்டியதாக இருந்தது. ஆனால் அவர் நேரந்தாழ்த்தி அங்கு வந்துசேர்ந்தார். அவரை உரிய மரியாதையுடன் வரவேற்ற பாபு, தம்முடைய அறிமுகவுரையில், "லோகமான்யர் அரைமணி நேரம் தாமதித்து வந்துள்ளார்; நாம் சுயராஜ்யம் பெறுவதற்கு அரைமணி நேரம் தாமதமானால், அந்தப்பாவம் அவரைத்தான் சேரும்" என்று வேடிக்கையாகக் கூறினார்.



# 31. கணக்கு வைப்பின் அவசியம்

வாழ்க்கையின் ஆரம்ப காலத்திலேயே பாபு பணத்தின் மதிப்பு பற்றி நன்கு அறிந்திருந்தார். காபா காந்தி தன் குழந்தைகளுக்காக சொத்து எதுவும் விட்டுச் செல்லவில்லை. அது அவர்களைக் கெடுத்துவிடும் என்று அவர் கருதிவந்தார். சொத்துக்குப் பதிலாக அவர்களுக்கு நல்ல முறையில் கல்வியளித்திருந்தார். கைச்செலவுக்கென்று மோஹன் ஒருபொழுதும் பணம் பெற்றதில்லை. ஆதலால் சட்டக்கல்வி பயிலுவதற்காக இங்கிலாந்து செல்ல விரும்பிய சமயத்தில் நிதி உதவிக்காக அவர் இங்கும் அங்கும் ஓடவேண்டியிருந்தது. பயணத்தின் முதல் நாள் அன்றுதான் அவர் அதற்கான பணத்தைச் சேகரிக்க முடிந்தது.

இங்கிலாந்தில்கூட பணவிஷயத்தில் பாபு மிகவும் ஜாக்கிரதையாக இருந்துவந்தார். அவர் மிகவும் சிக்கனமாக வாழ்க்கை நடத்திவந்ததுடன் பணத்தைச் செலவிடுவதிலும் மிகவும் ஜாக்கிரதையாக இருந்துவந்தார். ஒருமுறை அவர் பழவண்டிக்காரன் ஒருவனுக்கு ஒரு பென்னி நாணயம் அதிகமாகக் கொடுத்துவிட்டதால் அதை மீண்டும் பெறுவதற்கு அவரைப் பிடிக்க வெகுதூரம் ஓடவேண்டியிருந்தது. ஆனால் அந்த அதிகப்படி பென்னி அவருக்குத் திரும்பக் கிடைக்கவில்லை. இச்சம்பவத்தை அவர் மறக்காமல் நினைவில் கொண்டிருந்தார். லண்டனில் வாழ்ந்த நாட்களில் அவர் எழுதிவந்த நாட்குறிப்புப் புத்தகத்தின் பகுதி ஒன்றிலும் பிற்பட்டு அவர் எழுதிய "லண்டன் வழிகாட்டி" என்ற துண்டுப்புத்த

கத்திலும் அன்றாட உபயோகப் பொருள்களின் விலைகள், அவை எங்கு மலிவாகக் கிடைக்கும், அவற்றை எவ்வாறு சிறந்த வகையில் பயன்படுத்திக் கொள்ளமுடியும் என்பது பற்றியெல்லாம் குறிப்புகளை வரைந்திருந்தார். எனவே அவர் தம்பிடி கூட விடாது கணக்கிட்டு வந்ததில் ஆச்சரியம் இல்லை. அவர் 1891-ல் எழுதிய குறிப்பு ஒன்றில் "பணமில்லாது சிறகொடிந்த பறவைபோல் நான் இருந்து வந்ததை உணர்ந்தேன்'' என்று எழுதியுள்ளார்.

இளைஞர்களுக்கான அறிவுரை ஒன்றில் "ஒவ்வொரு இளைஞரும் எனது வாழ்க்கையைப் படிப்பினையாகக் கொள்ளவேண்டும். அவரவர்களுக்குக் கிடைக்கும் தொகைகள் பற்றியும், அதை எவ்வாறு செலவழித்தனர் என்பதைப் பற்றியும் கணக்கு தவறாமல் வைத்திருக்க வேண்டும். அப்படிச்செய்தால் என்னைப்போன்று இறுதியில் அவர்களும் பயன் அடைவார்கள் என்று நம்புகிறேன்'' என்று கூறியுள்ளார்.

சிக்கனமாக வாழ்க்கை நடத்த தாம் மேற்கொண்ட முயற்சிகள் பற்றியும், அன்றாட பழக்கமாக தமது வரவு செலவுகள் பற்றிக் குறிப்புகள் வைத்து வந்ததையும் பாபு தமது சுய சரிதையில் விவரித்துள்ளார். "நான் செலவிட்ட ஒவ்வொரு பார்த்திங் நாணயத்துக்கும் கணக்கு வைத்து வந்தேன். எனது செலவுகளை மிகவும் கவனத்துடன் முன்கூட்டியே திட்டமிட்டுச் செய்து வந்தேன். பஸ்கட்டணங்கள், கார்டு, கவர் கட்டணங்கள் மற்றும் பத்திரிகைகளுக்காகச் செலவிட்ட சில்லரை நாணயங்கள் ஆகியவை போன்ற அற்பச் செலவுகளைக் கூட ஒன்றுவிடாமல் கணக்கை எழுதி ஒவ்வொரு இரவும் படுக்கப்போவதற்குமுன்பு அன்றாட வரவு செலவுக்

கணக்கு பார்த்து, பாக்கி சரியாக உள்ளதா என்று கணக்கிடுவேன்; இந்த பழக்கத்தை அன்றுமுதல் இன்று வரையில் விடாது கடைபிடித்து வருகிறேன்.''

ஆம்; அவர் கூறியது உண்மைதான், டர்பன் நகரைச் சேர்ந்த நேட்டால் இந்திய காங்கிரஸ் ஸ்தாபனம் தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் உள்ளாகிவரும் துன்பங்கள் பற்றியும், அவர்களுக்கு இருந்துவருகிற பிரச்சனைகள் பற்றியும், இந்திய மக்களுக்கு எடுத்துரைப்பதற்காக பாபுவை 1896-ம் ஆண்டில் இந்தியாவுக்கு அனுப்பிவைத்திருந்தது. இந்தியாவில் பயணச் செலவுகளுக்காகவும், அச்சுக்கூலி முதலிய செலவுகளுக்காகவும், கைச்செலவுகளுக்காகவும் 75 பவுன் அவரிடம் கொடுக்கப்பட்டிருந்தது. டிசம்பர் மாதம் அவர் டர்பன் நகரம் திரும்பியபோது ஜூலை 5-ம் தேதியிலிருந்து நவம்பர் 29-ம் தேதி வரையுள்ள காலத்தில் தாம் செலவழித்த தொகைகள் பற்றி அறிக்கை ஒன்றை அவர் சமர்ப்பித்தார். அவ்வறிக்கையில், ரயில் கட்டணம்; பம்பாய் கல்கத்தா போன்ற நகரங்களில் தங்கியபோது தமக்கு ஏற்பட்ட ஹோட்டல் செலவுகள், துண்டுப் பிரசுரங்களை அச்சிடுவதற்காக செலவிட்ட தொகைகள், தென்னாப்பிரிக்காவுக்கும் இங்கிலாந்துக்கும் அனுப்பிவைத்த தந்திகளுக்கான செலவுகள் ஆகியவை போன்ற பெருஞ் செலவுகளைத் தவிர அற்ப சொற்பமான செலவினங்கள் பற்றியும் குறிப்பிட்டிருந்தார்.

இச்சில்லரைச் செலவுகளில் தண்ணீருக்காக அரையணா முதலாக இரண்டணா வரையிலாக அவர் செலவிட்ட தொகைகள் - பிச்சைக்காரர்களுக்கும் செப்படி வித்தைக் காரர்களுக்கும் ஓரணாவீதம் தொகைகள் கொடுத்தது, தந்தி பட்டுவாடா செய்த பையன், ஸ்டேஷனில் வேலைக்

காரர்கள், வழிகாட்டிகள் தோட்டக்காரர்கள், விடுதி சிப்பந்திகள், போர்ட்டர்கள், ஆகியோர் போன்றோருக்கு ஓரணு முதல் நான்கு அணு வரையிலாக இனும் அளித்தது, டிராம் கட்டணத்துக்காக ஒரு அணு செலவழித்தது; மசி, சவுக்காரம், செய்திப் பத்திரிகைகள் போன்றவற்றுக்கு ஒரு அணு வீதம் செலவழித்தது; நாடா லேஸ் போன்ற சில்லரையினங்களுக்கு ஒரு அணு வீதம் செலவழித்தது ஆகிய பலவகைப்பட்ட சில்லரைச் செலவுகள் பற்றியும் அதில் அவர் குறிப்பிட்டிருந்தார்.

நேட்டால் இந்திய காங்கிரஸ் நிறுவனத்தின் காரியதரிசியாக பாபு பொறுப்பேற்றிருந்தார். அவ்வகையில் அவர் பலருடைய நம்பிக்கையையும் பெற்றிருந்தார். அவர் விரும்பியிருந்தால், தமது கணக்குவழக்குகளில் சில்லரைச் செலவுகள் அனைத்தையும் ஒன்று சேர்த்து ஒரே தொகையாக காட்டியிருக்கலாம்; அல்லது அவற்றைக் குறிப்பிடாமல்கூட இருந்திருக்கலாம். ஆனால் இவ்வாறு செய்வது அவருக்கு எவ்வகையிலும் பிடித்தமாக இருக்கவில்லை. அவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்த தொகைகளுக்கு ஒரு அணுகூட விடாமல் கணக்குக் காட்டுவதில் அவர் ஆழ்ந்த அக்கறை கொண்டிருந்தார்.

தென்னாப்பிரிக்காவில் போயர் யுத்தத்தின்போது 1899-1902-ஆண்டு காலத்தில் நாட்டுப்பற்றுச் சங்க நிதிக்காக (பேட்ரியாடிக் லீக் பண்ட்) இந்தியர்களிடமிருந்து நன்கொடைகளை வசூலித்தார்; இந்த நன்கொடை ஜாபிதாக்களும் வரவு செலவு கணக்கு விவரங்களும் பல ஆண்டுகள் கழித்தும்கூட காப்பாற்றி வைக்கப்பட்டிருந்தன.

ஆப்பிரிக்காவில் நடத்திய சத்தியாகிரகப் போராட்டத்துக்காக இந்தியாவிலிருந்து பெரும் அளவிலாக நன்கொடைகளை அவர் பெற்றுவந்தார்; தாம் பெற்ற தொகைகள் பற்றியும், அவற்றை எவ்வாறு செலவழித்தார் என்பதைப்பற்றியும் விவரமான கணக்குகளை அவர் சமர்ப்பிக்கத் தவறவில்லை.

பொது நிதிகள் விஷயத்தில் பாபுவின் பொறுப் புணர்ச்சிக்கு சீரிய எடுத்துக்காட்டாக ஒரு சம்பவத்தை இங்கு குறிப்பிடவேண்டும். அவர் 1920-ஆம் ஆண்டு வாக்கில் அகமதாபாத்தில் தேசீயப்பள்ளி ஒன்றுக்கான கட்டடம் ஒன்றை கட்டத் திட்டமிட்டிருந்தார். நகரத்தில் அப்போது கடுமையாகப் பரவியிருந்த இன்ப்ளுயன்சா நோய் காரணமாக கட்டுமான வேலையை ஒத்திப் போடவேண்டியிருந்தது. தாராள மனதுடைய வர்த்தகர் ஒருவர் பள்ளிக் கட்டடத்திற்காக 40,000 ரூபாய் நன்கொடை யொன்றை பாபுவிடம் அளித்திருந்தார். பாபு அத்தொகையை அவ்வர்த்தகரிடமே திருப்பிக் கொடுத்துவிடவேண்டுமென்று வலியுறுத்தினர். "எந்தக் காரியத்திற்காக இந்த நன்கொடை வழங்கப்பட்டதோ, அக்காரியம் ஒத்திப்போடப்பட்டிருக்கிறது. எனவே அதைக் கொடுத்தவரிடமே திருப்பிவிடவேண்டும் மீண்டும் தேவைப்படும்போது வாங்கிக்கொள்ளலாம். பிறர் ஒருவருடைய பணத்தை நம்மிடம் ஏன் வைத்துக்கொள்ளவேண்டும்?' என்று அவர் கூறினர். ஆனல் நன்கொடை அளித்த நபரோ அதை திருப்பிப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டார்.

பாபு தாம் மேற்கொண்ட பல்வேறு இயக்கங்களின்போது வசூலாகிய பொதுநிதிகள் அனைத்துக்கும் ஒரு பைசா கூட விடாமல் கணக்குகளை வைத்துவந்தார்.

“நப ...க் கிடைக்கப்பெறுகிற ஒவ்வொரு தம்பிடிக்கும் கணக்குக்காட்டாது போனாலும், பொதுநிதிகளை சீரிய முறையில் பயன்படுத்தத் தவறினாலும் பொதுவாழ்க் கையிலிருந்தே நாம் அகற்றப்படுவதற்கு உரித்தாவோம்” என்று அவர் கூறுவது வழக்கம்.

பாபுவுக்குச் சொந்தமாக சொத்து எதுவும் கிடை யாது. தனது சொந்தத் தேவைகளுக்காக பொதுப் பணத்தை அவர் ஒருபொழுதும் பயன்படுத்தியதில்லை. தமது நண்பர்களையும் அவ்வாறே நடந்துவரும்படியாக அவர் ஆலோசனை கூறுவார்.

கொடுக்கப்பட்ட பணத்துக்கு சரிவரக் கணக்குக் காட்டத் தவறினாலோ, அதிலொரு பகுதியை சொந்த உபயோகத்துக்காக பயன்படுத்திக்கொண்டாலோ, அவர் யாராக இருந்தாலும் சரி, அவருடைய அன்புக்குரியவர் களாகவும் இருந்தாலும் சரி, பாபு சும்மா விட்டுவிட மாட்டார். ஒருமுறை கஸ்தூரிபாய் ஆசிரம நிதியி லிருந்து சொற்ப தொகையொன்றை தனது உபயோகத் துக்கென எடுத்து வைத்திருந்தார். அதுபற்றி அறிந்த வுடன், பாபு அவரை பகிரங்கமாக பலர் முன்னிலையில் கடிந்துகொண்டதுடன், தனது மனைவியின் தவறுக் காக தான் நடத்திவந்த பத்திரிகையில் பகிரங்கமாக மன்னிப்பும் கேட்டுக்கொண்டார். ஹரிஜன மேம்பாட் டுக்காக இயக்கம் நடத்திவந்த காலத்தில், அப்பணிகளுக் காக அவர் ரொக்கமாகவும், மற்றும் தங்க நகைகளாகவும், வெள்ளி நகைகளாகவும் நன்கொடைகளை பெற்று வந்தார். அவரது பயணங்களின்போது வழிநடுவே இடைப்பட்ட ரயில்வே ஸ்டேஷன்களிலும், இதர விடங்களிலும் ஏழை மக்களிடமிருந்து சிறு நாணயங் களை அவர் நன்கொடையாக வசூலிப்பது வழக்கம். இந்

நாணயங்கள் மூட்டை மூட்டையாகச் சேர்ந்தன. அவற்றை எண்ணி, வசூல் தொகைகள் பற்றிய கணக்கு களைத் தயாரித்து நன்கொடை ஜாபிதாக்களை, ஹரிஜன் பத்திரிகையில் வெளியிடுவதில் பாபுவின் காரியதரிசி களும் சகபாடிகளும் பல நாட்கள் சிரமப்படவேண்டி இருந்தது.

பாபு அடிக்கடி கூறுவார்; "பொதுப்பணம், இந்தியா வின் ஏழை மக்களைச் சார்ந்ததாகும். அவர்களைக்காட் டிலும் ஏழைகள் எவரும் இவ்வுலகத்தில் இல்லை. எனவே பொதுமக்களிடமிருந்து நாம் பெறும் தொகைகள் விஷ யத்தில், பின்னும் உன்னிப்புடனும், பின்னும் உஷாரு டனும், பின்னும் கவனத்துடனும் இருந்து வரவேண் டும்; ஒரு தம்பிடிகூட விடாமல் கணக்குக்காட்டத் தயா ராக இருக்கவேண்டும். கணக்குகள் முறைப்படி வைக் கப்பட்டு வராமல்போனால் வரவு செலவுகளின் உண்மை நிலையை எடுத்துக்கூறுவது சாத்தியமில்லை. இந்த விதியை அவர் தனி நபர்கள் விஷயத்தில் மட்டிலுமின்றி ஸ்தாபனங்கள் விஷயத்திலும் தவறாது கடைப்பிடித்து வந்தார்.

பணவிஷயத்திலும் சரி, வேறு விஷயங்களிலும் சரி, அவரே ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகவும், முன் மாதிரியாகவும் விளங்கி வந்தார். உபதேசங்களை அனுஷ் டானத்தில் கொண்டு வரவேண்டும் என்பதே அவரது குறிக்கோளாக இருந்து வந்தது.

  

# 32. அற்ப விஷயங்களிலும்கூட விசேஷ அக்கறை

சேவாகிராம ஆசிரமத்தில், சாப்பாட்டு அறையில் அறிவிப்புப் பலகை யொன்றில் பின்வரும் வாசகம் பொறிக்கப்பட்டிருக்கும்: "ஆசிரமத்தின் சொத்துக்களைத் தங்களது சொத்துக்கள் போன்றும், ஏழையிலும் ஏழையானவர்களின் சொத்துக்கள் போன்றும் எல்லோரும் பாவித்து வருவார்கள் என்று நம்புகிறேன். உப்பு விஷயத்திலும் கூட ஒருவரின் அத்தியாவசியத் தேவைக்குமேல் பரிமாறப்படுவதற்கு அனுமதிக்கக் கூடாது. அதே போன்று தண்ணீர் விஷயத்திலும் வீண் விரயத்தைத் தவிர்க்கவேண்டும்.''

வீண் விரயத்தைத் தவிர்த்துத் தேவையைச் சமாளிக்க வேண்டுமென்பதில் பாபு உறுதியான நம்பிக்கை வைத்திருந்தார். அதேபோன்று சிக்கனத்தின் உயர்விலும் அவர் பெருமதிப்பு வைத்திருந்தார்.

பாபு ஒரு சிறு காகிதத்தைக் கூட வீணுக்கமாட்டார். உதாரணமாக, அவர் ஒரு பக்கம் மட்டிலுமே எழுதப்பட்ட காகிதங்களை தூர எறிந்துவிடாமல் பாதுகாத்துவந்தார். வெற்றுப்பக்கத்தை வீணுக்காமல் கடிதங்களை எழுதுவதற்கு அவற்றை பயன்படுத்திக்கொள்வார். அவருக்குக் கிடைத்த கடிதங்களில் எழுதாமல் விடப்பட்டிருந்த கீழ்ப்பகுதிகளைக் கிழித்து தனியே வைத்துக்கொள்வார். சிறுகிறு காகிதங்களைக்கூட சிறு

குறிப்புக்களையோ, அசல் குறிப்புக்களையோ எழுதுவதற்குப் பயன்படுத்திக்கொள்வார். விலாசம் எழுதப்பட்டு ஏற்கனவே உபயோகிக்கப்பட்ட கவர்களைக் கூட அவர் விடுவதில்லை. அவற்றைப் பிரித்துப் பின்பக்கத்தை எழுதுவதற்குப் பயன்படுத்திக்கொள்வார். அவர் ஆசிரமத்துக்கு வெளியே இருக்குங்காலையில், ஆசிரமவாசிகளுக்கு எழுதும் கடிதங்கள் அனைத்தையும் ஒரே கவரில் போட்டு அனுப்புவார். காகிதங்களுடன் குண்டூசிகளையும், பின்களையும் எறிந்துவிடாமல் அவற்றைத் தனியே எடுத்து ஜாக்கிரதையாகச் சேர்த்து வைப்பதும் அவரது வழக்கமாக இருந்துவந்தது.

ஒருமுறை பாபு, மாணவர் விடுதியொன்றுக்கு விஜயம் செய்திருந்தார். அந்த நிலவிவந்த சூழ்நிலைகளைக் கண்டு அவர் வெகுவாக வருந்தினார். அச்சந்தர்ப்பத்தில் அங்கு வழங்கிய அறிவுரையில் அவர் குறிப்பிட்டதாவது:—

“மாணவர்கள் கைகால் கழுவும் மரத்தினடியே நீரைச் சேகரிப்பதற்கு ஒரு பாத்திரத்தையோ, வாளியையோ, வைத்திருந்தால் நலமாக இருந்திருக்கும். இல்லையெனில் அத்தண்ணீர் அனைத்தும் வீணாகத்தான் போகும். மேலும் தேங்கும் தண்ணீர் கொசுக்கள் பெருகுவதற்கு ஏதுவாக இருக்கும்.”

“சில மாணவர்கள் கிழிந்த போர்வைகளை உபயோகித்துவந்ததை நான் பார்த்தேன். அவற்றை உடனுக்குடன் தைத்திருக்கவேண்டும். இல்லையெனில் அவற்றை இரட்டையாக மடித்து ரஜாய்களாக மாற்றியிருக்க வேண்டும். நான் டிரான்ஸ்வால் சிறையில் இருந்த காலத்தில், இதுபோன்ற போர்வைகளை ரஜாய்களாகத்

தைத்திருக்கிறேன். அப்போர்வைகள் நல்ல கதகதப்பளை அளித்ததுடன் நீண்டநாள் உபயோகத்தில் இருந்துவந் தன. கிழிந்துபோன கந்தைகளைக்கூட உபயோகமற்ற தென எறிந்துவிடக்கூடாது. அவற்றை நன்கு சலவை செய்து வைத்திருக்க வேண்டும். கிழிந்துபோன துணி களுக்கு ஓட்டுப்போடுவதற்கும், வேறு பல வழிகளிலும் அவற்றைப் பயன்படுத்திக்கொள்ளலாம்.''

"சில மாணவர்களுக்கு குளிர்கால உடைகள் போதுமான அளவுக்கு இல்லாததையும், வேறு சில மாணவர்கள் எதிர்மாருக, அளவுக்குமேல் அவற்றை வைத்திருந்ததையும் கண்டேன். ஏன் இவ்வாறு இருக்க வேண்டும்? தேவைக்கு மேல் உள்ளவர்கள், தங்களுக்கு அதிகப்படியாக உள்ளவற்றை, குறைவாக உள்ளவர் களுடன் பங்கிட்டுக்கொள்ள வேண்டும். மேலும் அந்த முயற்சி பரஸ்பர உதவிக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட் டாகவும் விளங்கும்.''

"விடுதியின் வராந்தா, மூங்கில் தட்டி கொண்டு மறைக்கப் பட்டிருப்பதையும் கண்டேன். அவை அங்கு எதற்காக இருக்கவேண்டும்? வராந்தா திறந்த வெளிப் பாங்கில் காற்ருேட்டமுள்ளதாகவும், சூரிய வெளிச்சம் உள்ளே வரக்கூடியதாகவும் இருக்கவேண்டும். தட்டி கள் அவையிரண்டையும் தடுத்து விடுகின்றன.''

"இவையனைத்தும் அற்ப விஷயங்களாகத்தோன்ற லாம். ஆனுல் அற்ப விஷயங்களில்தான் பெரிய விஷ யங்கள் அடங்கியிருக்கின்றன. என்னுடைய வாழ்க் கையே அற்ப விஷயங்களைக் கொண்டுதான் அமைக்கப் பட்டதாகும்.''

ஒருநாள் பாபு மும்முரமாக எதையோ தேடிக் கொண்டிருந்தார். அவர் மனக்கலக்கம் அடைந்திருந்த தாக முகம் எடுத்துக்காட்டியது. அதைக் கண்ணுற்ற காகா சாஹிப், "பாபு, தாங்கள் எதைத் தேடிக்கொண் டிருக்கிறீர்கள்? என்று கேட்டார். "ஒரு சிறிய பென் சில்'' என்று பாபு பதிலளித்தார். காகாசாஹிப் தம் முடைய கைப்பெட்டியைத்திறந்து ஒரு பென்சிலை எடுதது அவரிவிடம் அளித்தார்.

"இது எனக்குத் தேவையில்லை; எனக்கு வேண் டியதெல்லாம் நான் தேடிக்கொண்டிருக்கும் சிறிய பென் சில்தான்'' என்று உறுதியாக பாபு கூறினர்.

"இப்போதைக்கு இதை வைத்துக்கொள்ளுங்கள் பாபு: உங்களுடைய பென்சிலை நான் பிறகு தேடித் தருகிறேன்.'' என்று காகாசாஹிப் கூறினர்..

பாபு தலையையாட்டி, "உனக்குப் புரியாது காகா, நான் அந்த பென்சிலைத் தொலைத்திருக்கக் கூடாது. என்னுடைய அருமை நண்பன் ஒருவருடைய சிறுபையன் ஒருவன் கொடுத்த அன்பளிப்பாகும் அது. அதை என்னிடம் கொடுப்பதற்கு அவன் எவ்வளவு உற் சாகத்துடன் ஓடிவந்தான் தெரியுமா? அதை நான் எப்படி இழக்கலாம்? அது ஒரு குட்டி பென்சிலாக இருந்தால் தான் என்ன?'' என்று பாபு பதிலளித்தார்.

அவர்கள் இருவரும் பிறகு அதற்காக விழுந்து விழுந்து தேடினர்கள்; இறுதியில் அதை ஒரு மூலையி லிருந்து கண்டெடுத்தார்கள். அதைக் கண்டெடுத்த பிறகுதான் பாபு மீண்டும் நிதான நிலைக்கு வந்தார். எந்த ஒரு பொருளையும் அவர் அற்பமாக மதித்ததில்லை

என்பதற்கு இச்சம்பவம் ஒரு சிறந்த உதாரணமாக் விளங்கும்.

பாபுவின் சகஊழியர்களுக்கு இதேபோன்று ஒரு அனுபவம் ஏற்பட்டது. ஒருசமயம் பாபு தன் கைக்குட்டையை எங்கேயோ வைத்துவிட்டார். அதற்காக அவர் அறை முழுவதும் தேடலானார். மற்றவர்களும் அதைத் தேடுவதில் கலந்துகொண்டனர். அவர் ஒரு கூட்டத்துக்கு அவசரமாகச் செல்ல வேண்டியிருந்ததால் அவர்கள் பாபுவிடம் வேறு ஒரு கைக்குட்டையைக் கொடுத்து அதை உபயோகித்துக் கொள்ளும்படியும் கூறினார்கள். ஆனால் அவர் அதை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார். இரவு நேரத்தின்போது பாபு தமது சால்வையை எடுத்துத் தனியே வைக்கும்போது அந்த கைக்குட்டை அதற்குள் ஒரு பேப்டிபின் கொண்டு குத்தப்பட்டு இருந்ததைக் கண்டார்.



# 33. அரைத்துண்டை உடையாக மேற்கொண்டது

**“அரைத்துண்டை நான் என்னுடைய பிரதான உடையாக மேற்கொண்டது என்னுடைய வாழ்க்கை வரலாற்றில் ஏற்பட்ட உடுப்பு மாறுதல்களில் மிகவும் முக்கியமானதொரு கட்டமாகும்” என்று பாபு தமது “யங் இண்டியா” பத்திரிகையில் ஒருமுறை எழுதியிருந்தார். அரைத்துண்டை பாபு எவ்வாறு தமது இறுதி உடையாக மேற்கொள்ள நேரிட்டது?**

மாணவர் வாழ்க்கைக் காலத்தில் லண்டனில் தாம் இருந்து வந்தபோது, பாபு ஐரோப்பிய பாணியில் அமைந்த ஆடைகளையே உடுத்தி வந்தார். பிறகு சுமார் இருபதாண்டு காலம்வரை அத்தகைய ஆடைகளையே அவர் அணிந்து வந்தார். தென்னாப்பிரிக்காவில் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்ட இந்தியர்கள் சிலர் போலீசாரால் சுட்டுக்கொல்லப்பட்ட சமயத்தில்தான் அவர் உடுப்பு மாற்றத்தின் அவசியம் பற்றி முதன்முதலில் சிந்திக்கலாயினர். அச்சம்பவத்துக்குத் துக்கம் தெரிவிக்கும் வகையிலாக அவர் தமது ஐரோப்பிய உடைகளைக் களைந்தெறிந்துவிட்டு இந்திய ஒப்பந்தத்தொழிலாளிகள் அணியும் எளிய உடுப்பையே தானும் மேற்கொண்டார். 1913-ம் வருஷத்துப் படங்களில், பாபு அத்தகைய உடைகளைப் பூண்டு சத்தியாகிரகி ரூபத்தில் காணப்படுவதைப் பார்க்கலாம்.

பாபு 1915-ம் ஆண்டில் நாடு திரும்பியபோது கத்தியவாரி மக்கள் அணியும் சம்பிரதாய உடைகளை — சட்டை, வேஷ்டி, தலைப்பாகை, மேற்போர்வை ஆகியவற்றை அணிந்துவந்தார். இரண்டாண்டு காலம் கழித்து அவர் சம்பரான் சென்றபோதும் அதே பாணியில்தான் உடை உடுத்து வந்தார். ஆனால் அங்குதான் அவருடைய உடைகளில் முதல்முதலாக மாற்றம் ஏற்பட்டது. அவுரி சாகுபடித் தொழிலாளர்களின் இன்னல்கள் பற்றி விசாரித்துக்கொண்டிருக்கையில் பீஹார் கிராமங்கள் முற்றிலும் பிற்போக்கான நிலைமையில் இருந்ததை அவர் கண்ணுற்றார். முறைப்படியான கல்வி ஏற்பாடு எதுவும் இன்றி அவர்கள் எத்தகைய முன்னேற்றத்தையும் காண முடியாதென்பதை அவர் அப்பொழுது உணர்ந்தார். ஆனால் அவர்களுக்குப் பள்ளிகள் மட்டிலும் இருந்தால் போதுமா? தூய்மையான வாழ்க்கையை நடத்துவதற்கும், ஆரோக்கியத்துடன் வாழ்வதற்கும்கூட அவர்களுக்கு முறைப்படியாக போதிக்கவேண்டியிருந்தது.

எனவே கிராமச் சீர்திருத்தத்துக்கென, அவர் ஆசிரியர் தொண்டர் படையொன்றை நிறுவினார். அவர்களில் பெரும்பாலோர் சபர்மதி ஆசிரமத்தைச் சேர்ந்தவர்களேயாவர். பாபு கூப்பிட்டனுப்பியதன் பேரில் கஸ்தூரிபாய் அன்னையும் அங்கு வந்து சேர்ந்தார்.

அத்தொண்டர்களிடத்தில், அவர்கள் கிராமவாசிகளுக்கு வெறும் ஏட்டுப்படிப்பு மட்டிலும் அளித்தால் போதாதென்றும், புறத்தூய்மை, நாகரீகப் பண்புகள் ஆகியவை பற்றியும் அவர்களுக்குப் போதித்துவரவேண்டும் என்றும் அவர் கூறினார். "இந்த கிராமங்கள் மிகவும் அசுத்தமான சூழ்நிலைகளைக் கொண்டிருக்கின்றன;

சந்துகளில் குப்பை, கூளம் நிரம்பியுள்ளது. கிணறுகளைச் சுற்றி சேறும், சகதியும், துர்நாற்றமும் நிறைந்துள்ளது: வீடுகளின் முற்றங்கள் பார்க்கச் சகிக்கவொண்ணாது உள்ளன; வயதுவந்தவர்கள்கூட உடல் தூய்மையின் அவசியம் பற்றி அறியாதவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் அனைவரும் பலவாறான சருமவியாதிகளால் பாதிக்கப்பட்டுள்ளனர்'' என்று பாபு கூறினார்.

கிராமங்களிடையே ஆவன அளவுக்குச் சுத்திகரிப்பு வேலையை மேற்கொள்வதென தொண்டர்கள் முடிவு செய்தனர். கிராமவாசிகளின் வாழ்க்கையில் ஒவ்வொரு துறையிலும் அவர்கள் மாறுதல்களைச் செய்ய வேண்டியிருந்தது. தொண்டர் குழுக்கள் பல்வேறு கிராமங்களுக்கு விஜயம் செய்தனர்.

ஒருமுறை பாபுவும், பாவும் தாங்கள் சிறு பள்ளிக் கூடம் ஒன்றை அமைத்திருந்த, பிதிஹர்வே என்னும் குக்கிராமமொன்றுக்கு விஜயம் செய்தனர். அதற்கருகே சிறிய கிராமம் ஒன்று அமைந்திருந்தது. அக்கிராமத்து மாதர்கள் மிகவும் அழுக்கடைந்த ஆடைகளை அணிந்திருந்ததை பாபு கண்டார். அவர்கள் இருந்த அசுத்தமான நிலையைக் கண்டு அவர் அதிர்ச்சியுற்றார். கஸ்தூரி பாயை அவர்களுடன் பேச்சுக்கொடுத்து அவர்கள் ஏன் தங்கள் ஆடைகளைத் துவைத்து உடுத்துவதில்லை என்று கேட்டறியும்படியாகவும் அவர் கோரினார்.

குடிசைக்கருகே நின்றிருந்த மாதர்கள் சிலரிடம், கஸ்தூரிபாய் பேச்சுக் கொடுத்தார், அவர்களில் ஒருவர் கஸ்தூரிபாயைத் தனது குடிசைக்குள் அழைத்துச் சென்று, "இங்கே பாருங்கள், துணிமணிகள் எதையும் வைப்பதற்கு இங்கு பெட்டியோ அலமாரியோ எதுவும்

கிடையாது. நான் உடுத்தியுள்ள புடவைகூட, என்னிடம் இருக்கும் ஒரே ஒரு புடவையாகும். எனவே அதை நான் எப்படித் துவைத்து உடுத்த முடியும்? எனக்கு இன்னும் ஒரு புடவை வாங்கிக்கொடுக்கும்படி மஹாத்மாஜியிடம் சொல்லவும்; அதன்பின்னர் தினந்தோறும் குளித்துத் தூய்மையான உடைகளை அணிவதாக உறுதிமொழி அளிக்கிறேன்'' என்று கூறினாள்.



இதைக்கேட்ட கஸ்தூரிபாய் மனந்தளர்ந்து அது பற்றி பாபுவிடம் எடுத்துரைத்தார். பாபுவுக்கு அதைக் கேட்க மனது மிகவும் சங்கடமாக இருந்தது. பீஹாரில் அமைந்த அந்த ஏழைக் குடிசையைப் போன்று நாட்டில் எண்ணற்ற குடிசைகள் இருந்துவந்தது பற்றியும் அவர் உணர்ந்திருந்தார். அது நாட்டில் எங்கும் சகஜமாக

காணப்பட்டதொரு சம்பவமாகும். லட்சக்கணக்கான ஏழைக் கிராமவாசிகளின் குடிசைகளில் பெட்டி பேழை எதுவும் கிடையாதென்பதையும், அவர்களுக்கு மாற்றுடை கூடக் கிடையாது என்பதையும், பலர் கிழிசல்களையும் கந்தல்களையுமே அணிந்துவந்தனர் என்பதையும் பாபு ஏற்கெனவே அறிந்திருந்தார்

பீஹார் கிராமத்தில் ஏற்பட்ட அனுபவம் நாட்டு மக்களின் வறியநிலை பற்றி பாபுவின் மனதில் ஒரு அழியாச் சித்திரமாகப் பதிந்துவிட்டிருந்தத. அச்சம்பவம் பற்றி அவர் பல கூட்டங்களில் மக்களுக்கு எடுத்துரைத்துவந்தார்; அச்சம்பவத்தையடுத்தே தம்முடைய ஆடை உடைகளையும் கூட எளிய பாங்கிலாக அமைத்துக்கொள்ளவேண்டுமென்றும், நாட்டு மக்களின் எளிய உடைகளைப் போன்ற வகையிலேயே தம்முடைய உடைகளும் அமைந்திருக்க வேண்டும் என றும் அவர் உறுதி மேற்கொண்டிருக்கலாம் என்றும் தான் அனுமதிக்கவேண்டி யிருக்கிறது.

ஆனல், 1921-செப்டம்பர் மாதத்தில்தான் அவர் உண்மையிலேயே உடையில் பெரும் மாறுதல்களைச் செய்துகொண்டார். அக்காலம் முதலாக இறுதிவரையில் அரைத்துண்டு ஒன்றை மட்டிலுமே அவர் உடுத்திவந்தார். அம்மாறுதல் பற்றிய வரலாற்றை பாபுவே தம் வாயால் வர்ணித்திருக்கிறுர்.

பாபு மதுரைவரை தென்னிந்தியாவில் சுற்றுப் பிரயாணம் ஒன்றை மேற்கொண்டிருந்த சமயம் அது. அவர் எப்பொழுதும் ரயில் வண்டியில்தான் பிரயாணம் செய்வது வழக்கம். ஜனநெரிசல் மிகுந்த ரயில் பெட்டிகளில் பயணம் செய்துவந்த அனைவரும் அந்நிய

துணிகளில் தைக்கப்பட்ட உடைகளையே அணிந்திருந்ததை பாபு கண்டார். அவர்களிடம் காதியின் உபயோகம் பற்றி பேசிக்கொடுக்கலாயினர். அவர்கள் தங்கள் தலைகளை அசைத்து, "காதியின் விலை மிகவும் அதிகமாக உள்ளது; நாங்கள் மிகவும் ஏழைகள் ஆதலால் எங்களால் அதை வாங்குவது சாத்தியமில்லை" என்று பதிலளித்தனர்.

அவர்கள் பதிலைக் கேட்டு பாபு சிந்தனையில் ஆழ்ந்தார். அவர்கள் கூறுவதிலும் ஓரளவு உண்மை உள்ளது என்பதையும் அவர் உணர்ந்தார். ஆனால் பிற்பட்ட ஒரு சமயத்தில் அவருக்கு ஏற்பட்ட ஒரு அனுபவம் அவ்வுண்மையின் முழு பிரபாவத்தையும் அவர் பரிபூரணமாக உணர்வதற்குக் காரணமாக இருந்தது. நாட்டில் லக்ஷக்கணக்கான மக்கள் தங்களுடைய வறுமை காரணமாக கோவணம் ஒன்றையே தங்களது ஆடையாக அணிந்து வந்ததையும் அவர் கண்டார். அவர்களுக்கு தாம் என்ன பதிலளிக்க முடியும் என்று காந்தி சிந்தனை செய்யலானர். தாமும் அவர்கள் போலவே எளிய உடையை உடுத்துவதன் மூலமே அவர்களுடைய நிலையைத் தாம் பூரணமாக உணர்ந்திருப்பதை எடுத்துக் காட்ட முடியும் என்ற முடிவுக்கும் அவர் வந்தார். அதுவரை அரையங்கியும், காந்திக் குல்லாயும், முழு வேஷ்டியும் அணிந்துவந்த அவர், அவற்றைக் களைந்தெறிந்துவிட்டு, இனி அரைத் துண்டு ஒன்றையே தமது ஆடையாக மேற்கொள்வது என்றும் தீர்மானித்தார். அதன் மூலமாகத்தான் தாமும் ஏழ்மைக்கோல ஆடையுடைகளை யணிந்து பாமர மக்களிடம் நெருங்கிப் பழக முடியும் என்ற முடிவுக்கும் அவர் வந்தார்.''

மறுநாட் காலை அவர் நாவிதனைக் கூப்பிட்டுத் தம் தலையை மொட்டையடித்துக்கொண்டார். தம்முடைய குல்லாயையும், அரையங்கியையும் களைந்தெறிந்தார்.

தம்முடைய மாமூலான வேஷ்டிக்குப் பதிலாக ஒரு முழமே அகலமுள்ள கதரினுலான அரைத்துண்டு ஒன்றைத் தம் இடையில் சுற்றிக் கொண்டார். இந்த அரைத்துண்டு தான் வரலாற்றுப் பிரசித்தம் பெற்று, அவரது கடைசிநாள் வரை அவருடைய வழக்கமான அன்றாட ஆடையாக அமைந்திருந்தது.

பல ஆண்டுகள் கழித்து, லண்டனில், அவர் அரைகுறையாக ஏன் ஆடையுடுத்தியுள்ளார் என்று கேட்கப்பட்டதற்கு பதிலளிக்கையில்: "இந்தியாவில் லக்ஷக்கணக்கான மக்கள் இவ்வாறு அரைத்துண்டு ஒன்றைத்தான உடுத்தி வருகின்றனர். அதனுல்தான் நானும் அதை உடையாக மேற்கொண்டேன். என்னை அரைநிர்வாணப் பக்கிரி என்றுகூடச் சிலர் கூறுகின்றனர். இந்தியாவில் உள்ள ஏழைகளுள் ஏழைகளான மக்களுடன் என்னை ஐக்கியப்படுத்திக் கொள்ளும் பொருட்டே நான் இவ்வாறு உடுத்தி வருகிறேன்" என்று கூறினர்.



—:O:—

# 34. ஏழைகளின் அன்பளிப்புகளில் பெருமகிழ்ச்சி

ஏழை எளியவர்களின் அன்பளிப்புகளைப் போன்று வேறு எதுவும் பாபுவுக்கு பெருமகிழ்ச்சி அளித்ததில்லை. நிதி மிகுந்தவர்கள் கொடுக்கும் பண முடிப்புக்களைக் காட்டிலும் ஏழைகளின் அன்பளிப்புகளையே அவர் பெரிதும் மதித்துவந்தார். அத்தகைய அன்பளிப்புகள் அவருக்கும் அவ்வேழை மக்களுக்குமிடையே நட்புத்தளையை ஏற்படுத்துவதற்குப் பெரிதும் காரணமாக இருந்தன. ஒருமுறை ஆந்திராவில் அவர் மாதர் கூட்டமொன்றில் உரைநிகழ்த்துகையில், கிராமீய ஸ்திரீகள் ஒருவர் பின் ஒருவராக மார்புகளிலும், தோள்களிலும், கைகளிலும் அவரவரது மகவுகளை ஏந்தியவாறு பாபு இருக்குமிடத்துக்கு வந்தனர். அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் இடையில் சொருகியிருந்த புடவை நுனிகளை வெளியில் எடுத்து, முடிச்சுக்களை அவிழ்த்து, அவற்றில் இருந்த காலணுக்களை ஒவ்வொன்ருகப் பொறுக்கி பாபுவின் கையில் அர்ப்பணித்தனர்.

அது கண்டு பாபு பெருமகிழ்ச்சியுற்ருர்; அந்நிகழ்ச்சி பற்றிபின்னர் விவரிக்கையில் "அவ்வாறு காலணுக்கள் ஒன்றின்பின் ஒன்ருக என் மடியில் கொட்டப்படுவது கண்டு பெரிதும் பூரித்துப்போனேன். அவற்றை ஈந்த கைகளும், அவர்களின் கண்களும், அவ்வன்பளிப்புகள் உளங்கனிந்து வழங்கப்பட்டவை என்பதை எனக்கு நன்கு

எடுத்துணர்த்தின'' என்று கூறினர். "உள்நோக்குடன் பணமுடிப்புகளுக்கு தாராளமாக நன்கொடைகளை வழங்குபவர்களின் பணத்தைக் காட்டிலும் அவ்வேழை மக்களின் அன்பளிப்புகளே மதிப்பு மிக்கதென எனக்கு அப்பொழுது தோன்றியது.''



மற்ருெரு முறை பீஹாரில் பாபு பயணம் செய்து கொண்டிருந்தபொழுது அவரது ரயில் வண்டி நடுவழியில் ஒரு சிறிய ஸ்டேஷனில் சிறிது நேரம் நிறுத்தப்பட்டது. அச்சமயம் பாபுவின் தரிசனத்தைப் பெறுவதற்காக நூற்றுக்கணக்கான நாட்டுப்புற மக்கள் நெருக்கியடித்துக்கொண்டு வந்தனர். அவர்கள் அப்புனித மகானின் தரிசனத்துக்காக மணிக்கணக்காகக் காத்துக்

கொண்டிருந்தனர். ஹரிஜன நிதிக்காக நன்கொடை கோரி விரித்து நீட்டிய பாபுவின் கைகளில் அவர்கள் நாணயங்களைக் கொட்டியவாறு இருந்தனர். அந்த நாணயங்கள் அனைத்தும் மிகப்பழசாகவும் களிம்பு ஏறியும் இருந்தன; அது கண்டு பாபு கூறினார்; "இந்த அன்பளிப்புகள் மிகவும் புனிதம் ஆனவையாகும். அவற்றைப் பவித்திரம் அடைந்தவையாகவும், உளங்கனிந்து வழங்கப்பட்ட அன்பளிப்புகளாகவும் நான் கருதுகிறேன்."

வேறு ஒரு சமயம் பாபு ஓரிஸ்ஸாவின் கிராமங்களிடையே சுற்றுப்பயணம் ஒன்றை மேற்கொண்டிருந்தார். அங்கு மக்களுடைய வறியநிலை சகிக்கவொண்ணாததாக இருந்தது. அவர்கள் கந்தைகளையே உடையாக அணிந்திருந்ததையும் பாபு கண்டார். அவ்வேழை மக்கள் தங்களால் இயன்ற பொருள்களையும், அவர்கள் விளைவித்த காய்கறிகளையும் பாபுவுக்கு அன்பளிப்பாக வழங்கினர். சிலர் தங்கள் வேஷ்டி முடிச்சுக்களிலிருந்து செப்புக்காசுகளை எடுத்து பாபுவின் கையில் ஈந்தனர். அவர்களுடைய அவலநிலை கண்டு நெக்குருகிய பாபு, அவர்களிடையே தங்கி அவர்களுக்கு உதவுவதில் ஈடுபடலாமா என்று கூட ஒரு கணம் யோசித்தார்.

அம்மக்கள் அனைவரையும் தரித்திர நாராயணனின் வடிவங்களாகவே பாபு கருதிவந்தார். பகவானே அவ்வேழைகளின் உருவில் வந்திருப்பதாகவும் அவர் நினைத்தார்.

## 35. சிறுமி கௌமுதியின் தன்னத்தியாகம்

பாபுவின் கேரளநாட்டு விஜயத்தின்போது, 1934 பிப்ரவரி மாதத்தில் நேர்ந்த சம்பவம் ஒன்று மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். பாபு ஹரிஜன சேவைக்கு நன்கொடைகளை வசூலிக்க அச்சமயம் நாடு முழுவதும் சுற்றுப்பயணம் ஒன்றை மேற்கொண்டிருந்தார். அவர் இறுதியில் கேரளத்தில் உள்ள படகரா என்னுமிடத்துக்கு வந்து சேர்ந்திருந்தார்.

எப்பொழுதும்போல பாபுவைக் கண்டு செல்வதற்காகவும், அவருடைய அறிவுரைகளைக் கேட்டுப் பயன் பெறுவதற்காகவும் மக்கள் பெருந்திரளாக வந்திருந்தனர். பாபு கூட்டத்தில் தாழ்த்திய குரலில் பேசிக்கொண்டிருந்தார். மாதர்களிடம் அவர்களுடைய அணிகலன்களைக் கொடுத்து உதவும்படி அவர் வேண்டுகோள் விடுத்தார். அவ்வாறு கிடைக்கப்பெறுகிற அணிகலன்களை ஸ்தலத்திலேயே ஏலம்கூறி விற்பனைசெய்து வசூலாகும் தொகைகளை அவர் ஹரிஜன மேம்பாட்டுக்கெனப் பயன்படுத்துவது வழக்கமாகவும் இருந்து வந்தது.

பாபு அங்கு கூடியிருந்த மாதர்களை நோக்கி வருமாறு விரித்துரைத்தார். "இந்நாட்டில் அரைப்பட்டினிகிடக்கும்நிலையில் லட்சக்கணக்கான மக்கள் ஜீவனம் நடத்தி வருகின்றனர். பத்துப்பேரில் எட்டுப்பேர் உட்கொள்ளும் உணவு, அவர்களது பசியைப் போக்கும் அளவுக்குக்கூட இருப்பதில்லை இத்தகைய நிலையில் உள்ள நாட்டில்

அணிகலன்களை அணிவதென்பது பெரும் பாவம்; மிகுந்ததொரு காரியமாகும். அவை நமது உள்ளங் களையும் கண்களையும் உறுத்துவனவாக உள்ளன. நம் நாட்டில் மாதர்களுக்குச் சொந்தமெனக் கூறிக்கொள் ளக் கூடிய ரொக்கம் எதுவும் இல்லை என்பது உண் மையே, ஆனால் அவர்கள் தங்கள் உடம்பில் அணிந் துள்ள தங்க, வெள்ளி நகைகள் அவர்களுக்கே சொந்த மானதாகும். அது அவர்களுடைய ஸ்திரீதனமாகும்; அவற்றை அவர்கள் ஒரு நல்ல காரியத்துக்காக அளித் தால் அவர்கள் புனிதப்பணியொன்றைச் செய்தவர்கள் ஆவார்கள்."

"மாதர்கள் அணியும் ஆபரணங்களில் பெரும்பகுதி கலைவண்ணம் உடைத்தனவாகவோ அழகு, தருவன வாகவோ இல்லை; உண்மையில் அவற்றில் சில பார்ப்ப தற்கே அகோரமாக உள்ளன. அவற்றில் அழுக்கும் தூசியும் அடைகின்றன. உதாரணமாக உங்களுடைய கைவங்கிகள், கழுத்தில் அணிந்துள்ள ஆபரணங்கள் அவைபோன்ற இதர அணிகலனகள் அவசியமற்றவை யாகும். முழங்கையிலிருந்து முன்கைவரை நீங்கள் போட்டிருக்கும் வளையல்களைப்பாருங்கள்; இத்தகைய அணிகலன்களை அணிவது வீண் செலவும் நாட்டுக்கு, நஷ் டத்தை விளைவிப்பதும் ஆகும்.

கூட்டத்தினர் பாபுவின் அறிவுரையைக் கேட்டு மௌனத்தில் ஆழ்ந்தனர். மாதர்கள் தலைகுனிந்து நின்றனர். பாபுவின் ஒவ்வொரு வார்த்தையும் அம்பைப் போன்று அவர்கள் உள்ளத்தில் தைத்தது. ஆனால் அவ்வம்புகள் அவர்களை நோகச்செய்யாது மாறாக அவர் களை தீவிர சிந்தனையில் ஆழ்த்தியது.

"உங்களுடைய அணிகலன்கள் அனைத்தையும் என்னிடம் கொடுத்துவிடுங்கள். நாட்டிலிருந்து தீண்டாமைப் பேயை அறவே விரட்டுவதற்கு நான் அவற்றை உபயோகித்துக்கொள்வேன். நம்முடைய இனத்தவரும் சகோதரர்களுமான, கடவுளின் மகவுகளான, ஏழை ஹரிஜனங்களின் சேவைக்கு அவற்றைப் பயன்படுத்திக் கொள்வேன்" என்று அவர் கூறினார்.

அவர் பேசி முடித்தவுடனே பதினாறு வயதுப் பெண்ணொருத்தி கூட்டத்தினரைத் தள்ளிக்கொண்டு, பாபு அமர்ந்திருந்த மேடையின் அருகே வந்துசேர்ந்தாள். அவள் எளியதான ஆடைகளை அணிந்திருந்தாள். கள்ளம் கபடமற்ற அசாதாரணப் பொலிவு ஒன்று அவள் முகத்தில் காணப்பட்டது. அவள் பாபுவின் அருகில் வந்து "பாபுஜி, தங்கள் கையெழுத்து எனக்குக் கிடைக்குமா?" என்று சன்னக்குரலில் கேட்டாள்.

பாபுவின் பதிலுக்குக் காத்திராமல் தன்னுடைய மென்மையான இடது கையிலிருந்து தங்கவளையல் ஒன்றைக் கழட்டி அதை அவரிடம் சமர்ப்பித்தாள். அவர் அதைக் கேட்பாரென்று அவளுக்கு ஏற்கெனவே தெரியும்.

பாபு அவளைப் பார்த்துப் புன்னகை செய்து, தன் முன்னே அவள் நீட்டிய நோட்டுப்புத்தகத்தில் கையெழுத்துப் போடுவதற்கு ஆயுத்தமானார். உடனே அவள் தன்னுடைய வலது கையிலிருந்து மற்றொரு வளையலையும் கழட்டி பாபுவின் கையில் வைத்தாள்.

பாபு அவளுடைய செய்கையைக் கண்டு அசந்து போனார். அவர் கூறினார். "நீ இரண்டு வளையல்களையும் கழட்டிக் கொடுத்திருக்கவேண்டாமே, ஒன்றை

மட்டிலும் கொடுத்திருந்தால் கூட கையெழுத்துப் போட்டுக்கொடுத்திருப்பேனே?''

அதைக் கேட்டு கௌமுதி அத்துடன் நின்றுவிட வில்லை—ஆம் அவள் பெயர் கௌமுதியாகும்—அவள் எதுவும் பேசாது தன்னுடைய தங்கமாலையைக் கழட்டு வதில் ஈடுபட்டாள். ஆனால் அது அவ்வளவு சுலபமாக இருக்கவில்லை. அது எவ்வாறோ அவளுடைய கருமை யான நீண்ட கூந்தலுடன் சிக்கியிருந்தது. எப்படியோ ஒருவாறு அதைச் சிக்கலிருந்து அவிழ்த்து பாபுவின் பாதத்தில் சமர்ப்பித்தாள். அங்கு கூடியிருந்த மக்கள் அனைவரும் ஆச்சரியத்தில் மூழ்கி வாய்மூடாது, கண் கொட்டாது அதைப் பார்த்துக்கொண்டிருந்தனர்.



அப்பாவையின் செய்கையைக் கண்ணுற்ற பாபு மனம் நெகிழ்ந்து போனார். "உன்னுடைய பெற்றோர் கள் உன்னுடைய இத்தியாகத்துக்குச் சம்மதம் அளித் துள்ளனரா?'' என்று பாபு அவளை நோக்கி வினவினார்.

அவள் ஆரத்தைக் கழட்டிக் கொடுத்ததுடன் நின்று விடவில்லை. அவள் கைகள் காதணிகளைக் கழட்டுவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தன. அக்காட்சியைக் கண்ணுற்ற கூட்டத்தினர் பின்னும் பெருமகிழ்ச்சியடைந்து கைதட்டி ஆர்ப்பரித்தனர்.

பாபு அப்பெண்ணை அன்புடன் தன்னருகே அழைத்து "குழந்தாய், உன்னுடைய இப்புனிதச் செயலுக்கு உன் பெற்றோர்கள் சம்மதம் அளித்துள்ளனரா என்று நான் கேட்டதற்கு இன்னும் நீ பதிலளிக்கவில்லையே?" என்று வினவினார். மேடையின் அருகே இருந்த யாரோ ஒருவர், "பாபு, கௌமுதியின் தகப்பனார் இங்குதான் இருக்கிறார். உங்களுக்கு அளிக்கப்பட்ட வரவேற்புரைகளுக்கு ஏலத்தில் நல்ல தொகை கிடைப்பதற்கான முயற்சியில் அவர் ஈடுபட்டுள்ளார். தாராள மனதில் அவர் தம் பெண்ணைவிட சற்றும் குறைந்தவர் அல்லர். அவருடைய உதாரகுணம் பற்றி இப்பகுதியில் அறியாதவர் எவரும் இல்லை" என்று கூறினார்.

பாபு புன்னகை பூத்து, நாணிநின்ற கௌமுதியைப் பார்த்து "பார் பெண்ணே, உன்னுடைய அணிகலன்கள் அனைத்தையும் நீ என்னிடம் கழட்டிக் கொடுத்துவிட்டாய். மீண்டும் இவைபோன்ற அணிகலன்களை அணிவதில்லை என்று எனக்கு வாக்குறுதியளிப்பாயா?" என்று அன்புடன் கேட்டார்.

கௌமுதி பலமாகத் தலையசைத்து அதன் மூலம் தன் சம்மதத்தைத் தெரிவித்தாள். பாபு அவளுடைய நோட்டுப்புத்தகத்தில் தம் கையெழுத்தைப் போட்டுக் கொடுத்து அதை அவளிடம் திரும்பக்கொடுத்து விட்டார்.

கௌமுதியின் கதை அத்துடன் முடிந்துவிட வில்லை. பாபுவின் கேரள விஜயத்தின் இறுதிதினத் தன்று கோழிக்கோட்டில் நடைபெற்ற கூட்டத்தில் அவரிடம் இறுதியாக விடைபெற்றுச் செல்வதற்காக கௌமுதியும், அவளுடைய தந்தையும் வந்திருந்தனர். தன்னுடைய அணிகலன்கள் அனைத்தையும் கழட்டிக் கொடுப்பதற்கு கௌமுதியைத் தூண்டியது யாது என்பதை அறிய பாபு பெரிதும் ஆவலாக இருந்தார். "கௌமுதி, நீ அந்தக் கூட்டத்துக்கு வருமுன்பே உன் னுடைய அணிகலன்களைக் கழட்டிக்கொடுக்க முடிவு செய்துவிட்டாயா? அல்லது கடைசி நேரத்தில் அவ் வெண்ணம் உனக்கு உதித்ததா?" என்று அவர் கேட்டார். பாபுவின் கேள்விக்கு கௌமுதியின் தந்தைதான் பதில் அளித்தார். "அவள் முன்பேயே, வீட்டில் இருக்கும்போதே அவ்வாறு முடிவுசெய்து விட்டு, எங்கள் சம்மதத்தையும் பெற்றாள்" என்று அவர் கூறினார்.

பாபுவுக்கு விஷயம் புரிந்தது; ஆனால் அவர் அப் பெண்ணின் உளப்பாங்கைப் பின்னும் அறியவிரும்பி னார். "கௌமுதி, நீ வீடு திரும்பிச் செல்லும்போது உன்னுடைய கழுத்தும், கையும், காதும் அணிகலன்கள் இன்றி மூளியாக இருப்பது கண்டு உன் தாயார் வருந்த மாட்டாரா?" என்று கேட்டார். கௌமுதி புன்னகை யுடன், "ஆமாம், வருந்தத்தான் செய்வாள்; ஆனால் மீண் டும் அவற்றை அணியும்படி என்னைக் கட்டாயப்படுத்த மாட்டாள் என்பது பட்டிலும் நிச்சயம்" என்று பதி லளித்தாள்.

பாபு அவளை அத்துடன் விடுவதாக இல்லை. "நீ ஒரு காலத்தில் திருமணம் செய்துகொள்ளும்போது,

அணிகலன்கள் இன்றி மூளியாக இருப்பதைப்பார்க்க உன் கணவன் விரும்பாமல் போகலாம், அப்பொழுது நீ என்ன செய்வாய்?'' என்று அவர் கேட்டார். கௌமுதி யின் நாணம் மறைந்து அவளுடைய முகம் சிந்தனையி லாழ்ந்தது. பாபு மேலும் கூறினர்: "இங்கே பார் கௌமுதி; நான் ஒரு சங்கடத்தில் மாட்டிக்கொண் டிருக்கிறேன். உன்னுடைய தியாகச்செயல் பற்றி என் னுடைய ஹரிஜன் பத்திரிகையில் எழுதியிருக்கிறேன். உன் செயல் மிகவும் மகத்தானது. நீ மீண்டும் ஆபர ணங்களை அணியப்போவதில்லையென்று அந்தக்கட்டுரை யில் நான் குறிப்பிட்டுள்ளேன். நீ அதற்குத் தயாராக இல்லையென்ருல் அந்தக் கட்டுரையின் சம்பந்தப்பட்ட பகுதியை மாற்றவேண்டி வரும்; அல்லது நீ உன் வருங்காலக் கணவனின் விருப்பத்துக்கு எதிராக உறுதியுடன் நிற்க வேண்டியிருக்கும். நீ ஒரு கேரளப் பெண். மிகவும் தைரியம் வாய்ந்தவள். நீ அவ்வாறு மனோதிடத்துடன் இருக்கக்கூடியவள் என்பதை நான் அறிவேன். இல்லையென்ருல் அணிகலன்கள் எதுவும் இன்றி உன்னை ஏற்றுக்கொள்ளக்கூடிய கணவனைத் தெரிந்தெடுக்கவேண்டும். இதுபற்றி உன் கருத்து என்ன என்பதைக் கூறுவாயா?''

கௌமுதி பாபுவின் வார்த்தைகளைக் கவனத்துடன் கேட்டுக் கொண்டிருந்தாள். அவை பற்றிச் சிந்திக்கவும் அவள் முற்பட்டாள். அவள்மேற்கொள்ளவேண்டியிருந்த முடிவு மிகப்பெரியது என்பதையும் அவள் உணர்ந் தாள். சற்றுநேரம் யோசித்துவிட்டு "என்னை அணி கலன்கள் அணியும்படிக் கட்டாயப் படுத்தாத கண வனுக்கே நான் மாலையிடுவேன்'' என்று கூறினள்.

அவளுடைய பதிலைக்கேட்டு பாபுவின் கண்களில் பேருவகை பொங்கியது. அவர் கூறினர்; "முன்னொரு காலத்தில் அன்னபூரணி என்று ஒருத்தி இருந்தாள். அவள் திருமணமானவள்; அவள் என் வேண்டு கோளுக்கிணங்க தன்னுடைய ஆபரணங்கள் அனைத் தையும் கழற்றிவிட்டு மீண்டும் அவற்றை அணி வதில்லையென்றும் உறுதிபூண்டாள்; அவள் தன்னுடைய வாழ்நாள் இறுதிவரை அவ்வாக்குறுதியைக் காப்பாற்றி வந்தாள். அவள் இப்பொழுது இப்புவியில் இல்லை. ஆனால் அவளுடைய இடத்தில் இப்பொழுது உன்னை அடைந்திருக்கிறேன்."

பாபு சென்றவிடம் எல்லாம், கௌமுதியின் தன்னலத்தியாகம் பற்றி மக்களுக்கு விரித்துரைத்து வந்தார். அது பற்றி அவருடைய பத்திரிகையில் அவர் வருமாறு எழுதியிருந்தார். "பலவகைப்பட்ட ரசமான அனுபவங்களைக் கொண்ட எனது வாழ்க்கையில், நெக் குருகச்செய்து உள்ளத்தைத் தொட்ட நிகழ்ச்சிகள் எத் தனையையோ நான் கண்டிருக்கிறேன். ஆனால் ஹரி ஜனங்களின் நலனுக்காக நான் மேற்கொண்ட பணி களின்போது ஏற்பட்ட அச்சம்பவத்தைப் போன்று என் உள்ளத்தைத் தொட்டது வேறு எதுவும் இல்லை."



# 36. பணிவும் அடக்கமும் மேன்மை தரும்

"பணியும், அடக்கமும், தாழ்மையுணர்ச்சியும் அடையப் பெருத எவரும் உண்மை பற்றியறிய முடியாது; உண்மைக்கடலில் நீந்த விரும்புவர்கள் முதலில் சூன்ய நிலைக்குத் தங்களைக் கொண்டுவந்துவிட வேண்டும்'' என்று பாபு கூறுவார்.

"உண்மையைத் தேடுபவர்கள், சிறு தூசிக்கும் கீழ்ப்பட்டவர்களாகத் தங்களைக் கருதவேண்டும். தம் மினத்தவருள் தாமே கடையவர் என்று சுயமாகக் கருதாத வரையில், எவரும் முக்தி நிலையை அடையப் பெறுவது சாத்தியம் இல்லை'' என்பார் அவர்.

"மாமரம் மேலோங்கி வளர வளர. அதன் கிளை கள் நாலா பக்கமும் பரவி, தாழ நோக்கி வளருகின்றன. அதே போன்று வலிமை படைத்தவர்களின் பலம் நாளுக்குநாள் அதிகரிப்பதற்கேற்ப, அவர்கள் படிப் படியாக பணிவுணர்ச்சியைப் பெருக்கி வரவேண்டி யது இன்றியமையாததாகும். கடவுளின்பால் அவர் களுக்குள்ள நம்பிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வர வேண்டும்.''

பாபுவைப் பொறுத்தமட்டில் அவர் உண்மை யான பணிவுணர்ச்சியின் சின்னமாகவே விளங்கிவந் தார். மிகவும் சாதாரணத்திறன் படைத்த மனிதர் களைக் காட்டிலும், தான் எவ்வகையிலும் உயர்ந்தவரில்லை என்றே அவர் கருதிவந்தார்.

அவர் உண்மையை உணர்ந்தறிவதில் ஈடுபட்டு வந்தவர் ஆதலால், தன்னுடைய குறைபாடுகள் பற்றி நன்கு அறிந்திருந்தார்; தவறுதல்கள் செய்ய நேரிட்ட பொழுதெல்லாம் அவற்றை பகிரங்கமாக ஏற்றுக் கொள்ள முன்வர அவர் ஒருபொழுதும் தயங்கியதில்லை; தாம் இழைத்த "ஹிமாலயத் தவறுகள்" பற்றியும் அவர் எடுத்துக் கூறி வந்திருக்கிறார். "தாய்ப்பாலைச் சுவைக்கும் இளஞ்சிறார்களிடமிருந்துகூட உதவியை எதிர்பார்க்கும் அளவுக்கு நான் பணிவுணர்ச்சியைப் பெற்றிருக்கிறேன்." என்றும் அவர் ஒருமுறை குறிப்பிட்டிருக்கிறார்.

அவர் தம்மை ஒரு மஹாத்மாவாக ஒருபொழுதும் கூறிக் கொண்டதில்லை. அவர் ஒரு மகான் என்று பிறர் கூறிவந்ததையும் ஏற்க மறுத்தார். "நான் எவ் வகையிலும் என்னை ஒரு மகானாகக் கருதவில்லை" என்றும் அவர் கூறியுள்ளார். பேரும் புகழும் பெறுவதில் எத் தகையதான ஆர்வத்தையும் அவர் காட்டவில்லை. கௌரவமும், மதிப்பும் மன்னர்களின் பேரவைகளுக்குத்தான் அவசியமான அணிகலன்கள் என்றும், தமக்கு அவை எவ்வகையிலும் தேவையில்லை என்றும் அவர் கூறி வந்தார்.

தாம் ஒரு எளிய விவசாயி என்றும், சாதாரண நெசவாளியென்றும் பாபு பல முறை விவரித்துள்ளார். "பணிவும், அடக்கமும் உருவான அம்மனிதனை எவரும் வெல்லமுடியாது; அவருடைய பணிவும், அடக்கமும் கண்களில் நீரை வரவழைக்கின்றன; அப்பட்டமான அவ்வுணர்ச்சி உள்ளத்தைத் தொடுவதாக உள்ளது"

என்றும் காந்திஜியுடன் பழகியவர் ஒருவர் விவரித்துள்ளார்.

"பணிவும், அடக்கமும், இரக்க உணர்ச்சியும் படைத்திராத அறிவாற்றலினுல் பயன் யாதுமில்லை" என்பதாக தம்முடைய பிரார்த்தனை உரையில் ஒருமுறை விவரித்து விட்டு, பிறகு கௌசிக முனியின் கதையைக் கூட்டத்தினருக்கு காந்திஜி எடுத்துரைத்தார்.

கௌசிக முனிவர் தவத்தில் ஈடுபட்டிருக்கையில், அண்மையில் ஒரு மரத்தின் கிளையில் அமர்ந்திருந்த பறவையொன்று விஷ்டித்து அது அவர்மேல் தெறித்தது. அது கண்டு சினமுற்ற அவர் மேலே நோக்கியபோது அவருடைய தவத்தின் வலிமையினுல் அப்பறவை வெந்து சாம்பலாயிற்று. பின்னர் அம்முனி ஒரு வீட்டில் பிக்ஷைக்காகச் சென்றிருந்தார். அவ்வில்லத்தரசி அச்சமயம் தனது கணவனுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தாள். எனவே முனிவர் காத்திருக்க வேண்டியதாயிற்று. அவள் தன்னுடைய கடமைகளை முடித்துக் கொண்டு வெளியேவந்து, முனிவரைஉபசரித்து அவருக்கு உணவளித்தாள். அதே சமயம் நேரிட்ட தாமதத்துக்காக அவரிடம் மன்னிப்பும் கோரினுள். அதன்பேரில் முனிவர் சினமுற்று வெகுண்டார். ஆனுல் அம்மாது அதற்கு எவ்வகையிலும் பயப்படவில்லை. அவள் நிதானமாக, முனிவரை நோக்கி, "உங்களுடைய கோபத்தினுல் எரிக்கப்பெற்றுச் சாம்பலாவதற்கு நான் ஒன்றும் பறவையல்ல. மேலும் இத்தகைய சினத்தை காண்பிப்பது உங்களுக்கு விவேகமான செயலுமாகாது" என்று கூறினுள். அது கேட்டு அம்முனிவர் வெட்கமுற்று "நீ இன்று எனக்கு இருவகைப்பட்ட உணவை வயிற்

றுக்கான உணவையும், சிந்தனைக்கான உணவையும்— அளித்தாய்'' என்று கூறினார். பணிவு அடக்கம் ஆகியவற்றின் அவசியம் பற்றி அவளிடமிருந்து சிறந்த படிப்பினை ஒன்றையும் அவர் பெற்றார்.



# 37. ஏழை எளியவர்களிடம் நல்லுணர்வு

பாபு சென்றவிடமெல்லாம் ஏழை எளியவர்களின் பால் பெரிதும் அக்கறை காட்டிவந்தார். அவர் மனதில் அம்மக்களின் பிரச்சனைகளுக்கே முதலிடம் அளித்து வந்தார். அவர்கள் பகவான் தரித்திர நாராயணனின் பிரதிநிதிகளாக வந்து காட்சியளிப்பதாகவே அவர் கருதினர். ஏழை மக்களுக்குச் சேவை செய்வது கடவுளுக்கு அர்ப்பணிக்கும் சேவைக்கொப்பாகும் என்றும் அவர் கருதி வந்தார். ஏழை எளியவர்களின் நிலைக்குத் தம்மைத் தாழ்த்திக் கொள்ளவேண்டும் என்ற உணர்ச்சி அவர் சிந்தனையை சதா வாட்டிவந்தது. "உள்ளத்தில் பணிவுள்ளவர்கள் தாம் கடவுளின் கருணைக்குப் பாத்திரமாக முடியும்; ஏழை எளியவர்கள் மட்டத்துக்கு நாம் நம்முடைய தேவைகளை சகல வகைகளிலும் குறைத்துக் கொள்ளப் பழகிக்கொள்வதுடன், உண்மையிலேயே உள்ளத்தில் அடக்கமும் பணிவும் உடைத்தவர்களாவதற்கு முயலவேண்டும்'' என்று அவர் கூறுவார்.

இவ்வறிவுரைகள் அனைத்தையும் தமது வாழ்க்கையிலேயே முதலில் மேற்கொண்டு பிறருக்கு சிறந்த எடுத்துக்காட்டாக அவர் விளங்கி வந்தார். பாமர மக்கள் அடையப் பெறாத எப்பொருளையும் தானும் வைத்துக் கொள்வதில்லையென்ற நியதியையும் அவர் தவறாது கடைப்பிடித்து வந்தார்.

சபர்மதி ஆசிரமத்தில் வசித்துவருங்காலத்தில் ஒரு முறை, மலேரியா தொற்று நோயைத் தவிர்ப்பது பற்றி

டாக்டர்களிடம் பாபு ஆலோசனை கோரினார். அத் தொற்று நோய் ஆண்டுதோறும் அங்கு பரவி வந்தது. "கொசு வலையை உபயோகியுங்கள்" என்று டாக்டர்கள் அவருக்கு ஆலோசனை கூறினர்.

"கொசு வலையை உபயோகிப்பது அனைவராலும் சாத்தியமாகுமா? ஏழை மக்கள் மேற்கொள்ளுவதற் கான வழி எதுவும் இல்லையா? என்று பாபு கேட்டார்.

அதன்பேரில் டாக்டர்கள் மாற்று யோசனை யொன்றை அவருக்குத் தெரிவித்தனர். உடம்பு முழு வதையும் துணியால் போர்த்திக்கொள்ள வேண்டுமென் றும், முகத்தில் மண்ணெண்ணையைத் தடவிக்கொள்ள வேண்டும் என்றும், அப்படிச்செய்தால் கொசுக்களின் உபத்திரவத்திலிருந்து மீளலாம் என்றும் அவர்கள் கூறி னர். பாபு அந்த யோசனையைச் சிறந்ததெனக் கருதி உடனே ஏற்றுக் கொண்டார்.

அதன் பின்னர் கொசு வலையை உபயோகிப்பதைக் கைவிட்டுவிட்டு படுக்கச் செல்லும்போது முகத்தில் மண் ணெண்ணையைத் தடவிக் கொள்ளும் பழக்கத்தையும் அவர் மேற்கொண்டார்.

மற்றொரு சமயத்தில் அவரைக் காணவந்திருந்த வெளிநாட்டினர் ஒருவர், அவர் மெத்தை எதையும் உப யோகிக்காது வெறுந் தரையில் துயில் கொள்வதற்கான காரணம் என்ன என்று கேட்டார். "இந்தியாவில் லட் சக்கணக்கான ஏழை மக்களுடன் என்னை ஒன்றிக்கொள் ளச் செய்யும் பொருட்டே நான் இவை அனைத்தையும் செய்து வருகிறேன்" என்று பாபு விளக்கிக் கூறினர்.

அதே காரணத்துக்காக ரயில் பயணங்களே மேற் கொண்ட பொழுதெல்லாம் அவர் மூன்ருவது வகுப்புப் பெட்டியிலேயே பயணம் செய்துவந்தார்.

தம்முடைய வறிய நிலைபற்றி அவர் ஒரு முறை வருமாறு விவரித்திருந்தார்.

"எனக்கு சொத்து என்று ஏதுமில்லை: ஆயினும் உலகத்திலேயே மிக்க செல்வம் படைத்தவளுக என்னை நான் கருதுகிறேன். உடமைகள் அனைத்தையும் துறந்தது எனக்கு லாபத்தையே அளித்துள்ளது. திருப்தி மனப்பான்மையையே, நான் பெற்றுள்ள அரும் பெரும் பொக்கிஷமாகக் கருதுகிறேன். எனவே நான் ஏழ்மை நிலையின் நலன்கள் பற்றி உபதேசித்து வந்தபோதிலும் செல்வந்தனுகவே இருந்து வருகிறேன். என்று கூறுவது சாலப் பொருத்தமாக இருக்கும்."

ஒருநாள் பாபு வங்காளத்தில் ஜமீன்தார் ஒருவரின் விருந்தினராகத் தங்கியிருந்தார். ஜமீன்தார் அவருக்கு தங்கக் கிண்ணங்களிலும், தங்கத் தட்டுக்களிலும் பாலும், பழமும் படைத்தார். அவை குடியானவர்களின் உழைப்பிலிருந்து பெற்றவை என்பதை உணர்ந்தறிந்த பாபு, "இத்தகைய ஆடம்பரப் பொருள்களை என்ஞல் எவ்வாறு ஏற்றுக் கொள்ள முடியும்? உங்களுடைய குத்தகைதாரர்கள் குறைந்த பட்சம் வெள்ளித் தட்டுக்களை உபயோகிக்கும் அளவிலாவது சௌகரிய வசதிகளுடன் வழ்ந்து வருகின்றனர் என்ருல், உங்களுடைய தங்கத் தட்டுகளை உபயோகிப்பது பற்றிச் சிறிதும் யோசனை செய்யமாட்டேன். ஆனுல் அவர்களுடைய வாழ்க்கை அல்லும் பகலும் முடிவில்லாத ஒரு பெரும் வேதனையாக இருந்து வருகையில் தாங்கள்

எந்த தைரியத்தில் இவ்வாறு ஆடம்பரப் பொருள்களை வைத்திருக்கிறீர்கள்?''



பாபு மேற்கொண்ட செயல் ஒவ்வொன்றிலும் அது லட்சக்கணக்கான ஏழை மக்களுக்கு, உதவக் கூடியதாக இருக்குமா என்பதையே பிரதான குறிக்கோளாகக் கருதிவந்தார். அவ்வெண்ணமே அவர் தாரக மந்திரம் ஒன்றையும் உபதேசித்து வந்தார். "குறிப்பிட்ட செயல் ஒன்று பற்றி உங்களுக்குச்சந்தேகம் ஏதும் எழும் பட்சத்தில், நீங்கள் எப்பொழுதாவது பார்த்திருக்கக்கூடிய, மிகவும் வறிய நிலையிலுள்ள, மிகவும் அநாதரவான நிலையில் உள்ள நபர்ஒருவரை நினைவுக்குக் கொண்டுவாருங்கள்; நீங்கள் மேற்கொள்ள விருக்கும் நடவடிக்கை அவருக்கு எவ்வகையிலாவது பயன்தருவதாக இருக்குமாஎன்ற கேள்வியை கேட்டுக் கொள்ளுங்கள். அதன் மூலம் அவர் ஏதாவது பயன் பெருவது சாத்தியமாயின் சிறிதும் தயக்கமின்றி அச்செயலில் ஈடுபடுங்கள்'' என்பதே அந்நல்லுரையாகும்.

பாபு மேற்கொண்ட இயக்கங்கள் அனைத்தும் பாமர மக்களின் நல மேம்பாட்டுக்கு வகைசெய்வதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தன. வரலாற்றுப் பிரசித்தம் பெற்ற தனது உப்புச் சத்தியாகிரகம் பற்றி ஒரு முறை பாபு வருமாறு கூறினார்: "ஏழ்மை நிலையைப் படைத்திருந்து, வயிற்றுக்கு அரைகுறையாக உணவும் பெற்று வந்த நிலையில் வாழ்ந்து வரும் கிராம மக்களுக்கு உப்பு எச்செலவுமின்றி தாராளமாகக் கிடைத்து வரவேண்டுமென்பதற்காகவே நான் அதற்காகப் போராடினேன்." தேசீய கவி தாகூர், பாபு பற்றி ஒருமுறை விரித்துரைக்கையில் கூறியது இங்கு மிகவும் குறிப்பிடத்தக்கதாகும். "பிரகாசமாக எரியும் விளக்கு நமக்கு ஜோதியைத் தருகிறது" என்று அவர் குறிப்பிட்டிருந்தார். அதற்கேற்ப பாபுவும் ஏழை மக்களுக்காகவே உயிர் வாழ்ந்து வந்தார் என்று கூறினால் சிறிதும் மிகையாகாது.



# 38. தாமாகவே ஏழ்மை நிலையை மேற்கொண்டது

தாம் சுயேச்சையாக ஏழ்மை நிலையை எவ்வாறு மேற்கொள்ள நேரிட்டது என்பதைப்பற்றி பாபு பல சந்தர்ப்பங்களில் விரித்துரைத்திருக்கிறார். அது பற்றி விளக்குகையில் அவர் ஒருமுறை பின்வரும் விவரங்களை அளித்திருந்தார்

உண்மையை அறிவதற்காகத் தாம் சோதனைகளை மேற்கொண்ட காலங்களில் பாபு பலபல உண்மைகளைக் கண்டறிந்தார். ஆனால் ஏழ்மை நிலையை மேற்கொள்ள வேண்டியதற்கான அவசியம் பற்றிய உண்மையைத் தான் அவர் முதன் முதலில் அறிந்துணர்ந்தார். ஏழ்மை நிலையை மேற்கொள்வது ஆரம்பத்தில் அவருக்கு ஒரு கடினமான போராட்டமாகத்தான் இருந்தது. அது பற்றி அவர் கஸ்தூரிபாயுடனும், அதே அளவுக்கு தம்முடைய குழந்தைகளுடனும் போராடி அவர்களுக்கு எடுத்துணர்த்த வேண்டியிருந்தது.

அப்போராட்டத்தின் இறுதியில் பாபு ஒரு தீர்மானமான முடிவுக்கு வந்தார். அன்றாடம் மக்கள் ஆளாகிவந்த துன்பங்களையும் அல்லல்களையும் கண்டு தாம் அவர்களுக்குச் சேவைசெய்வதாக இருந்தால், தம்முடைய செல்வம் அனைத்தையும், மற்றும் உடைமைகள் அனைத்தையும் கைவிட்டுவிட்டு, தம்மை அவர்களுடைய நிலைக்கு குறைத்துக்கொள்ள வேண்டும்

என்ற உள்ளுணர்வு அவர் மனதில் அ[illegible]யாச்சித்திரமாக இடம் பெற்றது.

ஆனால் உடமைகள் அனைத்தையும் கைவிடும் பணியில், அபிவிருத்தி ஆரம்பத்தில் [illegible]ந்தகதியில்தான் இருந்து வந்தது. முதலில் அது மிகவும் துன்பத்தைத் தருவதாகவும் இருந்தது. ஆனால் நாள் செல்லச் செல்ல அவர் தம்முடையதென்று கருதிவந்த பல பொருள்களைக் கைவிடும்படியாக நேரிட்டதையும் கண்டார். அப்பொருள்களைக் கைவிடுவதில் ஒரு மகிழ்ச்சியும் அவருக்குப் பிறப்பட்டு ஏற்பட்டது. அவருடன் வாழ்ந்து பணியாற்றி வந்தவர்களும்கூட அதேபோன்று சொத்துக்களையும், உடைமைகளையும் கைவிடும்படியாக நேரிட்டது.

எவ்வளவுக்கெவ்வளவு உடமைகள் குறைவாக உள்ளனவோ அவ்வளவுக்கவ்வளவு தேவைகள் குறைந்து வருவதையும் அவர் தெளிவாகக் கண்டிருந்தார். ஒவ்வொன்றாக உடைமைகள் அவரை கைவிட்டுச் சென்ற போது, பெருஞ்சுமை ஒன்று குறைந்ததாகவே அவர் உணர்ந்தார். இவ்வாறாக படிப்படியாக பாபு தம்மை ஏழ்மை நிலைக்குக் கொண்டுவந்து நிறுத்திக் கொண்டார்.



# 39. ஒழுங்குக் கட்டுப்பாட்டின் அவசியம்

பாபுவின் பொன் மொழிகள் :—"நான் வாழ்க்கையில் பல கடுமையான சோதனைகளுக்குள்ளாகியிருக்கி அவையனைத்தும் எனக்கு ஒழுங்குக் கட்டுப்பாட்டின் அவசியத்தைப் போதித்துள்ளன."

"நம்மில் பெரும்பாலோர் ஒழுங்குக் கட்டுப்பா டற்று இருந்து வருகின்றனர். அற்ப காரணங்களுக் காக ஒருவரோடொருவர் சண்டை போடுவதும் ஒரு வரையொருவர் திட்டிக்கொள்வதும் நமது அன்றாட அனுபவங்களாக இருந்து வருகின்றன."

"ஒழுங்குக் கட்டுப்பாட்டை அனுசரிப்பது கடின மாக இருக்கலாம். ஆனால் அது இன்றியமையாதது என்பதையும் சிறந்த நற்பயனை அளிக்கவல்லது என் பதையும் நான் உணருகிறேன். ஸ்தாபனங்களுக்கு ஒழுங்குக் கட்டுப்பாடு எவ்வளவு அவசியமோ அத்துணை அளவு தனி நபர்களுக்கும் அது அவசியமாகும்."

"ஒழுங்குக் கட்டுப்பாட்டின் அனுசரிப்பில் அந் தஸ்து வேறுபாடு எதுவும் இருக்க முடியாது."

"ஒழுங்குக் கட்டுப்பாடு ஜனநாயகத்தின் உயிர் நாடியாகும்; எனவே ஜனநாயகவாதிகள் அனைவரும் ஒழுங்குக்கட்டுப்பாட்டை கண்டிப்புடன் அமுல் நடத்து பவர்களாக இருக்கவேண்டும்."

"அஹிம்சைத் தத்துவத்தின்கீழ் வரம்பு வரை யறையின்றி செயல்படுவது முடியாது. ஏனெனில் அது

ஒழுங்குக் கட்டுப்பாட்டைப் பெரிதும் அடிப்படையாகக் கொண்டதொரு தத்துவமாகும்.''

"எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக சுதந்திரம் உள்ளதோ, அவ்வளவுக்கு அவ்வளவு ஒழுங்குக் கட்டுப்பாடும், பணிவுணர்ச்சியும் இன்றியமையாததாகும். எப்படி ஒரு தீயையோ, நீர் வீழ்ச்சியையோ வசத்துக் கொண்டுவந்து, மிகத் திறனுடன் கட்டுப்படுத்தாமல் பயன்படுத்த முடியாதோ அதேபோன்று கட்டுப்பாடு இன்றி தெளிவுணர்ச்சியும் பயன்படாது போகும்.''

"சமூக விடுதலைக்கு முதலாய அவசியம் சுயகட்டுப்பாடேயாகும் அதன்றி இப்புவியில் கடவுளின் ராஜ்யமான ராமராஜ்பத்தை நாம் பெறுவது வெறும் பகற் கனவாகவே முடியும்.''

"வாழ்க்கையில் ஏற்படும் இடுக்கண்களே நமக்கு ஒழுங்குக்கட்டுப்பாட்டைப் போதிக்கின்றன. எத்தகைய காப்பும் இன்றி பொறுப்பான வேலைகளில் ஈடுபடுவதற்கு தங்களைப் பயிலுவித்துக்கொள்ளும்போது தான் இளைஞர்கள் பொறுப்பும் ஒழுங்குக்கட்டுப்பாடும் யாது என்பதை நன்குணர்வார்கள்.'

"நாம் நீடித்த ரீதியிலான மாபெரும் சாதனை எதையும் சித்திக்கப் பெறுவதற்கு இரும்பு போன்று உறுதியான ஒழுங்குக்கட்டுப்பாட்டை அமுலுக்குக் கொண்டு வரவேண்டும். மாபெரும் நாடாகத் திகழ அபிலாஷை கொண்டுள்ள மக்களுக்கு ஒழுங்குக்கட்டுப்பாடு அத்தியாவசியமும் இன்றியமையாததுமாகும்.''

•••••••••

# 40. கைராட்டை ஏழை மக்களின் வரப்பிரசாதம்

பாபு அடிக்கடிக் கூறுவார். "நான் ஒருவேளை உணவு இன்றி இருப்பேன். ஆனால் கைராட்டையில் நூல் நூற்காமல் இருக்க என்னால் இயலாது: கைராட்டையில் ஒவ்வொரு இழையையும் இழுக்கும்போதும் நான் ஏழை மக்களையே நினைத்துக்கொள்ளுகிறேன்."



நூல் நூற்பது ஒன்றின் வாயிலாகத்தான் லட்சக் கணக்கான மக்கள் வேலை வாய்ப்பு பெற இயலும் என்பதை பாபு நன்குணர்ந்திருந்தார். வேறு எந்த ஒரு கிராமக் கைத்தொழிலும் அத்துணை அளவு கிராம வாசிகளுக்கு ஊதியம் அளிப்பதாக இல்லை. மேலும் இத்துறையில் மூலதனமும் ஸ்தாபன ரீதியிலான முயற்சியும் சொற்ப அளவே தேவைப்படுகிறது. நூற்புத் தொழில் கதிர் விட்டுப் பிரகாசிக்கும் சூரியன் போன்றும், இதர கிராமத் தொழில்கள் சூரிய மண்டலத்தைச் சுற்றிவரும் பல்வேறு கோள்கள் போன்றும் உள்ளன. இவற்றில்

சூரியனே வாழ்க்கைக்கு அத்தியாவசியமான ஒளியையும் வெம்மையையும் அளிக்கிருன்.

ஏழை மக்களின் நலனுக்காக நூல் நூற்பில் ஈடுபடுவதை ஒரு புனித கடமையாக பாபு கருதிவந்தார். "பகவான் ஏழைகளின் குடில்களிலேதான் அதிகம் வசித்து வருகிருன்'' என்று அவர் கூறுவார். "ஆகவே ஏழைகளின் நலனுக்காக நூல் நூற்பில் ஈடுபடுவது, மிகவும் உன்னதமானதொரு இறைவணக்கமாகவும், சிறந்ததொரு இயக்கமாகவும், உத்தமமானதொரு சேவையாகவும் விளங்கும்.''

சுழலும் ராட்டையே இந்தியாவின் தர்மச் சின்னமாக விளங்குகிறது. அதுவே துயரமுற்றோருக்கு உற்ற நண்பனுக விளங்கி வருகிறது; ஏழை மக்களுக்கு அள்ளி வாரி வழங்கும் காமதேனுவாகவும் அது விளங்குகிறது.

பாபுவின் ஆசிரமங்களில் நூல் நூற்பு, பிரார்த்தனையுடன் இணைந்ததொரு பகுதியாக இருந்துவந்தது என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கதாகும்.

நாட்டின் மக்கள் மேம்பட்டதொரு வாழ்க்கையைப் பெறுவதற்கு கைராட்டையே இறுதி சாதனம் என்று பாபு நம்பிவந்தார். கதர்த் துணியை மக்களின் ஒற்றுமைக்கு ஒரு சிறந்த சின்னமாகவும், நாட்டின் பொருளாதார சுதந்திரத்துக்கும் இந்திய மக்களின் சமத்துவத்துக்கும் ஒரு சிறந்த சின்னமாகவும் பாபு கருதி வந்தார்.

—:O:—

# 41. உணவைப் பெறுவதில் உடல் உழைப்பின் அவசியம்

மனிதனைப் படைத்த கடவுள் அவன் தன் உணவைப் பெறுவதற்கு உழைக்க வேண்டும் என்ற நியதியையும் வகுத்துள்ளார். உழைக்காது உண்பவர்கள் திருடர்களே ஆவர். இதுவே பாபுவின் உறுதியான கொள்கையாகவும் இருந்து வந்தது.

உலகத்தில் வாழ மனிதன் உழைப்பில் ஈடுபட வேண்டும் என்பதை டால்ஸ்டாயின் நூல்களிலிருந்து பாபு அறிந்துணர்ந்திருந்தார். "கடையனுக்கும் கடைத்தேற்றம்" என்ற ரஸ்கினுடைய நூல் அந்நம்பிக்கையைப் பின்னும் உறுதிப்படுத்தியது. உடல் உழைப்பில் ஈடுபடாமல் உண்பவன் உணவைத் திருடி உண்பவன் ஆவான் என்று கீதை அவருக்குப் போதித்தது.

இந்த உடல் உழைப்பு விவசாயத்துறையைச் சார்ந்ததாகவே இருக்கவேண்டும் என்றும் பாபு கருதிவந்தார். ஆனால் எல்லோராலும் அவ்வுழைப்பில் ஈடுபட இயலாது. எனவே உழவுத் தொழிலுக்குப் பதிலாக மாற்று ஏற்பாடாக ஒருவர் நூல் நூற்கலாம், துணி நெய்யலாம், அல்லது தச்சுத் தொழிலிலோ கருமான் தொழிலிலோ ஈடுபடலாம் என்றும் அவர் கூறிவந்தார். ஆனால் உழவுத் தொழிலே மிகவும் சிறப்பான தொழில் ஆகும் என்பதையும் அவர் வலியுறுத்திவந்தார்.

ஒவ்வொருவரும் நெற்றி வேர்வை நிலத்தில் விழும் படியாக உழைத்து வாழ்க்கை நடத்தி வந்தால், உலகம் சொர்க்கமாகிவிடும். உழைத்து உணவைப் பெறுவது பற்றிய நியதிகளைத் தவருது அனுசரிப்பதன் மூலம் சமுதாயக் கட்டுக்கோப்பில் ஒரு அமைதியான புரட்சிக்கு வழிகாண முடியும். நாகரிகம் படைத்த மானிட சமுதாயத்தில் உடலுழைப்பு ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கிறது.

“ஏழை மக்கள் மேற்கொண்டுவரும் உழைப்பைப் போன்று ஒவ்வொருவரும் அன்ருடம் ஒரு மணி நேரம் உடல் உழைப்பில் ஈடுபட்டுவருவதைக் காட்டிலும், வேறு எதையும் உன்னதமானதென்ரே, தேசியமானதென்ரே நான் கருதவில்லை. இத்தகைய உழைப்பின் மூலம் ஒவ்வொருவரும் தங்களை ஏழை மக்களுடன் ஒன்றுபடுத்திக்கொண்டு மானிட சமுதாயம் முழுவதுடன் ஒன்றுபடுத்திக்கொள்ளுவது சாத்தியமாகும்.

தென்னுப்பிரிக்காவில் தாம் அமைத்த போனிக்ஸ் குடியமைப்பு ஸ்தலத்திலும், டால்ஸ்டாய் பண்ணையிலும், மற்றும் இந்தியாவில் தாம் அமைத்த சபர்மதி, சேவாகிராம ஆசிரமங்களிலும் இந்நியதிகள் அனைத்தையும் பாபு தவருது கடைப்பிடித்து வந்தார்.

உழைப்பின் அவசியம் பற்றி எடுத்துக்கூறுவதில் வரம்புவரையறை ஏதும் இருக்கமுடியாது. கிருஷ்ண பகவான் கீதையில் கூறுகிருர். ‘உறக்கம் இன்றி உழைப்பில் நான் சதா ஈடுபட்டு வராவிட்டால் மானிட சமுதாயத்துக்கு ஒரு தவருன வழியைக் காட்டியவனுகவே ஆவேன்.’’



# 42. ஹரிஜன மக்கள் கடவுள் புத்திரர்கள்

இளம்பிராயத்திலேயே பாபு தீண்டாமைக் கொடுமையை எதிர்த்து வந்தார். மோஹன் பாலகனாக இருந்த காலத்தில் அவனுடைய வீட்டில் மலஜலங்களை அப்புறப் படுத்துவதற்கும், வெளிமுற்றத்தைச் சுத்தப்படுத்து வதற்கும் உகா என்ற பெயருடைய தோட்டிப் பையன் ஒருவன் வருவது வழக்கம். அப்பையன்மீது படக்கூடா தென்று மோஹனுக்குக் கடுமையான உத்தரவுகள் இடப் பட்டிருந்தன. அப்படி எப்பொழுதேனும் தவறி அவன் மீது பட்டுவிட்டால் அதன் காரணமாக ஏற்பட்டதாகக் கருதப்பட்ட தீட்டை நீக்கும் பொருட்டு அவன் குளிக்கும்படியாக நிர்ப்பந்திக்கப்படுவதும் வழக்கமாக இருந்தது.

இளம் மோஹன் பெற்றோரிடம் பாச உணர்ச்சியும், கடமை உணர்ச்சியும், கீழ்ப்படிதல் உணர்ச்சியும் படைத் தவனாக இருந்தான். எனவே தனது பெற்றோர்களின் கண்ணியத்தையோ, கௌரவத்தையோ பாதிக்கக்கூடிய எந்த ஒரு விஷயத்தையும் அவன் செய்வதில்லை. ஆனால் உகா விஷயத்தில் மட்டிலும், அவன் தனது பெற்றோர் களிடம், குறிப்பாக தன் அன்னையுடன் கருத்து வேறு பாடு கொண்டிருந்தான். இதுபற்றி பாபு ஒரு முறை வருமாறு எழுதியுள்ளார்: "உகாவின்மீது படுவத னால் அபவித்திரம் ஏற்படுவதாகக் கருதுவது முற்றிலும் தவறு என்று என் அன்னையிடம் கூறினேன். கடவுள் நீரி லும், நிலத்திலும் எங்கும் பரவியிருக்கையில் அவர் உகாவின் இடத்தில் எப்படி இல்லாதிருக்க முடியும்?"

மோஹனின் இக்கேள்விக்கு பதிலளிப்பது புத்தலீ பாய்க்குச் சற்று சிரமமாகத்தான் இருந்தது. தீண்டாமை அனுசரிப்புக்கு எதிராக இந்திய புராணங்களிலும் கூட எத்தனையோ கதைகள் இருந்தன. இராமாயாணத்தில் "படகோட்டி குகன் இராமன், இலக்குமணன், சீதை ஆகியோரைக் கங்கையைக் கடப்பதற்காகத் தனது படகில் அழைத்துச் செல்லவில்லையா? அவ்வாறாயின் அவனைத் தொட்டதனால் ஸ்ரீ ராமன் அபவித்திர நிலையை அடைந்தாரா? ஸ்ரீ கிருஷ்ண பகவான் விதுரனுடைய குடிசையில் பால் அருந்தவில்லையா?'' இவ்வகையிலாக பல மேற்கோள்களைக் காட்டி தன் அன்னையுடன் அவர் விவாதிப்பார்.

உகாவைத் தீண்டுவது எவ்வாறு பாப காரியமாகும் என்று அன்னையை வினவின நாளிலிருந்தே அத்தீமைக்கு எதிராக அவருடைய உள்ளம் கொதித்தெழுந்தது எனக் கூறலாம்.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர், பஞ்சமர்கள் என்ற பல பெயர்களில் அழைக்கப்பட்டுவந்த தீண்டாதோர் விஷயத்தில் பாபு எத்துணை ஆழ்ந்த அக்கறை காட்டி வந்தார் என்பதைப் பல சம்பவங்கள் விவரிக்கும்.

பாபு தென்னிந்தியாவுக்கு 1915-ஆம் ஆண்டில் வந்தபொழுது தரங்கம்பாடியின் ஹரிஜனப் பையன் ஒருவனைத் தன்னுடன் சேர்த்துக்கொண்டார். அச்சமயத்தில் அவருடைய ஆசிரமம் அகமதாபாத் நகரத்திலிருந்து சிறு தூரத்தில், கோச்சரப் என்னும் கிராமத்தில் அமையப்பெற்றிருந்தது. பாபு தன்னுடைய ஆசிரமத்துக்கு அந்தப் பையனை அழைத்துச் சென்றார்.

அப்பையன் அழுக்குமிகுந்து அசுத்தமே உருவெடுத்தது போன்று இருந்தான். பாபு முதலில் அவன்

தலையை மொட்டையடித்தார். பின்னர் அவனை நன்கு குளிப்பாட்டினார். அவனுடைய தலை, கண்கள், காது, மூக்கு ஆகிய அனைத்தையும் சுத்தம் செய்தார். அழுக்கு சேர்ந்திருந்த நகங்களையும் வெட்டியெறிந்தார். கால்களை நன்கு தேய்த்து அலம்பினார்.

அவனுக்கு அணிவதற்கென ஒரு வேஷ்டியையும் சொக்காயையும், குல்லாயையும் கொடுத்தார். சில நிமிஷ நேரத்துக்குள்ளாகவே அவனுடைய தோற்றம் முற்றிலும் மாறி ஒரு பண்பட்ட வீட்டிலிருந்து வந்ததொரு பையன் போன்றே அவன் காட்சியளித்தான். இதே போன்று அவனைத் தினந்தோறும் குளிப்பாட்டி தூய உடை அணிவித்துப் பராமரித்து வந்தார்.



வேறொரு சந்தர்ப்பத்தில் சிறிது சுரம் மேலிட்டு நோய் வாய்ப்பட்ட நிலையிலிருந்த ஹரிஜனப் பையன் ஒருவனை அவர் காண நேர்ந்தது. அவனை உடனே ஏற்று தன் கைகளில் ஏந்தி தனது அறைக்கு எடுத்துச் சென்றார். அவனைக் குளிப்பாட்டி போஷித்துப் பராமரித்து அவன் பூரண குணம் அடையும் வரையில் அவனைக் கவனித்து வந்தார்.

தீண்டாமை விஷயத்தில் தன்னுடைய ஆசிரமத்திலேயேகூட பாபு பல இக்கட்டான சங்கடங்களைச் சமாளிக்கவேண்டியிருந்தது. தாதாபாய் என்ற ஹரிஜன் ஒருவர் தனது மனைவி தானிபன், அவர்களுடைய பெண் லக்ஷ்மி மற்றும் ஒரு கைக்குழந்தை ஆகியவர்களுடன் ஆசிரமத்தில் சேர வந்திருந்தார். தாதாபாய் ஆசிரியர் தொழிலில் ஈடுபட்டு வந்தார். அவர் ஆசிரம விதிகளுக்கு உட்பட்டு நடக்கத் தயாராக இருப்பதாகவும் ஒப்புக் கொண்டார். எனவே பாபு அவர்களை ஆசிரமத்தில் சேர்த்துக்கொண்டார்.

ஆசிரமத்தின் செலவுகளை ஏற்று உதவிவந்த சிலருக்கு இது பிடிக்கவில்லை. எனவே அவர்கள் நிதி உதவியை நிறுத்திவிட்டனர். அதைத் தொடர்ந்து பாபுவின் ஆசிரமம் பகிஷ்கரிக்கப்படும் என்றும் வதந்திகள் உலவின. பாபுவும் அவருடைய சக ஊழியர்களும் எல்லாச் சங்கடங்களையும் சமாளிக்கத் தயாராக இருந்தனர். பாபு கூறினார். "அவர்கள் அவ்வாறு பகிஷ்கரிப்பை மேற்கொண்டால், நாம் அகமதாபாத் நகரை விட்டுச் செல்ல வேண்டிய அவசியம் ஏதுமில்லை, ஆசிரமத்தைவிட்டு வெளியே சென்று சுத்திகரிப்புத் தொழிலாளிகள் வசித்து வரும் பகுதியிலேயே நாமும் வசித்து வரலாம். நம்முடைய கைகளைக் கொண்டு வேலை செய்து அதன் மூலம் கிடைக்கும் ஊதியத்தைக் கொண்டே நாம் வாழ்க்கை நடத்தி வரலாம்."

"சிறிது காலத்துக்குள் ஆசிரமத்தின் நிலை மிகவும் சிரமதிசையை அடைந்தது. மகன்லால் காந்தி, பாபுவிடம் வந்து கூறினர். "நம் நிதி ஆதாரம் அனைத்தும் தீர்ந்து விட்டது. அடுத்தமாதச் செலவுக்கு ஏதுவில்லை.'' பாபு நிதானமாகவே பதிலளித்தார். "அப்படியாயின் நாம் சேரிப்பகுதிக்குச் சென்று விடுவோம்.''

இந்த இக்கட்டான சந்தர்ப்பத்தில் பணம் படைத்த ஒருவர் பாபுவை வந்து சந்தித்து பெருந் தொகை ஒன்றை அளித்தார். அதன் மூலம் நிலைமை சமாளிக்கப் பட்டது. பாபுவின் தன்னம்பிக்கையும் மேலும் உறுதி பெற்றது.

இதற்கிடையில் பாபு லக்ஷ்மியைத் தனது மகளாக ஏற்று வளர்த்து வந்தார். தாழ்த்தப்பட்ட வகுப்பில் பிறந்தது காரணமாக மக்கள் சிறுமைப்படுத்தப்பட்டு மனம் நோவதைக்காண பாபுவின் உள்ளம் சிறிதும் பொறுப்பதில்லை. அவர் தம் வாயாலேயே இத்தகைய இரண்டொரு சம்பவங்கள் பற்றி விரித்துரைத்தி ருக்கிறார்.

முதலாவது சம்பவம் 1927-டிசம்பர் மாதத்தில் நிகழ்ந்ததாகும். "அச்சமயம் கோல் கார் என்னுமிடத்தில் தீனபந்து ஆண்ட்ரூஸுடன் உட்கார்ந்து உரையாடிக் கொண்டிருந்தேன்; கூனல் விழுந்த மனிதன் ஒருவன் எங்கள் எதிரே தாழக் குனிந்து பணிவுணர்ச்சியுடன் நின்று கொண்டிருந்தான். எங்களைக் கண்டவுடன் கீழே கிடந்த வைக்கோல் ஒன்றை எடுத்துத் தன் வாயில் போட்டுக் கொண்டு புஜங்களை விரித்த நிலையில் தலைகுப்புற சாஷ்டாங்கமாக கீழே தரையில் விழுந்தான். பின்னர் எழுந்து கைகூப்பி தாள்பணிந்து வாயிலிருந்து அந்த வைக்கோலை எடுத்து எறிந்துவிட்டு தன் தலைமைச் சரிசெய்துகொண்டு

கிளம்பலாயினன். இச்சம்பவத்தை நான் மனவேதனையுடன் கவனித்துக்கொண்டிருந்தேன். பின்னர் அதுபற்றி அறிவதற்காக மொழி பெயர்ப்பாளர் ஒருவரை வரும்படிக் கூவினேன். அம்மனிதனை வரச் சொல்லி அவனுடன் உரையாட ஆரம்பித்தேன். அவன் ஒரு தீண்டாதான் என்பதும், அவனுடைய கிராமம் ஆறு மைல் தொலைவில் இருந்ததென்பதும் தெரியவந்தது. விறகு விற்பதற்காக கோல்கார் வந்திருந்த அவன், என்னைப் பற்றிக் கேள்விப்பட்டு பார்ப்பதற்காக வந்திருந்தான். வைக்கோலை வாயில் ஏன் போட்டுக்கொண்டான் என்று கேட்டதற்கு, அது என்னைக் கௌரவிப்பதற்காகச் செய்யப்பட்டதாகும் என்று மொழிபெயர்ப்பாளர் கூறினர். நான் வெட்கமுற்றுத் தலை குனிந்தேன். அவ்வாறு அவன் என்னைக் கௌரவித்தது நெஞ்சை உருக்கும் வகையிலாக இருந்தது. எனது இந்துமத உணர்ச்சியை புண்படுத்துவதாக அது இருந்தது. நான் அவனை அன்பளிப்பு ஒன்றை வழங்கும்படிக் கேட்டேன். உடனே அவன் ஏதாவது நாணயம் இருக்குமா என்று தன் இடையைத் தடவிப் பார்த்தான். "எனக்கு உனது செப்புக் காசு தேவையில்லை. அதைக்காட்டிலும் சிறந்ததொன்று வேண்டும் என்று கேட்டேன். "கேளுங்கள், அதைத்தருகிறேன்" என்று அவன் கூறினன். அவனிடம் விசாரித்து அறிந்ததில் அவன் குடிப்பது வழக்கமென்றும், செத்த பிணங்களைத் தின்பது வழக்கமென்றும், அது அவனுடைய சமூகப் பழக்கமாக இருந்து வந்ததென்பதும் புலனாகியது.

"இனி இப்புவியில் எவருக்கும் சரி, மீண்டும் உனது வாயில் வைக்கோலை அடைத்துக்கொள்வதில்லை என்ற உறுதி மொழியை உன்னிடமிருந்து அன்பளிப்பாகக் கேட்கிறேன். அவ்வாறு செய்வது மனித கண்யத்துக்

குக் குறைவாகும். மற்றும் நீ மீண்டும் குடிக்கக் கூடாது. ஏனெனில் அது மனிதனை மிருக நிலைக்குத் தாழ்த்தி விடுகிறது. நீ இனி ஒரு பொழுதும் பிணம் தின்னக்கூடாது. ஏனெனில் அது இந்து மதத்துக்கு விரோதமானதொரு செயலாகும். மேலும் பண்பட்ட எவரும் அவ்வாறு அழுகிய மாமிசத்தை உண்ண மாட்டார்கள்.''

"ஆனால் நான் குடிக்காமலோ பிணம் தின்னாமலோ இருந்தால் என்னுடைய சமூகத்தினர் என்னைத் தள்ளி வைத்து விடுவார்களே'' என்று அந்த ஏழை மனிதன் கூறினான்.

"அவ்வாறு நேர்ந்தால் அந்த சமூக விலக்கை சகித்துக் கொள்ளத்தான் வேண்டும். அவசியமாயிருந்தால் நீ உன்னுடைய கிராமத்தை விட்டு வெளியேறவும் வேண்டும்.''

அந்த ஏழை மனிதன் தான் அவ்வாறு செய்வதாகவும் வாக்குறுதி அளித்தான்.

தீண்டத்தகாதவர்கள் என்ற பெயரே பாபுவின் காதுக்கு நாராசமாக இருந்தது. மேலும் பஞ்சமர்கள், அந்தியதர்கள் போன்ற கண்ணியக் குறைவான பெயர்களில் அவர்களை அழைத்துவருவதும் அவருக்குப் பிடிக்கவில்லை. குஜராத் மாநிலத்தின் புனிதம் வாழ்ந்த பக்திப் புலவர் நரசிம்ம மேதா, தீண்டத்தகாத மக்களைத் தனது மக்களாக ஏற்று அவர்களை ஹரிஜனங்கள், அதாவது "கடவுள் புத்திரர்கள்' என்று பெயரிட்டு அழைத்து வந்ததும் அவருக்கு நினைவுக்கு வந்தது. எனவே பாபுவும் ஹரிஜன் என்ற வார்த்தையை உபயோகித்து வரலானார்.

ஹரிஜன மக்கள் இதர இந்து மக்களைப் போலவே பாவிக்கப்பட்டு வரவேண்டும் என்று பாபு கூறுவார். கேரளத்தில் வைக்கம் என்னுமிடத்தில் ரஸ்தாக்களை அம்மக்கள் உபயோகித்து வருவதற்கு தடை விதிக்கப் பெற்றபோது, அத்தடை நீங்கி ரஸ்தாக்கள் அவர் களுடைய உபயோகத்துக்குத் திறந்துவிடப்படும்வரை யில் நீண்ட காலத்துக்கு அறநெறிப் போராட்ட மொன்றை—சத்தியாகிரகத்தை-மேற்கொள்ளவும் அவர் அனுமதித்தார். ஹரிஜன மக்கள் கோவிலுக்குள் பிர வேசிக்க அனுமதிக்க மறுக்கப்பட்டு வந்ததால் பாபுவும் கோவில்களுக்குச் செல்ல மறுத்துவந்தார். மேலும்



அவர்கள் அவ்வாறு அனுமதிக்கப்படுவதற்கு வழிகாண உபவாசமொன்றையும் மேற்கொள்ளத் தயாரானார். அவ் வாறு அவர் மேற்கொண்ட பல உபவாசங்களின் பலனாக டெரிய பெரியகோவில்கள் டல ஹரிஜனங்களுக்குத் தங்கு

தடையின்றி திறந்து விடப்பட்டன. ஹரிஜன மக்களை இந்துக்களிலிருந்து தனிப்பட்ட ஒரு மக்கள் பிரிவினராக பாவித்து பிரிட்டிஷ் சர்க்கார் அமுல் நடத்தி வந்த சமூகத் தீர்ப்பு முறையை எதிர்த்து உபவாசம் ஒன்றை அவர் மேற்கொண்டார். நாட்டில் தீண்டாமைக் கொடுமை நீடித்துவரின் இந்து மதம் தழைத்தோங்காது என்று அவர் கருதியதால் ஹரிஜன மக்களின் நலனுக்காக, தன்னுடைய உயிருக்கு ஏற்படக் கூடிய ஆபத்தையும் கருதாமல், அவர் பலமுறை உபவாசங்களை மேற்கொண்டார். ஜாதி, மதக் கோட்பாடுகள் முதலியவை மனிதர்களைப் பிரித்துவைப்பதாக இருக்கக்கூடாது என்றும், தான் அனுசரித்துவந்த மதக் கோட்பாட்டில் உயர்ந்தவர்கள், தாழ்ந்தவர்கள் என்ற பேதத்திற்கு எத்தகைய இடமுமில்லை என்றும், மக்கள் அனைவரும், எத்தகைய வேறுபாடுமின்றி கடவுளின் அன்புக்குப் பாத்திரமானவர்கள் என்றும் அவர் கூறி வந்தார்.

"தீண்டத்தகாதவர்கள் எனக்கூறப்பட்டு வரும் மக்கள் எனது எலும்பும், ஊனும் போன்றவர்கள். அவர்கள் கண்யத்துடனும், சுய கௌரவத்துடனும், வாழ்ந்து வரும் பொருட்டு நான் உயிரை விடவும்கூட சித்தமாக இருக்கிறேன். என்னைத் தாழ்த்தப்பட்ட வகுப்பினரில் ஒருவனாகவே கருதி வருகிறேன்."

ஹரிஜன மக்களிடம் பாபு எத்துணை அக்கறையும் பரிவும், காட்டி வந்தார் என்பதற்கு அவருடைய எழுத்துக்கள் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. "நான் இப்புவியில் மறுபிறவி எடுக்கவேண்டும் என்று விரும்பவில்லை. அப்படி மறு பிறவி அடைய வேண்டுமென்றால் தீண்டத்தகாத மக்களில் ஒருவனாகவே பிறக்க

வேண்டும் என்று விரும்புகிறேன். அப்பொழுதுதான். அவர்களுடைய துயரங்களையும் துன்பங்களையும், அவர்கள் அடைந்து வரும் சொல்லொணாக் கஷ்டங்களையும் நானும் பகிர்ந்து கொள்ளமுடியும். அப்பொழுதுதான என்னையும் அவர்களையும் அந்தத் துண்பநிலையிலிருந்து விடுவித்துக்கொள்ள முயற்சி மேற்கொள்ள முடியும்.

சுயராஜ்ய அமைப்பு அதாவது சுய ஆட்சி ஏற்பாடு, கீழ்நிலையிலுள்ள மக்களுக்கு விடுதலையும் சுய மதிப்பை யும் அளிப்பதாக இல்லாவிடில் அது சுயராஜ்ய அமைப்பே இல்லை என்றும் பாபு கூறிவந்தார்.



# 43. உபவாசத்தின் வலிமை

கடவுள் நம்பிக்கையிலும், இறைவழிபாட்டிலும் பாபு அசையாத நம்பிக்கை கொண்டிருந்தார். இறைவழி பாட்டை முடிக்காது எச்செயலிலும் அவர் ஈடுபட்ட தில்லை.

சோதனைக் காலங்கள் அனைத்திலும் கடவுள் தன்னைக் காப்பாற்றியிருப்பதாக பாபு கூறுவார். இச் சோதனைகள் சிலசமயங்களில் ஆன்மீக ரீதியாகவும், சில சமயங்களில் அவர் நடத்தி வந்த ஸ்தாபனங்களில் வகை யிலும் வேறு சில சமயங்களில் அரசியல் துறையிலும் ஏற்பட்டவையாகும்.

சொந்த அனுபவங்களிலும், பொதுத்துறை அனு பவங்களிலும் பாபுவுக்கு ஏற்பட்ட சோதனைகள் மிகப் பலவாகும். அவை ஒருகண நேரம் அவரைச் சஞ்சலத் தில் ஆழ்த்திவிடும்; பின்னர் இறைவழிபாட்டின்மூலம் அவற்றுக்கு அவர் தீர்வு கண்டுவந்தார். இறைவழிபாடு பாபுவின் வாழ்க்கையில் ஒன்றியமைந்த, பிரிக்க முடியாத ஒரு அம்சமாக வளங்கிவந்தது; இறைவழிபாடு அற்ற வாழ்க்கை, மந்தமும், சூன்யநிலையும் உடைத்தது என்றும் அவர் கூறிவந்தார்.

"உடலுக்கு உணவு எப்படியோ அப்படியே ஆன்மாவுக்கு இறைவழிபாடு முக்கியம் வாய்ந்ததாகும்." என்பார் அவர். உடலுக்கு உணவு இல்லாமல்கூட போகலாம்; ஆனால் ஆன்மாவிற்கு இறைவழிபாடு இன்றி யமையாதது என்று அவர் கருதிவந்தார். ஒவ்வொரு

வரும் முயன்றால் அன்றாட இறைவழிபாடு அவரது வாழ்க்கையில் புத்துணர்ச்சியை அளித்துவருவதைக் காணமுடியும்; அது வேறு எதற்கும் ஒப்பிடமுடியாத தொன்றாகும் என்றும் அவர் கூறுவார்.



கடவுள் நமது பிரார்த்தனைகளுக்கு அவருக்குத் தனித்ததான வழியிலேயே பதில் அளிக்கிறார்; ஆனால் நாம் விரும்பும் வழியில் அல்ல, இறுமாப்பு உணர்ச்சி கொண்டவர்களின் வழிபாட்டுக்கு அவர் பதிலளிப்ப தில்லை. அவரிடம் பேரம்பேச முடல்பவருக்கும் அவர் பதில் அளிப்பதில்லை. இறைவனின் அருளைப் பெற வேண்டுமென்றால் நிபந்தனை எதுவுமின்றி மனதில் களங்கமின்றி, அச்சமோ சந்தேகமோ எதுவுமின்றி, பணிவுணர்ச்சியுடன், தாழ்மை மனப்பான்மையுடன் அவரை அணுகவேண்டும்.

தம்மைக் கடவுள் ஒரு பொழுதும் கைவிட்டதில்லை என்றும் பாபு கூறியிருக்கிறார். இருள் சூழ்ந்து தாம் தவித்து நின்ற காலங்கள் அனைத்திலும் கடவுள் ஆபத்பாந்தவனாக வந்து தமக்கு அபயம் அளித்ததாகவும் அவர் கூறியிருக்கிறார். பாபு தம்முடைய சிறைவாசங்களில் பல இன்னல்களுக்கும், சோதனைக்கும் உள்ளாகியிருக்கிறார். அப்பொழுது பலதடவைகள் அவர் பெரும் சஞ்சலத்துக்குள்ளாகியிருக்கிறார். ஆனால் அத்தகைய காலங்களிலும்கூட கடவுள் தன்னைக் கைவிட்டதான உணர்ச்சி தமக்கு ஒருபொழுதும் ஏற்பட்டதில்லை என்றும் அவர் கூறியுள்ளார்.

கடமையை ஏற்று செயலாற்றுவதற்குப் பதிலாக ஒரு மாற்று ஏற்பாடாக இறைவழிபாட்டைக் கொள்வதற்கில்லை. ஆழ்ந்த ஈடுபாட்டுடன் கடமையை பேற்கொண்டு வருவதே இறைவழிபாடாக இருக்கமுடியும். இறைவழிபாட்டை மேற்கொள்ளுவதற்கு வாய்விட்டு வார்த்தைகளை உதிர்க்க வேண்டும் என்ற அவசியமில்லை என்றும், மௌனமாகவே அதை மேற்கொள்ளலாம் என்றும் பாபு கூறுவார். உள்ளார்ந்த ஈடுபாடு இல்லாது வெற்று வார்த்தைகளைக் கொட்டுவதைக் காட்டிலும் வார்த்தைகள் ஏதுமின்றி உளப்பூர்வமாக இறைவழிபாட்டை மேற்கொள்ளுவது சாலச் சிறந்ததென்றும் அவர் அடிக்கடிக்கூறுவார்.

கோழைத்தனத்தையும் இதர அசக்த நிலைமையையும் சமாளித்து வெல்வதற்கு இறைவழிபாடு அபார சக்திவாய்ந்ததொரு சாதனமாகும். கடவுளின் மீது ஆழ்ந்த நம்பிக்கை கொள்ளாமல் இறைவழிபாட்டில் ஈடுபடுவது

சாத்தியமில்லை. இறைவழிபாடு இன்றி ஆத்ம சாந்தி பெறுவதும் இயலாததொரு காரியமாகும்.

இறைவழிபாட்டின் சக்திக்கு எடுத்துக்காட்டாக பாபுவின் வாழ்க்கையில் எத்தனையோ சம்பவங்களைக் கூறலாம்.

டில்லியில் 1924-ஆம் ஆண்டில் அவர் 21 நாட்கள் உபவாசம் ஒன்றை மேற்கொண்டார். இந்துக்கள், முஸ்லிம்கள் மற்றும் வேறு இதர சமுதாயங்கள் ஆகியோருக்கிடையே ஒருமைப்பாட்டு உணர்ச்சிக்கு வகை காணுவதற்காக அவர் அவ்வுபவாசத்தை மேற்கொண்டார். உபவாசத்தின்போது பாபுவின் உடல்நிலை திடீர் என்று மோசமாகியது; அது கண்டு டாக்டர்கள் அனைவரும் பீதியடைந்தனர். அவர் உபவாசம் துவங்குவதற்கு முன்னேயே அவரது உடல்நிலை சரியாக இல்லை என்பது பற்றியும் அவர்கள் ஏற்கனவேயே எச்சரித்திருந்தனர். மேலும் நீண்ட காலத்திற்கு உபவாசம் மேற்கொண்டு அதனால் ஏற்படக்கூடிய கடும் சிரமத்தை அவர் உடல் தாங்காது என்றும் அவர்கள் எச்சரித்திருந்தனர்.

ஆனால் பாபு அவர்களுக்குச்சிறிதும் செவி சாய்க்கவில்லை. அவர் கூறினார்: "உபவாசத்தை நான் கட்டாயம் மேற்கொள்ளத்தான் மேற்கொள்வேன்; ஆனால் நான் உயிரிழக்கமாட்டேன்; நான் உயிருடனே வாழ விரும்புகிறேன். எனவே என் உயிருக்கு ஆபத்து நேரிடக்கூடும் என்ற அறிகுறிகள் தோன்றினால் நீங்கள் அப்பொழுது என்னிடம் கூறுங்கள். அச்சமயம் என் செய்வது என்று நான் யோசிக்கிறேன். அவசியமாக

இருந்தால் உபவாசத்தை நிறுத்தினாலும் நிறுத்தி விடுவேன்.''

பாபு ஆரம்பத்தில் கூறிய உறுதிமொழி பற்றி டாக்டர்கள் அவருக்கு நினைவுபடுத்தினர். மேலும் அவருடைய உயிர் ஆபத்து நிலையில் உள்ளதென் றும் அவர்கள் அறிவித்தனர். உபவாசத்தை உடனே நிறுத்தாவிட்டால் அவர் உயிரை இழக்க நேடுரிம் என்றும் தெரிவித்தனர்.

பாபு ஒரு கணம் சிந்தனையில் ஆழ்ந்தார். "மேலும் இருபத்திநான்குமணி நேரத்திற்கு உபவாசத்தை நீடித் தால் ஆபத்தாகஇருக்குமா? அதற்கு அப்புறம் உங்கள் உத்தரவுகளுக்கு நான் பணிகிறேன்." என்று அவர் கூறினார்.

டாக்டர்கள் ஒன்றுகூடி ஆலோசித்தனர். பாபு 24 மணி நேரத்துக்கு மட்டிலுமே உபவாசத்தை நீடித் தால் ஆபத்து மிகவும் அதிகமாக இருக்கும் என்று நிச் சயமாக கூறுவதற்கில்லை என்றும் அவர்கள் அறிவித் தனர். ஆனால் அதற்கு பேலும் அவருடைய உயிருக்கு தாங்கள் பொறுப்பு ஏற்க முடியாது என்றும் கூறி விட்டனர்.

பாபு அவர்களுடைய எச்சரிக்கையை அறிந் துணர்ந்தார். மேலும் ஒரு நாளுக்கு அவர் உபவா சத்தை நீடித்து மேற்கொண்டார். அந்நாள் முழுவதும் யாதும் பேசாது அவர் மௌன விரதம் அனுஷ்டித்து வந்தார். தம் கண்ணை மூடிக்கொண்டு சதா இறைவழி பாட்டிலேயே ஈடுபட்டு வந்தார்.

டாக்டர்கள் அவருடைய படுக்கையின் அருகில் அமர்ந்து கவலையுடன் அவர் உடல் நிலையைக் கவனித்து வந்தனர். இருபத்திநான்கு மணிநேரத்துக்குப் பின்னர் அவர் நிலையை அவர்கள் மீண்டும் ஒருமுறை சோதித்தனர். அவர் உடல் நிலை பின்னும் மோசமடைவதற்கு பதிலாக, முன்னைகாட்டிலும் நல்ல நிலையிலாக இருந்தது. டாக்டர்களுக்கு ஒன்றும் புரியவில்லை "பாபு நீங்கள் எங்களை ஏமாற்றிவிட்டீர்கள்" என்று கூறினர். பாபு புன்முறுவலித்தார். அவருக்கு தெரியும்; அதற்குக் காரணமாக இருந்தது இறைவழிபாட்டின் சக்தியே என்பது.



# 44. தன்னைத் தாக்கியவர்களிடமும் கருணை காட்டியது

நமது பொதுத்துறை வாழ்க்கையில் பல சந்தர்ப்பங்களில், தன்னை எதிரியாக கருதி வந்தவர்களின் தாக்குதலுக்கு பாபு உள்ளாகியிருக்கிறார். பல சந்தர்ப்பங்களில் உயிருக்குக்கூட ஆபத்து நேரிடும் போல இருந்தும், அவர் தெய்வாதீனமாகத் தப்பியிருக்கிறார். அந்நிலையிலும்கூட தம்மைத் தாக்கியவர்களுக்கு தண்டனை வாங்கிக் கொடுக்கவேண்டுமென்று அவர் ஒரு பொழுதும் கருதியதில்லை. ஏனெனில் அவர்கள் அறியாமை காரணமாக அவ்வாறு நடந்துகொண்டார்கள் என்றே அவர் கருதிவந்தார். அவர்களிடம் கோபம் கொள்ளாமல் சகிப்புத் தன்மையுடன் நடந்து கொள்ள வேண்டுமென்றும் அவர் கருதி வந்தார். அவ்வாறு நடந்துகொண்டால், அத்தகைய உணர்ச்சி, கடும் நெஞ்சம் படைத்தவரையும்கூட, நெக்குருகச் செய்து அவருடைய அறியாமையை அகற்றி விடும்; ஏனெனில் கோப தாபமோ, பகை உணர்ச்சியோ ஏதும் இன்றி துன்பத்தைச் சகித்துக்கொள்வது, ஒரு மாபெரும் சக்தியாகும், அவ்வாறு நடந்துகொண்டால், தாக்க முற்படுபவர்கள் தம்முடைய தவறை முற்றிலும் உணர்ந்து, பகையுணர்ச்சி அவர்களிடமிருந்து அறவே அகன்றுவிடும் என்றும் அவர் கருதிவந்தார்.

## அ) நடைபாதை சம்பவம்

அத்தகைய சம்பவங்களில் முதலாவது, தென்னுப்பிரிக்காவில் உள்ள பிரிட்டோரியா நகரத்தில் நிகழ்ந்ததாகும். அந்நகரத்தின் குறிப்பிட்ட தெரு ஒன்றின் வழியாக திறந்தவெளி ஒன்றுக்கு நடந்து செல்வது பாபுவின் வழக்கமாக இருந்து வந்தன. அந்தத் தெருவில் போலீசார் ரோந்து செல்வதும் வழக்கமாக இருந்து வந்தது. பாபு அந்த ரஸ்தாவின் ஓரத்தில் அமைந்திருந்த



நடைபாதை வழியாகச் செல்வார். ரோந்து நடத்தி வந்த காவலர்கள் அனைவரும் பாபுவை அடிக்கடிக்கண்டு வந்ததால் அவரை நன்கு அறிந்திருந்தார்கள். ஆனால் ஒருநாள் நடைபாதை வழியாக அவர் சென்றுகொண்டிக் கையில் தான் முன்பின் அறியாத ஒரு அதிகாரி அங்கு காவல் பணி புரிந்து வந்ததைக் கண்டார். அந்த அதிகாரி எத்தகைய முகாந்தரமுமின்றி பாபுவைக் காலால் உதைத்துத் தெருவில் தள்ளிவிட்டார். பாபுவோ ஒன்றும் புரியாமல் திகில் அடைந்து நின்றார். தன்னிடம் முரட்டுத்தனமாகவும் மூர்க்கத்தனமாகவும் நடந்து கொண்டதற்கான காரணம் என்னவென்று அவ்வதிகாரியிடம் கேட்பதற்கு இருந்தார். அச்சமயத்தில் பாபுவின் கிறிஸ்துவ நண்பன் ஒருவரான குரோட்ஸ் என்பவர் அவ்வழியே சென்றுகொண்டிருந்தார். அவர் உடனே அங்கு சற்றுநேரம் நின்று, அச்சம்பவம் அனைத்தையும் கண்ணுற்றார். எனவே அவர் பாபுவைக் கூப்பிட்டு "காந்தி, நான் நடந்தது அனைத்தையும் கண்கூடாகப் பார்த்தேன். அது எனக்கு மிகவும் விசனத்தைத் தருவதாக உள்ளது. அந்த மனிதர் மூர்க்கத்துடன் நடந்து கொண்டு உங்களை இவ்வாறு தாக்கியது பற்றி நீதி மன்றத்தில் சாட்சியம் கூற நான் தயாராக இருக்கிறேன்" என்று கூறினார்.

பாபு அவருக்குப் பதிலளிக்கையில், "நீங்கள் இதற்காக வருந்த வேண்டாம். அந்த அப்பாவி மனிதருக்கு என்ன தெரியும்? கருப்பு மனிதர்கள் எல்லோரும் ஒன்றுபோலத்தான் அவருக்குத் தோன்றுகின்றனர். எனவே அவர் ஆப்பிரிக்கர்களை வழக்கமாக நடத்தி வருவது போன்றே என்னையும் பாவித்து நடத்தியிருக்கிறார். மேலும் என்னுடைய சொந்த முறையீடுகளுக்காக நியாயம் கோரி நீதிமன்றம் செல்வதில்லை என்று நான்

ஏற்கெனவே முடிவு செய்திருக்கிறேன். எனவே இந்த போலீஸ் அதிகாரிக்கு எதிராக நான் வழக்குத் தொடர விரும்பவில்லை'' என்று கூறினார்.

பாபுவின் பதிலைக்கேட்டு அவரைக் குரோட்ஸ் வெகுவாகப் பாராட்டினார். "நீங்கள் இவ்வாறு கூறுவது மெச்சத்தக்கதாகும். ஆனால் மீண்டும் ஒருமுறை யோசித்துப் பாருங்கள். அந்த போலீஸ்காரருக்கு ஒரு படிப்பினையை அளிக்கவேண்டும்.''

பின்னர் அவர் அந்த போயர் போலீஸ்காரரைப் பார்த்து கடிந்து கொண்டார். அப்போலீஸ்காரர் தாம் செய்த தவறை உணர்ந்து அதற்கு வருந்தினார். அதுபற்றி வருத்தம் தெரிவித்து பாபுவிடம் மன்னிப்பும் கோரினார். அவர் அவ்வாறு கேட்கவேண்டிய அவசியமேயில்லை. ஏனெனில் பாபு அவரை ஏற்கெனவேயே மன்னித்துவிட்டிருந்தார்

ஆ) டர்பன் நகரில் தாக்கப்பட்ட சம்பவம்

இரண்டாவது சம்பவம் — 1897 - ஜனவரி மாதம் நிகழ்ந்தது -- மிகவும் கடுமையானதொன்றாகும். அதற்கு முந்திய ஆண்டில்தான் பாபு குறுகிய கால விஜயத்தின் பேரில் இந்தியா சென்றுவிட்டு தென்னாப்பிரிக்கா திரும்பியிருந்தார்.

இரண்டு காரியங்களை உத்தேசித்து அவர் இந்தியா சென்றிருந்தார். முதலாவது தாம் அங்கு விட்டுவந்திருந்த தமது குடும்பத்தினரை தம்முடன் தென்னாப்பிரிக்கா அழைத்துச் செல்லும் உத்தேசத்துடன் வந்திருந்தார். இரண்டாவதாக தெனாப்பிரிக்காவில்

இந்திய மக்கள் உள்ளாகிவரும் இன்னல்கள் பற்றி தாயகத்தில் வாழ்ந்து வரும் மக்களுக்கு எடுத்துரைப் பதற்காக வந்திருந்தார்.

பாபு ராஜ்கோட் வந்தடைந்தவுடன் தென்னுப் பிரிக்காவில் இந்தியர்கள் அடைந்துவரும் கஷ்ட நஷ்டங் கள் பற்றி விவரித்து ஒரு சிறிய புத்தகமொன்றை எழுதி வெளியிட்டார். அப்புத்தகத்தில் அடங்கியிருந்த விஷ யங்கள் பற்றிய சுருக்கம் ஒன்றை ராய்ட்டர் செய்தி ஸ்தாபனம் லண்டன் பத்திரிகைகளுக்குத் தந்தி மூலம் அனுப்பி வைத்திருந்தது. பின்னும் குறுகியதான சுருக்க மொன்று தென்னுப்பிரிக்கப் பத்திரிகைகளுக்கு அனுப்பி வைக்கப்பட்டிருந்தது. இந்தியர்களுக்கு இழைக்கப் பட்ட அநியாயங்களுக்கு தென்னுப்பிரிக்க ஐரோப்பியர் களை பாபு குற்றம் சாட்டிய வகையிலாக கருத்து கொள் ளும்படி அச்செய்தி அமைந்திருந்தது. அதைப்படித் தறிந்த அம்மக்கள் கொதிப்படைந்தனர்.

பாபு தென்னுப்பிரிக்காவுக்குத் திரும்பிவரும் விஷ யம்பற்றி அவர்களுக்குத் தெரியவந்தது. அவர் வந்த கப்பலிலும், அத்துடன் வேறொரு கப்பலிலும் மிகவும் அதிக அளவிலாக இந்தியர்கள் இருந்தனர். அக்கப்பல் கள் வருவது ஒரு படையெடுப்பு போன்று வெள்ளையர் களுக்குத் தோன்றியது. எனவே அதற்கு எதிராகப் பொது மக்களின் கருத்தைத் திரட்டுவதற்காக கமிட்டி ஒன்றையும் அவர்கள் ஆரம்பித்திருந்தனர். அவ்விரு கப்பல்களும் டர்பன் துறைமுகத்தை வந்தடைந்தவுடன் பிரயாணிகள் கரையிறங்க அனுமதிக்கப்படவில்லை. அதற்கு ஒரு சாக்குப் போக்காக, அக்கப்பல்களில் வியாதி ஏதேனும் பரவி இருக்கலாம் என்றும், எனவே அம்மக்

களை சிறிது காலம் ஒதுக்கு நிலையிலாக அப்புறப்படுத்தி வைக்கவேண்டுமென்றும் அறிவிக்கப்பட்டிருந்தது.

கப்பலிலிருந்த ஆண்களும், பெண்களும், குழந்தைகளும் பலநாள் கஷ்டப்படவேண்டியிருந்தது. பல நாட்களுக்குப் பிறகு அவர்கள் கரையிறங்க அனுமதிக்கப்பட்டனர். பாபுவின் சிநேகிதரான மி. லாவ்டன் என்ற ஐரோப்பிய வழக்கறிஞர் ஒருவர் கப்பல் தளத்தில் ஏறி காந்தியைக் கரையிறங்கும்படி யோசனை கூறினார். அவருக்கு ஆபத்து ஏதும் நேரிடாது என்றும் அவர் கருதினார். பாபு அதற்கிணங்க டர்பன் துறைமுகத்தில் ஒரு குறிப்பிட்ட ஸ்தலத்தில் கரை இறங்கினார். அவர் கறையிறங்கும் விஷயம்பற்றி வெள்ளையர்கள் அடங்கிய மக்கள் கும்பல் ஒன்றுக்கு ஏற்கனவே தகவல் எட்டியிருந்தது. வெகு சீக்கிரத்தில் கும்பல் பெருகி ஆவேசம் பெற்று ஸ்தலத்தை நெருக்கிக் கொண்டிருந்தது. கும்பலில் ஒருவர் பாபுவை இனம் கண்டு கொண்டார். அவர் "அதோ காந்தி! அதோ காந்தி!" என்று கூச்சல் போட்டார்.

உடனே மக்கள்கும்பல் பாபுவையும், மி. லாவ்டனையும் தொடர்ந்து சென்றது. ஒவ்வொரு கணமும் கும்பல் பெருகிக்கொண்டே வந்ததுடன் அதன் ஆவேசமும் அதிகரிக்கலாயிற்று. வெகு சீக்கிரத்தில் அது [ உக்கிரம் அடைந்தது. மி.லாவ்டன் பிடித்திழுக்கப்பட்டுப்

சமித்து அவர் நிதான நிலைக்கு வந்தார். மேலே நடந்து செல்ல முயல ஆரம்பித்தார். தாம் உயிருடன் வீடு திரும்பு வது சந்தேகமே என்ற எண்ணத்தையும் அடைந்தார்.

மக்கள் மீண்டும் அவரைத் தாக்கித் தாறுமாருகவும், கண் மூடித்தனமாகவும் அடிக்கலாயினர். போலீஸ் கமிஷ னரின் மனைவியான மிஸ்ஸஸ் அலெக்சாண்டர் என்ற ஐரோப்பிய மாது தனது குடையுடன் அவருக்கு உதவி யளிக்க முன் ஓடி வந்தார். அவர் அவ்வாறு வந்திருக்கா விடில் பாபுவை மக்கள் அடித்துப் புரட்டிப் போட் டிருப்பார்கள். அப்போது தம் குடையின் உதவியுடன் மக்களின் அடி காந்தியின் மீது படாதவாறு சமாளித்து உதவினர். கூடிய சீக்கிரம் பாபுவை மீட்க ஆட்களும் வந்தனர். இறுதியில் அவர் ஒருவாறு தமது வீட்டை அடைந்தார்.



பின்னர் நேட்டால் பிரதேசத்தின் அட்டர்ணி ஜெனரல் மிஸ்டர் ஹாரி எஸ்கோம் என்பவர் காந்தியைக் கண்டு செல்வதற்காக வந்தார். காந்தி தாக்குறப்பட்ட சம்பவம் பற்றி விசாரித்தறியும்படி அவருக்கு உத்திர விடப்பட்டிருந்தது. "குற்றவாளிகளைக்கண்டு பிடித்து அவர்களைத் தண்டிக்க விரும்புகிறோம். உங்களைத்தாக்கியவர்களில் எவரையேனும் நீங்கள் அடையாளம் கூற முடியுமா?" என்று அவர் கேட்டார்.

"அவர்களில் இரண்டொருவரை என்னால் ஒரு வேளை அடையாளம் காட்ட முடியலாம். ஆனால் என்னைத் தாக்கியவர்கள் எவர் மீதும் வழக்குத் தொடர்வதில்லை என்று நான் ஏற்கெனவே தீர்மானித்துவிட்டேன் என்பதை உங்களுக்கு முதலில் கூறிவிட விரும்புகிறேன்" என்று பாபு கூறினார்.

"ஏன்?"

"அவர்கள் மீது தவறு எதையும் என்னால் காண முடியவில்லை. அவர்களுக்குக் கிடைத்த தகவல் அனைத்தும் அவர்களது தலைவர்கள் கூறியதேயாகும். அத்தகவல் உண்மையா, தவறா என்று தீர்மானிக்கக்கூடிய நிலையில் அவர்கள் இல்லை. அவர்கள் என்னைப்பற்றிக் கேள்விப்பட்ட விஷயங்கள் உண்மையாக இருந்தால் அது அவர்களைக் கொதித்தெழச் செய்து கோபாவேசத்தில் தவறான காரியத்தில் ஈடுபடுத்தியது இயற்கையேயாகும். எனவே நான் அவர்களை இச்சம்பவத்துக்குக் காரணம் காட்டிக் குறைகூறமாட்டேன்".

"அவர்கள் உங்களை மரண அடி அடித்துப் புரட்டி விடவில்லையா? சமயத்தில் உதவி வந்து நீங்கள் மீட்

கப்படாதிருந்தால் விஷயம் விபரீதமாக அல்லவா முடிந்திருக்கும்?''

“கொதிப்படைந்த மக்கள் கும்பல் தமக்கு தீமை இழைத்தவர்களாகக் கருதுபவர்களைத் தங்களுக்கு நியாயம் என்று தோன்றிய வழிமுறையிலே கையாளுவது இயற்கையேயாகும். எனவே இச்சம்பவத்துக்கு எவரேனும் ஜவாப்தாரி என்று கூறவேண்டுமானால் வெள்ளையர் கமிட்டியையும், உங்களையும், நேட்டால் சர்க்காரையும்தான் அதற்குப் பொறுப்பாளிகளாகக் கருத வேண்டும்.''

“நீங்கள் எவ்வாறு அப்படிக்கூறலாம்?''

“இந்தியாவில் எனது சேவைகள் பற்றிய விவரங்களைத் தவருகத் திரித்த வகையில் ராய்ட்டர் தந்தி ஸ்தாபனம் தந்திச் செய்தியை அனுப்பியிருக்கலாம். நான் நேட்டால் வரும் செய்தி பற்றி அறிந்த உடனேயே நீங்களும், கமிட்டியினரும் என்னிடம் முதலில் வந்து பேசியிருக்கவேண்டியதே முறையானதாகும். இந்தியாவில் என்னுடைய சேவைகள் பற்றி உங்களுக்கு இருந்து வரும் சந்தேகங்களைத் தெரிவித்து என்னைக் கேட்டிருந்தால் என் தரப்பில் நான் கூறுவதை நீங்கள் அறிந்து கொண்டிருப்பீர்கள். பின்னர் சந்தர்ப்ப நிலைக்கேற்ப எது உங்களுக்கு முறையாகப் படுகிறதோ அதை நீங்கள் செய்திருக்கலாம்.''

மி. எஸ்கோம், காந்தி கூறிய வார்த்தைகளின் கருத்தை உணர்ந்து கொண்டார். “ஆனால் இப்பொழுது விஷயம் மீறி அதிக்கிரமம் நடந்து இருக்கிறதே......''

பாபு உடனே குறுக்கிட்டு, “இல்லை, தாக்கப்பட்டதற்கு உங்கள் மீதோ கமிட்டி மீதோ வழக்குத் தொடர

டேன்.''

"உங்களைத் தாக்கியவர்களைத் தண்டிப்பதில் சர்க்காருக்கு உதவ உங்களுக்கு உத்தேசமில்லையா?''

"நான் ஏற்கெனவே அது விஷயம்பற்றி உங்களிடம் கூறிவிட்டேன். அவர்கள் அறியாமையின் காரணமாக அவ்வாறு வன்செயலில் ஈடுபட்டனர். இந்தியர்களின் நிலைபற்றி உங்களுக்கும் இதர வெள்ளையர்களுக்கும் எடுத்துணர்த்துவதற்காக அரசியல் துறை வாயிலாகத்தான் நான் உங்களுடன் போராடவேண்டும். இந்தியர்கள் பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தின் மக்கள் தொகையில் பெரும் பகுதியினராக உள்ளனர். அவர்கள் தங்கள் சுய மரியாதையைக் காத்துக்கொள்ள விரும்புகின்றனர். அதே சமயத்தில் வெள்ளையர்களுக்கு எவ்வகையிலும் கஷ்டம் விளைவிக்காமல் தங்களது உரிமைகளை காத்துக்கொள்ள விரும்புகின்றனர்.''

பாபுவின் நியாய உணர்ச்சியையும் பெருந்தன்மையையும் கண்ணுற்ற மி. எஸ்கோம் மனதில் ஒரு மதிப்புணர்ச்சி ஆழப்பதிந்தது. இறுதியில் அவர் "அப்படியாயின் நீங்கள் குற்றவாளிகள் மீது வழக்குத் தொடரத் தயாராக இல்லை என்று கூறி தெரிவிக்கும் வகையிலாக ஒரு குறிப்பொன்றைக் கொடுக்கும்படி எங்கள் சர்க்கார் கோருவார்கள்; அவ்வாறு குறிப்பொன்றை நீங்கள் தருகிறீர்களா?''

பாபு அதற்கு உடன்பட்டு ஒரு காகிதத்தில் அவ்வாறு எழுதி அவரிடம் கொடுத்தார். அக்குறிப்பில் வருமாறு எழுதப்பட்டிருந்தது.

"நான் கரையிறங்கி மிஸ்டர் லாவ்டனுடன் செ
லுவதென்று தீர்மானித்தபொழுதே, மக்களால் த
கப்பட்டு படுகாயம் அடைந்தால் அதை பொருட்படுத்
வதில்லை என்று என் மனதுக்குள்ளேயே முடிவு செ
ருந்தேன். எனவே என்னைத் தாக்கியவர்கள் மீது வழ
குத்தொடர்வதென்ற விஷயமே இங்கு எழுவதற்கில்
என்னைப் பொருத்தமட்டில் இதை ஒரு மதப்பூர்வமா
ஆன்மீகப்பூர்வமான பிரச்சனையாகவே கருதுகிறே
இவ்வாறு தன்உணர்ச்சிக் கட்டுப்பாட்டுடன் செய
படுவதன் மூலம் இந்நாட்டுக்கும், எனக்கும் சேவ
செய்வதாகவே நான் கருதுகிறேன். எனவே இதற்கா
பொறுப்பு அனைத்தையும் என் மீதே சுமத்திக்கொள்ள
தீர்மானித்துள்ளேன்."

இச்சம்பவத்தின் மூலம் பாபுவின் உள்ளத்
வன்ம உணர்ச்சியோ, வஞ்சம் தீர்த்துக்கொள்ளவே
டும் என்ற உணர்ச்சியோ கிஞ்சித்தும் எழவில்லை என்ப
நன்கு புலனாகும்.



# 45. மீர் ஆலம் காந்தியைத் தாக்கியது

தென்னாப்பிரிக்காவில் 1908-ம் ஆண்டில் "கருப்பர் பெயர் பதிவு"ச் சட்டம் அமுலுக்கு வந்தது, டிரான்ஸ்வால்ஸ் இந்தியர்களைப் பெரிதும் சஞ்சலத்துக் குள்ளாகியது. அந்தச் சட்டத்தின்கீழ் ஒவ்வொரு இந்தியரும் அவரவர்களுடைய பத்து விரல்களின் ரேகைகளைப் பதிவு செய்யும்படி விதிக்கப்பட்டிருந்தது. இந்த ஏற்பாடு மக்களைக் கிரிமினல் குற்றவாளிகளைப் பதிவு செய்வது போன்று பெயர் பதிவு செய்வதால், அச்சட்டத்தின் கீழ் தங்களைப் பதிவு செய்துகொள்ளவேண்டாம் என்று மக்களுக்கு பாபு ஆலோசனை கூறியிருந்தார். எனவே அவர்கள் அச்சட்டத்துக்கு எதிராக சாத்வீக முறையில் எதிர்ப்பு வெரிவிப்பதற்குத் தங்களைத் தயார் படுத்திக் கொண்டனர்.

தென்னாப்பிரிக்க சர்க்கார், அது விஷயமாக ஒரு சமரச உடன்பாட்டுக்கு வர ஆவலாக இருந்தனர். இந்தியர்கள் தாமதமாகவே பெயர் பதிவு செய்துகொள்ள முன்வரின் "கருப்பர் சட்டம்" வாபஸ் பெறப்படும் என்றும் அவர்கள் அறிவித்தனர். சர்க்காரின் உறுதிமொழியில் நம்பிக்கைவைத்து இந்தியர்களைத் தன்னிச்சையாக பெயர் பதிவு செய்துகொள்ளும்படி பாபு யோசனை கூறினர்.

பிரிட்டோரியாவில் வசித்து வந்த பட்டாணியர்கள் சிலர் பாபுவின் ஆலோசனையைத் தவருகப் புரிந்து

கொண்டனர். மீர் ஆலம் என்பவர் அவர்களுடைய தலைவராக இருந்தார்.

பாபு, ஸ்மட்ஸ் சர்க்காரிடமிருந்து லஞ்சம் வாங்கிக்கொண்டு இந்திய சமூகத்தினருக்கு துரோகம் செய்துவிட்டதாக அப்பட்டாணியர்கள் கருதினர். எனவே அவர்கள் அது விஷயமாக பாபுவிடம் குறுக்குக் கேள்விகள் போட்டனர். அவர்களில் ஒருவர் சொன்னார்; "நாங்கள் எங்கள் கைரேகைகளைப் பதிவு செய்து கொள்ளமாட்டோம். பிறரையும் அவ்வாறு செய்ய விடமாட்டோம். பதிவு செய்துகொள்வதற்கு முதலில் வருகிற நபரை நான் கொன்றுவிடுவேன் என்று அல்லா சாட்சியாகக் கூற விரும்புகிறேன்."

தாம் சமுதாயத்தை மோசம் செய்து காட்டிக் கொடுத்ததாகக் கூறப்பட்ட குற்றச்சாட்டை பாபு மறுத்தார். கைரேகை பதிவு சுயவிருப்ப அடிப்படையிலேயே கொடுக்கப்படவேண்டும் என்றும் அவர் கூறினார்.

"எனது நண்பர் கொல்லப்போவதாக பயமுறுத்தியது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை என்பதைத்தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்; மேலும் கடவுள் பேரில் ஆணையிட்டு பிறரொருவனைக் கொல்லப்போவதாகக் கூறுவது தகாததொரு காரியம் என்றும் நான் கருதுகிறேன். எனது நண்பர் திடீரென்று உணர்ச்சி வசப்பட்டு அவ்வாறு கூறியுள்ளார் என்றும் நினைக்கிறேன். எனவே கைரேகை பதிவு செய்துகொள்ள முதலில் முன்வரவேண்டியது எனது தலையாய கடமை என்றும் கருதுகிறேன்."

பாபு மேலும் கூறினர். "மரணம் வாழ்க்கையின் இறுதி கட்டமேயாகும். நோய்நொடிகளின் விளைவிஞலேயோ வேறு இதர வழிகளிலோ மரணம் அடைவதைக்காட்டிலும், சகோதரன் ஒருவரின் கையினுல் மரணம் பெறுவதைத் துக்கப்படவேண்டிய ஒரு விஷயமாக நான் கருதவில்லை. அவ்வாறு நான் கொல்லப்பட்டாலும் என்னைத் தாக்கிடவருக்கு எதிராக என் மனதில் ஆத்திரமோ விரோதமோ கொள்ளமாட்டேன்; அத்தகைய நற்சிந்தனை எனது நீடித்த நலனுக்கு உகந்ததாக இருக்கும் என்றும் நான் கருதுகிறேன். என்னைத் தாக்கியவரும்கூட நான் நிரபராதி என்பதைப் பிற்பட்டு உணர்ந்து வருந்துவார்."

காந்தியின் இவ்வறிவுரைகளுக்குப் பின்னர், கூட்டத்தினர் கலைந்து சென்றனர். ஆனுல் அங்குவந்திருந்த பட்டாணியர்களோ கடுகடுப்பை அடைந்தனர். பாபுவின் விளக்கம் அவர்களுக்கு நம்பிக்கை அளிக்கவில்லை.

பின்னர் பதிவு தினம் வந்தது. அன்றயதினம் பாபு தமது காரியாலயத்துக்குச் சென்றுர். அதுவே சத்தியாக்கிரக ஆசிரமத்தின் காரியாலயமாகவும் இயங்கிவந்தது. அங்கு மீர் ஆலம் நின்றுகொண்டிருப்பதை அவர் கண்டார். அவருடைய பட்டாணிய தோழர்களும் அங்கிருந்தனர்.

மீர் ஆலம், பாபுவின் பழைய கட்சிக்காரர் ஒருவராவர்; சகல விஷயங்களிலும் பாபுவின் ஆலோசனையைக் கோருவது அவர் வழக்கம்.

பாபு, மீர் ஆலமுக்கு முகமன் கூறி வரவேற்ருர். ஆனல் அவர் பாபுவுக்கு, திருப்பி வணக்கம் தெரிவிக்க

வில்லை. கடுகடுத்த முகத்துடனும் கண்ணில் பெருங் கோபத்துடனும் அவர் காணப்பட்டார். அவர் ஏதோ செய்யப்போவதாக ஒரு உணர்ச்சி பாபுவுக்குத் தோன்றியது.

பாபு தனது காரியாலயத்தில் நுழைந்து சில நண்பர்களை அழைத்துக்கொண்டு பதிவுக் காரியாலயம் நோக்கிச் சென்றார். மீர் ஆலமும், அவரது நண்பர்களும் சிறிது தூரத்துக்கு அவர்களைப் பின்தொடர்ந்து வந்தனர். காரியாலயம் வந்து சேர்ந்தவுடன் மீர் ஆலம் பாபுவை நோக்கி, "நீங்கள் எங்கே போகிறீர்கள்" என்று கேட்டார்."

பாபு கூறினார்; "நான் எனது பத்து விரல்களின ரேகைகளையும் பதிவு செய்யப்போகிறேன். உனக்காக வேண்டுமென்றால் உன்னுடைய இரண்டு கட்டைவிரல்களின் ரேகைகளை மாத்திரம் பதிந்துகொள்வதற்கு ஏற்பாடு செய்கிறேன். பாபு இவ்வார்த்தைகளை கூறிமுடிப்பதற்குள், பின்புறத்திலிருந்து அவர் தலைமீது குண்டாந்தடியினால் மொத்தப்பட்டது. "ஹே ராம் என்று கூறிக்கொண்டே பாபு தரையில் விழுந்து நினைவிழந்தார்."



அங்கு அவர் ரஸ்தாவில் பேச்சு மூச்சின்றி விழுந் திருந்தார். அவர்களுடைய தோழர்களான யூசுப்ஷிபான், தம்பி நாயுடு ஆகிய இருவரும் சமயத்தில் வந்துகாப் பாற்றுதிருந்தால் நிலைமை விபரீதமாக முடிந்திருக்கும்.

ரஸ்தாவில் போய்க்கொண்டிருந்த ஐரோப்பியர் கள் சிலர், மீர் ஆலத்தையும் அவரது நண்பர்களையும் பிடித்து போலீசாரிடம் ஒப்படைத்தனர்.

பாபு, ரெவரண்ட்டோக் என்பவர் இல்லத்திற்கு அப்புறப்படுத்தப்பட்டு அவரால் பேணிப் பராமரிக்கப் பட்டு பழைய உடல்நிலையை அடைந்தார். அச்சம்பவம் பற்றி ரெவரண்ட் டோக் வருமாறு விவரித்துள்ளார்.

பாபு மீண்டும் நினைவைப் பெற்றபொழுது அவர் அப்புறப்படுத்தப்பட்டிருந்து, அண்மையிலுள்ள காரி யாலயம் ஒன்றில் கடத்தப்பட்டிருந்தார். ரெவண்ட் டோக் சிறிது நேரம் கழித்து அங்கு வந்து அவரைக் கண் டார். பாபு அனுதரவான நிலையில் இருப்பதையும் ரத்தம் வெளி வந்து கொண்டிருப்பதையும் அவர் கண்டார். டாக்டர் ஒருவர் பாபுவின் காயங்களைச் சுத்தம் செய்து கொண்டிருந்தார். போலீஸ் அதிகாரிகள் அருகில் இருந்து பார்த்துக்கொண்டிருந்தனர்.

மீர் ஆலம் எங்கே என்று பாபு வினவினுர். மற்ற வர்களோடு அவரும் கைது செய்யப்பட்டிருப்பதாக அவரிடம் தெரிவிக்கப்பட்டது. அது கேட்ட பாபு அவர்கள் அனைவரையும் உடனே விடுவிக்கவேண்டும் என்று கூறினுர். அந்த பலஹீனமான நிலையிலும் கூட அவர் எழுந்து தன்னைப் படுகாயப்படுத்தியவர்கள் மீது எத்தகைய நடவடிக்கையும் எடுக்கக்கூடாது என்று வலி யுறுத்தினுர். "அவர்கள், தாங்கள் நியாயமான காரியம்

ஒன்றைச் செய்வதாக நினைத்தனர். எனவே அவர்கள் மீது வழக்குத்தொடர எனக்கு விருப்பம் இல்லை'' என்றும் அவர் கூறினார்.

பிற்பட்டு அரசாங்க அதிகாரிகள் மீர் ஆலம் அவரது நண்பர்கள் ஆகியோர் மீது குற்றம் சாட்டி வழக்குத்தொடர்ந்து, அவர்களுக்குத் தண்டனை அளித்த போதிலும் பாபு அவர்களுக்கு எதிராக சாட்சியம்கூற மறுத்துவிட்டார்.

தன்னை ஹிம்சிப்பவர்களைத் தண்டிக்கவோ அவர்களை எதிர்த்து பதிலடிகொடுக்கவோ பாபு எப்பொழுதும் விரும்பியதில்லை என்பதற்கு இச்சம்பவம் ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. மேலும் தன்னைத் தாக்கியவர்களிடம் வெறுப்புணர்ச்சியோ, விரோத உணர்ச்சியோ அவர் ஒருபொழுதும் கொண்டதில்லை.



# 46. பிரார்த்தனைக் கூட்டத்தில் வெடித்த குண்டு

பிர்லா மாளிகையில் உள்ள பிரார்த்தனை ஸ்தலத்தில் 1948 ஜனவரி 20-ம் தேதியன்று குண்டு ஒன்று வெடித்தது. ராணுவத்தினரின் ஒத்திகை என்று அதை பாபு கருதினார். பிரார்த்தனைக்குப் பிறகு தான் அந்த குண்டு தம்மை ஒழித்துக்கட்டுவதற்காக ஸ்தலத்தில் வைக்கப்பட்டதாகும் என்பதை காந்தி அறிந்தார். அந்த குண்டு வெடித்ததன் விளைவாக காம்பவுண்டுச் சுவற்றில் ஒரு பகுதி தகர்த்தெறியப்பட்டிருந்தது.

மறுநாள் பிரார்த்தனைக் கூட்டத்தில் அச்சம்பவம் பற்றி பாபு விரித்துரைத்தார், அந்த குண்டை எறிந்த இளைஞன் ஒருவனைப் போலீஸார் கைது செய்திருந்தனர். தவறான வழியில் இட்டுச்செல்லப்பட்டிருந்த அவ்விளைஞன் பாபுவை ஹிந்துமதத்தின் எதிரியாகக் கருதி அந்த குண்டை வீசியிருந்தான். ஆனால் ஹிந்து மதத்தைக் காப்பதற்கு அது முறையான வழியன்று என்று பாபு கருதினார்.

அந்த இளைஞனுக்குத் தொல்லை கொடுக்கவேண்டாம் என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரலிடம் பாபு கூறியிருந்தார். அவன் மனதை மாற்றுவதற்கு அவர்கள் முயலவேண்டும் என்றும் அவர் கூறினார்.

முறையான மார்க்கத்தை மேற்கொள்ள அவனைத் தூண்டித்திருத்தவேண்டும் என்றும் அவர் தெரிவித்தார். அவ்விளைஞனும், அவனைத் தவறான வழியில் இட்டுச் சென்றவர்களும், தங்களது தவற்றையுணர்ந்து திருந்துவார்கள். அவர்களது செயல் ஹிந்து மதத்துக்கும், நாட்டுக்கும் இழைக்கப்பட்ட ஒரு தீங்குமிக்கதொரு காரியமாகும் என்றும் அவர் கூறினார்.

அவ்விளைஞன்பால் கோபமுறவேண்டாம் என்றும் பாபு மக்களைக் கேட்டுக்கொண்டார். தான் தவறான ஒரு காரியத்தைச் செய்கிறோம் என்று அவன் அறியவில்லை. அவர்கள் கோபமுறுவதற்கு மாறாக அவன்பால் அனுதாபம் காட்டவேண்டும் என்றும் அவர்களை அவர்கேட்டுக் கொண்டார். இதே போன்ற உணர்ச்சியைத்தான் பாபு எப்பொழுதும் காட்டிவந்தார். "பரமண்டலத்திலிருக்கும் பிதாவே, அவர்களை மன்னித்துவிடுங்கள்; தாம் என்ன செய்கிறோம் என்பதை அவர்கள் உணரவில்லை" என்ற பைபிளின் வாக்கியமே அவருக்குத் தாரக மந்திரமாக இருந்து வந்தது.



# 47. மனிதர்கள் அனைவரும் சகோதரர்களே

பாபு பாலகனாக இருந்த காலத்தில், அவரது அன்னை புத்லிபாய் அவரை இறைவழிபாட்டு ஸ்தலங்கள் அனைத்துக்கும் அழைத்துச் செல்வது வழக்கம். விஷ்ணு கோயில், சிவாலயம், ஜைனர் கோயில், முஸ்லிம் பக்கிரிகளின் சமாதிஸ்தலம் ஆகிய சகலவிடங்களுக்கும் அவரை அழைத்துச் செல்வார்.

ராஜ்கோட்டில், காபா காந்தியின் இல்லத்துக்கு பல மதங்களைச் சேர்ந்தவர்கள் வந்து செல்வது வழக்கம். ஹிந்து பண்டிதர்கள், ஜைன முனிகள், முஸ்லிம் முல்லாக்கள், பார்ஸி குருக்கள் ஆகியோரிடையேயான விவாதங்களுக்குத் தமது இல்லத்தில் ஏற்பாடு செய்வது காபாகாந்தியின் பழக்கமாக இருந்து வந்தது. இளம் பாலகன் மோஹன் தனது தந்தையின் கால்களைப் பிடித்துவிட்டுக் கொண்டிருக்கையில் அத்தகைய விவாதங்களை உன்னிப்புடன் கேட்டு இன்புறுவதும் வழக்கமாக இருந்து வந்தது. இவ்விவாதங்களின் பலனாக மதங்கள் அனைத்தையும் சரிசமமாக பாவித்து வரவேண்டியது பற்றி மோஹன் கற்றுணர்ந்தான்.

வெவ்வேறு மதங்கள், பகவானை அணுகுவதற்கான வெவ்வேறு பாதைகளாகவே பாபுவின் கண்களுக்குத் தோன்றியது. மதங்கள் அனைத்தின் ஆத்மா ஒன்றே என்பதை பாபு அறிந்துணர்ந்து, அவ்வாறே எடுத்துக் கூறியும் வந்தார்.

தென்னாப்பிரிக்காவில் அமையப்பெற்ற டால்ஸ்டாய் பண்ணையில் வெவ்வேறு மதங்களைக் கடைப்பிடித்துவந்த குடும்பங்கள் வசித்துவந்தன. அவர்களிடையே பரஸ்பர நல்லுணர்வு நிலவிவந்ததுடன் அவர்களது மத சம்பிரதாயங்களைக் கடைப்பிடித்து வருவதிலும் ஒரு சுமுகமான சூழ்நிலையும் காணப்பட்டுவந்தது. ரம்ஜான் நோன்புக்காலத்தின்போது ஹிந்துப் பையன்கள் தங்களது முஸ்லிம் தோழர்கள் அவர்களது காலை மாலை உணவை உரிய நேரத்திலும், சீக்கிரமாகப் பெறுவதற்கும் உதவி யளித்துவந்தனர். தங்களது முஸ்லிம் தோழர்களுடன் கலந்துறவாடுவதற்காக, ஹிந்துப் பையன்களும் மாலையில் ஒருமுறை மட்டிலுமே உணவு உண்டு வந்தனர்

பாபு 1947-ம் ஆண்டில், நோவாகனி ஜில்லாவில் கால்நடையாக சுற்றுப்பயணமொன்றை மேற்கொண்டு வந்த காலத்தில் ஒரு நாள், அவர் தாம்பூர் என்ற கிராமமொன்றில் ஓய்வு பெறும் பொருட்டுத் தங்கினார். அக்கிராமத்தைச் சேர்ந்தவர் ஒருவர் அண்மையில் இருந்த மரத்தின் கிளைகளைக்காட்டி “பாருங்கள் பாபு இந்த மரத்தில் இரு விதமான இலைகள் உள்ளன. இது ஆச்சரியமாக இல்லையா?” என்று கேட்டார். பாபு தலையை அசைத்து புன்னகை புரிந்துவிட்டு, “அதில் ஆச்சரியப் படுவதற்கொன்றுமே இல்லையே. அவை ஒரேமண்ணைச் சேர்ந்த குழந்தைகளான ‘ஹிந்துக்கள் முஸ்லிம்கள்’ போன்ற, ஒரே மரத்தைச் சேர்ந்த இரு வகைப்பட்ட இலைகளாக உள்ளன என்று தான கூறவேண்டும். அதே மரத்தில் ஒன்றுக்கொன்று அடுத்தடுத்ததாக இலைகள் தழைத்தோங்குவதை நீங்கள் காணவில்லையா? ஒரே மரத்தில் வளர்ந்து வருகிற அவ்விலைகள், தங்களைப் போன்றே, நாமும் ஒரே மண்ணைச்

சேர்ந்த சகோதரர்களாக வாழ்ந்து வரவேண்டும் என்று நமக்கு எடுத்துக் கூறுவது போன்று உள்ளது'' என்று அவர் கூறினர்.

ஒவ்வொரு ஹிந்துவும் பின்னும் மேம்பாடுடைத்த ஹிந்துவாகவும். ஒவ்வொரு முஸ்லிமும் பின்னும் சிறப்பானதொரு முஸ்லிம் ஆகவும், ஒவ்வொரு கிறிஸ்துவரும் பின்னும் சீரியவகையிலானதொரு கிறிஸ்துவராகவும் உயரவேண்டும் என்று விரும்பி வந்தார். அவரவர் மதமே அவரவர்களுக்குச் சிறந்ததாகும் என்றும், அவர்களைப் பின்னும் மேம்பாடு அடையச் செய்வதற்கு அவை பெரிதும் உதவும் என்றும் அவர் கூறிவந்தார்.

அனைவரும் தத்தம் மதத்தில் காணப்படுகிற சிறப்பான அம்சங்களைக் கடைப்பிடிததுவருவதுடன், இதர மதங்களிடத்தும் அவற்றைப் பின்பற்றி வருபவர்களிடத்தும் ஒருப்போன்ற மதிப்பும் நல்லுணர்வும் கொண்டுவரவேண்டும்

நாம் எல்லோரும் முதலில் இந்தியர்கள் ; பிற்பட்டுதான் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்துவர்கள் முதலியோர் ஆவோம் ; நாம் அனைவரும் இந்தியாவைச் சேர்ந்தவர்கள் : இந்தியா நம் அனைவருக்கும் சொந்தமானது ஆகும்.

"ஏனெனில் மக்கள் அனைவரும் சகோதரர்கள்."

—:O:-

# 48. வருங்கால உலகத்தின் மேம்பாடு

உலகத்தின் மேம்பாட்டிலும் அதன் வருங்கால வளவாழ்வு பற்றியும் பாபு சிந்தனை செலுத்தி வந்தார். அவருடைய சிந்தனைகளில் சில இங்கு தரப்பட்டுள்ளன.

"நம்முடைய உலகம் பலாத்காரத்தைக் கொண்டதாகவே எப்பொழுதும் இருந்துவருமா? வறுமை, பஞ்சம், துன்பம் அனைத்தும் முடிவு எதுவும் இன்றி உலகத்தில் நீடித்துவருமா?'

"மத நம்பிக்கையில் பின்னும் உறுதிப்பாடும் பரவலும் ஏற்படுமா? அல்லது உலகம் கடவுள் அற்றதாக இருக்குமா?"

"சமுதாயத்தில் மாறுதல் ஒன்றைக் காணவேண்டின் அம்மாறுதலுக்கு எவ்வாறு வகை செய்யவேண்டும்? யுத்தத்தின் முடிவிலா? புரட்சியொன்றின் வாயிலாகவா? அல்லது சமாதான முறையில் அது சாத்தியம் ஆகுமா?

"வருங்காலத்திய உலகம் அஹிம்சைத் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட சமுதாயமாக அமையும்; அவ்வாறே அது அமையப்பெறவேண்டியதும் இன்றியமையாததாகும். இதுவே முதலாவது சட்டமும் ஆகும்; அதிலிருந்தே இதர நலன்கள் தொடரும்."

"இதுமிகவும் தொலைவில் உள்ளதொரு குறிக்கோளாகக் காணப்படலாம். அனுபவ சாத்தியமற்ற கற்பனை உலகத்துக்கு வழிவகுப்பதாகக்கூடத் தோன்

றலாம். ஆனால் அது உண்மையில் சாத்தியமானதே. அதற்காக இங்கேயே, இப்பொழுதே பாடுபட்டு வகை காணுவதும் சாத்தியமேயாகும்.

"தனிப்பட்டவர்கள், கோஷ்டிகள், நாடுகள் ஆகிய பிரிவினர் அனைத்தும் அன்பின் வழியான அஹிம்ஸா மார்க்கத்தையே கடைப்பிடித்துவரவேண்டும்."

அவ்வாறு ஏற்பட்டால் வருங்கால உலகத்தில் யுத்தமோ, புரட்சியோ, அகங்காரமோ எதுவும் இராது என்று நம்புகிறேன்."

"அத்தகைய உலகத்தில் கடவுள் நம்பிக்கை முன்னைக்காட்டிலும் அதிக அளவிலும் அதிக தீர்க்கமாகவும் இருக்கும். உலகத்தின் உயிர்நிலை மதத்தையே பெரிதும் பொறுத்ததாக இருக்கும். அதைக்களைய முற்படும் முயற்சிகள் அனைத்தும் வியர்த்தமாகிவிடும்."

"உலக சமஷ்டியையும், ஒரே உலகத்துக்கான அமைப்பையும் அஹிம்சையை அஸ்திவாரமாகக் கொண்டுதான் நிர்மாணிக்க முடியும்: உலக விவகாரங்களில் பலாத்காரத்தை முழுமையாகக் கைவிடவேண்டியிருக்கும்.





